ஸ்ரீமத் தத்துவராய சுவாமிகள்

அருளிய

# பிரம கீதை

மூலமும் உரையும்



சீர்வளர்சீர் முத்துராமலிங்க ஆண்டவர்

கோவிலூர் மடாலயம்

கோவிலூர் - 630307

தவத்திரு தத்துவராய சுவாமிகள் அருளிய

# பிரமகீதை

## மூலமும் உரையும்


உரையாசிரியர்கள்

**கோவிலூர் மரபு வேதாந்த மாணவர்கள்**

**திரு. சொ. வள்ளியப்பன்**

முன்னாள் துணைத் தலைமையாசிரியர், A.C. மேல்நிலைப்பள்ளி, பள்ளத்தூர்

**திரு. நீ. இரவிச்சந்திரன்**

தமிழாசிரியர், ஸ்ரீ மீனாட்சி சுந்தரேசுவரர் மேல்நிலைப்பள்ளி, காரைக்குடி


கோவிலூர் ஆதீனம்

**ஸ்ரீலஸ்ரீ மெய்யப்ப ஞானதேசிக சுவாமி**களின்

அருளாணையின் வண்ணம் இந்நூல் வெளியிடப்படுகிறது.


**கோவிலூர் மடாலயம்**

கோவிலூர் 630 307.

(காரைக்குடி அருகில்)

போன்: 04565 – 238783

E-mail: koviloormutt@gmail.com

| | | |
|---|---|---|
| முதற் பதிப்பு | : | செப்டம்பர் 2021 |
| பக்கங்கள் | : | 152 |
| விலை | : | ₹130/– |

*நிர்வாக அலுவலகம்*
**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் – 630 307.
(காரைக்குடி அருகில்)
தொலைபேசி: 04565 – 238783
E-mail: koviloormutt@gmail.com

*சென்னையில் கிடைக்குமிடம்*
**கோவிலூர் மடாலயம்**
52, குப்பையா தெரு,
மேற்கு மாம்பலம், சென்னை–33.
செல்: 9840358301

**கலாக்ஷேத்ரா அச்சகம்**
கோவிலூர் – 630 307.

# ஆசியுரை

## சீர் வளர் சீர் மெய்யப்பஞான தேசிக சுவாமிகள்

நம்முடைய சற்குருநாதர் நாச்சியப்ப சுவாமிகளின் அரசாட்சிக் காலத்தில் வேதாந்த மரபு நூல்கள் பதினாறில் பனிரெண்டு நூல்களை மொத்தம் நான்கு தொகுதிகளாக வெளியிட்டார்கள். (முதல் பாகம் - நாநா ஜீவவாதக் கட்டளை, கீதாசாரத் தாலாட்டு, சசிவன்ன போதம்; இரண்டாம் பாகம் - மகாராஜா துறவு, வைராக்கிய சதகம், வைராக்கிய தீபம்; மூன்றாம் பாகம் - இலட்சணா விருத்தி, வேதாந்த சூடாமணி, கைவல்ய நவநீதம்; நான்காவது பாகம் - விவேக சூடாமணி, அஞ்ஞவதைப் பரணி, ஈசுவர கீதை) நாம் பட்டம் ஏற்றுக் கொண்ட பின் 2014 ஆம் ஆண்டு பகவத் கீதை, 2020 ஆம் ஆண்டு பஞ்சதசி ஆகிய இரு நூல்களை வெளியிட்டோம்.

இப்பொழுது பதினான்காவது நூலான **பிரம கீதையும்** பதினாறாவது நூலான **ஞான வாசிட்டம்** நூலும் வெளியிடுகிறோம். கோவிலூர்த் திருமடத்திலே வேதாந்தப் பாடத் திட்டத்தின் படியாக இந்த பிரம கீதை, பகவத் கீதைக்கு முன்னதாக வெளியிடப்பட்டிருக்க வேண்டும். பிரம கீதையினுடைய உரை எழுதுவது காலதாமதம் ஏற்பட்ட காரணத்தினால் பதினைந்தாவது நூலான பகவத்கீதையை முன்னதாக வெளியிட்டுள்ளோம். இந்த வரிசை மாற்றத்தைத் திருமடத்தின் மாணாக்கர்கள், முமூட்சுகள், அன்பர்கள் பொறுத்துக் கொள்ள வேண்டுகிறோம்.

பகவத் கீதை, ஈசுவர கீதை, பிரம கீதை மூன்றும் கோவிலூர் மடத்தில் கீதாத்திரயம் என்று அழைக்கப்படுகின்றன. முப்பெரும் கடவுளர் - திருமால் உபதேசம் பகவத் கீதை, சிவபெருமான் உபதேசம் ஈசுவர கீதை, பிரம்மா உபதேசம் பிரமகீதை. இந்த நூலிலும் அனைத்து வேதாந்தத் தத்துவங்களும் ஒரு மனிதன் நல்வழியில் வாழ்வினை நடத்திப் பரம்பொருளை உணர்வதற்கு வேண்டிய நெறிமுறைகள் அனைத்தையும் உரைக்கின்ற நூலாகும். இந்நூல் உபநிஷத்துக்களின் சாரமாகும். எனவே இதனைத் தெளிவான முறையில் அனைத்து முமூட்சுகளும் அறிய வேண்டும், உணர வேண்டும். இந்தப் பிரமகீதை நம் திருமடத்துக் குருமார்களால் வணங்கிப் போற்றப்படுகின்ற ஸ்ரீமத் தத்துவராய சுவாமிகளால் இயற்றப்பட்டது. முற்காலத்தில் சில உரைகள் இந்நூலுக்கு எழுதப்பட்டுள்ளன. இப்பொழுது கிடைக்கப் பெறுகின்ற தெளிந்த உரைகள் இரண்டில், ஒன்று நெரூர் சதாசிவ பிரம்மேந்திராள் மடத்தில் மடாதிபதியாக இருந்து மறைந்த ஸ்ரீமத் பிரஹ்மானந்த சுவாமிகள் உரையும், இரண்டு அரிமளம் கிராமத்தில் சமாதிகொண்டு அருள்பாலித்து வரும் கோடகநல்லூர் சுந்தர சுவாமிகள் உரையும் ஆகும். இது இரண்டும் மணிப்பிரவாளச் சொற்கள் பல கலந்து உள்ளன. மேலும் எளிய தெளிவான முறையிலே வேதாந்தக் கருத்துகளைப் புரிந்து கொள்ளத் தக்க நல்ல உரை வேண்டும் என்று கருதியபடியால் இப்பொழுது ஒரு உரை எழுதி வெளியிடப்படுகிறது.

இந்த நூல் ஆக்கத்திலும் பொருள் எழுதி உதவுவதிலும் பலருடைய உழைப்பு ஈடுபடுத்தப் பெற்றுள்ளது. குறிப்பாக வேதாந்த மாணாக்கர்கள் சொ.வள்ளியப்பன் அவர்களும், நீ.இரவிச்சந்திரன் அவர்களும் இந்தத் தெளிந்த உரையை எழுதி நமக்கு அளித்திருக்கிறார்கள். அவர்கள் இருவருக்கும் நன்றிகள், பாராட்டுகள், ஆசீர்வாதங்கள். அவர்கள் இருவரும் பல்லாண்டு, பல்லாண்டு நலமோடும், வளமோடும் வாழ்ந்து தமிழுக்கும் வேதாந்த சாஸ்திரங்களுக்கும் மேலும் பல தொண்டுகள் புரிந்து குருவருளும், திருவருளும் பெற்று உயர என்றும் நம்முடைய மனமார்ந்த ஆசீர்வாதங்கள்.

இந்த நூல் வெளிவர உதவிய சொர்ணம் சுவாமி, முல்லை மு.பழநி, திருமதி. ஆனந்தலட்சுமி, அச்சிட்ட அன்பர்கள் அனைவருக்கும் நம்முடைய நன்றிகள், வாழ்த்துகள், ஆசீர்வாதங்கள்.

இந்த வேதாந்த சாஸ்திரங்கள் வெளிவருவதற்கு எல்லா வகையிலும் உதவிய அனைத்து நல் உள்ளங்களுக்கும் நம்முடைய குருமுதல்வர் திருவடி சிந்தித்து வாழ்த்துகிறோம்.

*ஆசீர்வாதங்கள்*

**ஸ்ரீ சற்குருநாதன் துணை**

**செப்டம்பர் 2021**

# உள்ளே

# கோவிலூர் மடாலய வெளியீடுகள்

| | ரூ. பை. |
|---|---|
| **சிலப்பதிகாரம் மூலமும் உரையும் - மதுரைக்காண்டம்**<br>உரையாசிரியர்: **முனைவர் கரு. முத்தய்யா** | 300.00 |
| **சிலப்பதிகாரம் மூலமும் உரையும் - புகார்க்காண்டம்**<br>உரையாசிரியர்: **முனைவர் கரு. முத்தய்யா** | 300.00 |
| **சிலப்பதிகாரம் மூலமும் உரையும் - வஞ்சிக்காண்டம்**<br>உரையாசிரியர்: **முனைவர் கரு. முத்தய்யா** | 250.00 |
| **மணிமேகலை மூலமும் உரையும் முதல் பாகம்**<br>உரையாசிரியர்: **முனைவர் கரு. முத்தய்யா** | 350.00 |
| **மணிமேகலை மூலமும் உரையும் இரண்டாம் பாகம்**<br>உரையாசிரியர்: **முனைவர் கரு. முத்தய்யா** | 350.00 |
| ஸ்ரீமத் வீரை. ஆளவந்தார் அருளிய<br>**ஞானவாசிட்டம் மூலமும் உரையும்** | 800.00 |
| **திருமூலர் அருளிய திருமந்திரம்**<br>மூல பாட ஆய்வுப் பதிப்பு – மூன்று பகுதிகள்<br>பதிப்பாசிரியர் – டாக்டர் சுப. அண்ணாமலை | 750.00 |
| **சிவபூஜா விதியும் விளக்கங்களும் (படங்களுடன்)**<br>சிவஸ்ரீ தத்புருஷ தேசிகர் | 200.00 |
| **கோவிலூர் மரபு வேதாந்த நூல்கள் - முதல் பாகம்**<br>நாநா சீவ வாதக் கட்டளை – கீதாசாரத் தாலாட்டு<br>சசிவன்ன போதம் ஆகிய மூன்றும் அடங்கியது. | 50.00 |
| **கோவிலூர்மரபு வேதாந்த நூல்கள் - இரண்டாம் பாகம்**<br>மகாராஜா துறவு – வைராக்கிய சதகம் –<br>வைராக்கிய தீபம் ஆகிய மூன்றும் அடங்கியது. | 100.00 |
| **கோவிலூர் மரபு வேதாந்த நூல்கள்- மூன்றாம் பாகம்**<br>இலட்சணா விருத்தி – வேதாந்த சூடாமணி –<br>கைவல்ய நவநீதம் ஆகிய மூன்றும் அடங்கியது. | 200.00 |
| **கோவிலூர் மரபு வேதாந்த நூல்கள்- நான்காம் பாகம்**<br>விவேக சூடாமணி – அஞ்ஞவதைப் பரணி,<br>ஈசுவரகீதை ஆகிய மூன்றும் அடங்கியது. | 300.00 |

## தவத்திரு தத்துவராய சுவாமிகள் அருளிய

# பிரமகீதை

## மூலமும் உரையும்

---

### பாயிரம்

இரவியும் மதியும் வானும் வாயுவும் அனலும் அப்பும்
உரவிய மண்ணும் அற்றை உணர்பவன் தானும் ஆகி
பரவிடும் கரணம் பன்நான்கு ஆயும் அன்றாயும் நின்றே
உரை மனம் இறந்து உளோங்கும் ஒளியினை வணங்கல் செய்வாம்.

**பொழிப்புரை:** *சூரியனும் சந்திரனும் ஆகாயமும் வாயுவும் தீயும் திண்மையான நிலமும் முற்கூறியவைகளை அறியும் ஞானமுடைய சகுண நிற்குணப் பொருளுமாகி, தத்தம் விஷயங்களில் விரிந்து நிற்கின்ற பதினான்கு கரணங்களாகவும் அவை அனைத்தும் அல்லாததாகியும், இருந்த வண்ணம் இருந்தே வாக்குக்கு எட்டாததாகியும் இதயக் குகையில் ஒளிர்கின்ற பரமாத்மாவை வழிபாடு செய்வோம்.*

உ

ஓம் தத் சத்.

# பிரமகீதை

## மூலமும் உரையும்

### முதல் அத்தியாயம்

# தேவர்கள் பிரமாவைத் தரிசித்து வேதார்த்தம் வினவும் அத்தியாயம்

சூதனாம் முனியை நோக்கித் தொல்லைமா முனிவர் சொல்வார்
மாதவ வினவிற்று எல்லாம் வகுத்துநீ தொகுத்துச் சொன்னாய்
ஆதிநான் முகத்தோன் கீதை அறிய ஆதரித்தோம் இன்று என்று
ஓதி மாமுனிவர் எல்லாம் மீளவும் உரைக்கல் உற்றார். 1

**பொழிப்புரை:** *பழமையான பெருமையுடைய முனிவர்கள் சூதன் என்னும் பெயரை உடைய முனிவரைப் பார்த்துச் சொல்வார்கள்: சிறந்த தவத்தை உடையவரே! நாங்கள் கேட்ட வினாவுக்கு எல்லாம் நீர் விரித்தும் சுருக்கியும் பதில் உரைத்தும் அருளினீர்கள். ஆதியாய் உள்ள நான்கு முகத்தை உடைய பிரம தேவனால் சொல்லப்பட்ட கீதையை இன்று தெரிந்து கொள்ள மிகவும் விருப்பம் உடையவர்களாக இருக்கிறோம் எனக்கூறி பெருமை மிக்க முனிவர்கள் அனைவரும் மீண்டும் சொல்லத் தொடங்கினார்கள்.*

வேதநூல் தெரிந்தோ னாலே விஞ்சையும் விளங்கப் பெற்றாய்
ஆதலால் யாதும் உன்னால் அறிய லாகாதது இல்லை
மேதையால் மிக்காய் எங்கள் மேல் உனக்கு அன்பு உண்டாகில்
ஓதுவாய் போதோன் சொன்ன உபநிடப் பொருளை என்றார். 2

**பொழிப்புரை:** *வேத நூல்களை ஆராய்ந்து அறிந்தோன் ஆகிய வியாசரிடம் பயின்றமையால் மேலான ஞானத்தை விளங்க நன்கு உணர்ந்தாய். ஆகையால் உனக்குத் தெரியாத விஷயம் யாதொன்றும் இல்லை. அறிவில் சிறந்த பிரம்மஞானியே எங்களிடத்தில் உனக்கு அன்பு இருக்குமானால் பிரமதேவன் உபதேசித்த உபநிடத அர்த்தத்தை எங்களுக்குச் சொல்லி அருள்வீராக என்றனர்.*

இன்ன பரிசே முனிவரெல்லாம் இயம்பக் கேட்டுஅங்கு இமையவர்கள்
முன்னம் ஒருநாள் மறைஓதி முடிந்த பொருள் ஓர்ந்து உணராமல்
அன்ன மிசையான் தனைக் கேட்ப அண்டத் தவர்களுக்கு அவனருளால்
சொன்ன பரிசே கேளும் எனச் சூதன்சொல்லத் தொடங்கினனால். 3

**பொழிப்புரை:** *முனிவரெல்லாம் இவ்வாறு கூறியதைக் கேட்டு சூதமாமுனிவர், முன்பு ஒரு காலத்தில் தேவலோக வாசிகளான தேவர்கள் நான்கு வேதங்களையும் ஓதி, அவ்வேதங்களின் பொருளை ஆராய்ந்து அறிந்து கொள்ள முடியாமல் அன்ன வாகனனான பிரம்மாவைக் கேட்க, அப்பிரம்ம தேவனின் கருணையால் தேவர்களுக்கு இயம்பியவாறே சொல்கிறேன் கேட்பீர்களாக எனக் கூறத் தொடங்கினான்.*

**பண்டு ஒரு கற்பம் தன்னில் பழமறைப் பொருளை எல்லா**
**அண்டரும் கூடி ஆய்ந்து அங்கு அறியலாகாமை யாலே**
**எண்தரும் மாதவத்தை எய்தியே இதனைக் கேட்பப்**
**புண்டரீகத்தில் வாழும் புனிதனை நோக்கிப் போனார். 4**

**பொழிப்புரை:** *முன்னொரு கற்பாந்தரத்தில் எல்லாத் தேவர்களும் கூடி பழம்பெருமை மிக்க வேதாந்தப் பொருளை ஆராய்ந்து அறிய இயலாமையால் மாட்சிமை பொருந்திய தவத்தைச் செய்து இவ்வேதப் பொருளைக் கேட்டு உணரும் பொருட்டு தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரம்ம தேவனைக் கருதிச் சென்றார்கள்.*

**பாவவேர் அறுக்கும் தீர்த்தம் என்று எண்ணப்பட்டன யாவையும் பரப்பித்**
**தேவரோடு இயக்கர் அரக்கர் சித்தர் சாத்தியர்களும் செறிந்து**
**நாவினால் அறியும் அறுவகைப்பட்ட விரதமும் நலம்பெற உடைத்தாய்**
**ஓவிலாது ஒழுகும் அருவிகள் உடைத்தாய் ஒருபொருள் ஒழிவற உடைத்தாய். 5**

**பொழிப்புரை:** *பாவத்தை வேரோடு அறுக்கும் புண்ணிய தீர்த்தங்கள் என்று கருதப்படுகின்ற அனைத்தையும் தன்னிடத்தில் பரப்பி, தேவரோடு அரக்கர்களும் இயக்கர்களும் கந்தர்வர்களும் சித்தர்களும் சாந்தியர்களும் நெருங்கி நாவினால் அறியக் கூடிய அறுசுவைப் பதார்த்தங்களையும் நன்மை பெற உடையதாயும், இடையறாது ஒழுகுகின்ற அருவிகளை உடையதாயும், ஒன்றொழியாமல் சகல பொருள்களையும் உடையதாயும்*

**சகல யோகிகளும் மேவ இனிதான தனிசேர்**
**குகைகள் கோடிபல கூடியுள கோடி பலவாயச்**
**சிகரம் மேவு நவமாமணிகள் சிந்திஉளதாய்**
**நிகரிலாமல் நிகழ் மேருகிரி நீள்முடியின் மேல். 6**

**பொழிப்புரை:** *யோகிகள் அனைவரும் தங்கி இருப்பதற்கு இன்பமாய் உள்ள ஏகாந்தமாய் இருக்கத்தக்க பலகோடி குகைகள் நெருங்கியுள்ள மூலைகள் அநேகம் அமைந்ததாயும், கொடு முடிகளில் பொருந்திய ஒன்பது வகை மணிகள் சிதறப் பெற்றதாயும், ஒப்பில்லாமல் பிரகாசிக்கின்றதாயும் உள்ள மகாமேரு மலையின் உயர்ந்த சிகரத்தின்மேல்.*

**ஐம்பத்திற் றிரட்டி யோசனை நீண்டுஆங்கு அத்தொகை யோசனை அகன்று**
**கம்பநற் கரியை முதல்வரு மிருகக் கணங்களால் ஆகுலம் கணத்துச்**
**செம்பொருள் கொழிக்கும் தீர்த்திகள் உடைத்தாய் திரண்ட புள்ளினங்களும் உடைத்தாய்ப்**
**பைம்பொழில் செழுந்தேன் அருந்திய அறுகால் பறவையின் ஒலியினால் பரம்பி 7**

**பொழிப்புரை:** *நூறு யோசனை நீளம் உள்ளதாகவும் நூறு யோசனை அகலமுடையதாயும், தறியில் கட்டப்படும் யானை முதல் மற்றும் வருகின்ற மிருகங்களின் கூட்டங்களால் ஆரவாரம் உடையதாகவும், செம்பொன் கொழிக்கும் நதிகளை உடையதாகவும், நிறைந்த பறவை இனங்களை உடையதாயும், பசுமையான சோலைகளை உடையதாயும், அச்சோலைகளில் உள்ள மலர்களில் இருக்கும் இனிமையான தேனையும் உண்ட வண்டினங்களின் ஓசையினாலும் நிரம்பப் பெற்று*

இந்து பானு என்று இருவரும் நிலவினோடு இளவெயில் பாரிப்பக்
கொந்து பாய்தரு சோலையின் இன்கிழங்குகாய் கொழுங்கனி வழங்கத்தன்
சந்தன அடவி புகுந்து வண்டுஉலவு தாமரைத் தடம் தோய்ந்து
மந்த மாருதம் திரிதரும் பிரமமா வனம்உளது அதன் கண்ணே. 8

**பொழிப்புரை:** *சூரியன் சந்திரன் என்கின்ற இருவரும் நிலா வெளிச்சத்தையும் இளவெயிலையும் வீச, தேன் பாயப் பெற்ற பூங்கொத்துகளை உடைய சோலைகள் உண்ணுதற்கு இனிய கிழங்குகளையும், காய்களையும், கனிகளையும் கொடுக்க, குளிர்ச்சி பொருந்திய தாமரைத் தடம் தோய்ந்து, சந்தனச் சோலைகளில் புகுந்து வண்டுகள் உலாவுகின்ற தென்றல் காற்றானது வீசுகின்ற பெரிய பிரமவனம் என்னும் ஒரு வனம் அதனிடத்தில் இருக்கிறது.*

வளமாம் அதில் ஒன்பதோடு எண்பது வாசலாகி
இளநாயிறு போல் விளங்கி இலங்கும் ஒள்வாள்
வளைநேமி கொடுஞ்சிலை தண்டு மழுக்கள் வல்லோர்
அளவோத இலாதவர் காப்புடைத்தாகி எங்கும். 9

**பொழிப்புரை:** *வளப்பம் மிகுந்த ஒன்பது மதிலோடு எண்பது வாசல் உடையதாகி பால சூரியனைப் போலப் பிரகாசித்து விளங்குகின்ற அழகு பொருந்திய வாளாயுதம், சங்கு, சக்கரம், கொடிய வில், தண்டாயுதம், மழுவாயுதம் முதலியவற்றில் வல்லமை உடையவர்களீல் அளவு சொல்லக் கூடாதவர்களால் எவ்விடத்தும் காக்கப் பட்டதாகி.*

பூரண கும்பம் எங்கணும் நிறைத்துப் பொன்திகழ் நித்திலம் புணர்ந்த
தோரணம் உயர்த்தித் தூய்மலர் துதைந்த சுகந்தமாலைகள் பலதூக்கி
ஏரணி தீபம் ஏற்றிளம் மருங்கும் ஏழிசை யாழில் எங்கெங்கும்
வாரணி கொங்கை மடந்தையர் பாடும் மாடமாளிகை வரம்பிலதாய். 10

**பொழிப்புரை:** *எவ்விடத்தும் பூரண கும்பங்கள் நிறைந்து பொன் கம்பியில் கோக்கப்பட்டு விளங்குகின்ற முத்து மாலைகள் தொங்கப் பெற்ற தோரணங்கள் உயரக் கட்டி, பரிசுத்தமாகிய மலர்களால் தொடுக்கப் பெற்ற நல்ல வாசனையுடைய பல மாலைகள் தூக்கி, எவ்விடங்களிலும் அழகு பொருந்திய விளக்குகளை ஏற்றி, எல்லா இடங்களிலும் ஏழிசையோடு கூடிய வீணையைப் போல கச்சு அணிந்த தனங்களோடு கூடிய மாதர்கள் பாடுகின்ற மண்டபங்களோடு கூடிய அளவற்ற மனைகள் உள்ளதாகி.*

சித்திரம் அமைத்த மித்தி கோடிகளால் சீர்பெற விளங்கி மாணிக்க
உத்திரம் வயிரப் போதிகை பவள ஒளிமணித் தூண்நிரை பொதிந்து
நித்திலத் தாமம் எங்கணும் தூக்கி நித்தில விதானமே எங்கும்
வித்தரித்து ஓங்கிய வியநெடுங் கொடிகள் விண்ணளவு எறிந்துமீண்டுளதால்
11

**பொழிப்புரை:** *சித்திரங்கள் எழுதப் பெற்றுள்ள பல சுவர்களினாலே சிறப்புற விளங்கி, மாணிக்கத்தால் செய்யப்பட்ட உத்திரங்களும், வச்சிரத்தால் செய்யப்பட்ட தாழ்வாரங்களும், பவளத்தால் ஆக்கப்பெற்று அழகுடன் விளங்கும் தூண் வரிசைகளும் நெருங்கி, எவ்விடத்தும் முத்து மாலைகள் தொங்க விட்டு, எவ்விடத்திலும் முத்தினால் செய்யப்பட்ட மேற்கட்டிகளே விரித்து உயர்ந்து, பெருமை வாய்ந்த நீண்ட கொடிகள் ஆகாயமளவும் திரும்புகின்றதாகி*

வெடிபட உச்ச மந்த மத்திமமாய் விளங்கு காகள ஒலி ஒருசார்
இடிபடு முரச முழக்கொழி ஒருசார் இயம்பு வாச்சிய ஒலி ஒருசார்
வடிவுடை மகளிர் கூத்தொலி ஒருசார் மறையவர் ஓத்தொலி ஒருசார்
முடிவறு மிருதி புராணம் ஆகமங்கள் மொகுமொகு என்று எழும் ஒலி ஒருசார்
12

**பொழிப்புரை:** *உயர்வாயும் மிருதுவாயும் மத்தியமாயும் விளங்குகின்ற எக்காளத்தின் வாத்தியத்தினுடைய ஓசை ஒரு பக்கத்தில் முழங்கவும், முரசம் ஒலிக்கும் ஓசை ஒரு பக்கத்திலும் வாத்தியங்களினுடைய சத்தம் ஒரு பக்கத்திலும், அழகு பொருந்திய பெண்களின் நடன ஒலியானது ஒரு பக்கத்திலும், முடிவில்லாத ஸ்மிருதிகளும் புராணங்களும் ஆகமங்களும் மொகு மொகு என்னும் தொனியுடன் கிளம்புகின்ற ஓசை ஒரு பக்கத்திலும்.*

மேவிய சகல ஆகமங்களின் பொருளும் விருப்புடன் ஆய்பவர் ஒருசார்
காவியம் என்னும் கனியினை நுகர்ந்து களித்திடும் உளத்தவர் ஒருசார்
ஆவியோடு ஆக்கை உறஅறி இருநூல் அங்கத்து யோகியர் ஒருசார்
ஓவியம் போல விருந்துணர் விறந்த உணர்வு கொண்டு உறங்கினர் ஒருசார்
13

**பொழிப்புரை:** *பொருந்திய சகல ஆகமங்களினுடைய அர்த்தங்களையும் ஆசையுடன் ஆராய்ந்து கொண்டிருப்பவர் ஒரு பக்கத்திலும், காவியம் என்று சொல்லப்படும் பழத்தை உண்டு ஆனந்தம் அடைகின்ற உள்ளத்தை உடையவர்கள் ஒரு பக்கத்திலும், உயிரோடு உடலானது அழியாமல் இருக்கும்படி உணருகின்ற அஷ்டாங்கத்தை உடைய யோகிகள் ஒரு பக்கத்திலும், சித்திரம் போல அசைவற இருந்து விருத்தி ஞானம் இல்லாத சொரூப ஞானத்தை அடைந்து சமாதி செய்கின்றவர்கள் ஒரு பக்கத்திலும்.*

மத்தநற் களிறும் வயிரநல் தேரும் வாசியும் வரம்பிலவாகி
அத்திரத்தாலும் சத்திரத்தாலும் அளவறு வீரர்காப்பு உடைத்தாய்
மெய்த்தவர்க்கு எளிதாய் அல்லவர்க்கு அரிதாய் வேண்டிய பொருள் எல்லாம் ஈண்டி
இத்தகைத் தான இடத்தில் ஆயிரக்கால் இலங்கிய இரத்ன மண்டபத்தே. 14

**பொழிப்புரை:** *மதநீரைப் பெருக்குகின்ற நல்ல யானைகளும், வயிரத்தால் செய்யப்பட்ட அழகிய ரதங்களும், குதிரைகளும் கணக்கற்றனவாகி பாணங்களாலும் கைவிடாப் படைகளாலும் அளவற்ற வீரர்களால் காக்கப்பட்டதாகி உண்மையான தவத்தை உடையவர்க்கு அடைவதற்குச் சுலபமாயும், அவத்தினை உடையவர்க்கு அடைதற்கு முடியாததும் ஆகி இச்சித்த பதார்த்தங்கள் அனைத்தும் நெருங்கி இவ்வளவு பெருமை வாய்ந்த அவ்விடத்தில் ஆயிரம் கால்கள் பொருந்திய இரத்தின மண்டபத்திலே.*

கற்பகத் தருவும் மகர தோரணமும் கவின்பெற அமைத்துள தாகி
அற்புதமான அரிமுகத்து உறுகால் ஆசனத்து அம்பஞ்சுஅணைமேல்
சொற்பத வடிவாம் தோகையோடு எல்லாப் பொருளுமாய் விளங்கிடத் தோன்றல்
உற்பவம் அறுப்பானாக வீற்றிருந்தான் உம்பரும் கோயிலுள் புகுந்தார் 15

**பொழிப்புரை:** *கற்பகத் தருக்களையும், மகர தோரணங்களையும், அழகு அமையப் பொருந்தி இருக்கின்றதாயும், அதிசயிக்கத்தக்க சிங்க முகத்தையும் அதற்குரிய கால்களையும் கொண்டுள்ள ஆசனத்தில் அழகிய பஞ்சனை மீது சொல்லும் பொருளுமே சொரூபமாக உடைய கலைமகளோடு தானே சகல பொருள்களுமாய் விளங்கிய பிரம்மா, தன்னை வந்தடையும் ஆன்மாக்களின் பிறப்பை ஒழிக்கும் பொருட்டு எழுந்தருளி இருந்தான். அச்சமயத்தில் தேவர்களும் அந்தக் கோயிலுள்ளே சேர்ந்தார்கள்.*

ஆரம்மணி குண்டலமோடு ஆழிகடகம் கே
யூரம் அபிடேக முதல் ஒப்பனைகளும் செய்து
ஆரம் அகில் நாவி பனிநீரோடு அளவும்கற்
பூரமது கொண்டு திருமேனி நனிபூசி. 16

**பொழிப்புரை:** *மணியாரங்கள் குண்டலங்களோடு, மோதிரங்களும், கங்கணங்கங்களும், தோளணிகளும் கிரீட முதலாகிய அலங்காரங்களும் புரிந்து சந்தனமும் அகிற் குழம்பும் கஸ்தூரியும் பனி நீரோடு கலந்த பச்சைக் கற்பூரமும் கொண்டு திருமேனியில் மிகவும் அணிந்து*

நித்தமான தன்ஒளியினால் அனைத்தையும் நிகழ்த்தும் நின்மலனோட
வைத்த செம்பொனிற் றிகழ்தரு மேனியின் மாலிகை பலசாத்தி
உத்தரீயம் வெள்ளெக்கியோபம் திகழ் உதர பந்தனத்தோடு
சுத்தமான வெண்கலிங்கமும் சாத்திநற் சுராசுரர் தொழுதேத்த 17

**பொழிப்புரை:** *நித்தியமாய் விளங்குகின்ற தனது சுயம் பிரகாசத்தால் எல்லாவற்றையும் விளங்கச் செய்கின்ற மலமற்றவனான பிரமன், உருக்கி ஓடவிட்ட செம்பொன்னைப் போல் விளங்குகின்ற அழகான சரீரத்தில் அநேக மாலைகளை அணிந்து கொண்டு மேலாடையும், வெண்மையான பூநூலும் உதர பந்தனத்துடனே விளங்குகின்ற சுத்தமான வெள்ளை உடை தரித்து நல்ல தேவர்களும் அசுரர்களும் வணங்கி வாழ்த்த*

தமத்தை அப்புறம் கடந்து நின்றுஅறிவுறு சான்றதாய் மதனெல்லாம்
அமைத்து ஒருத்தரால் அமைத்திடப்படாது உளஅமூலனாய் இருப்பானை
இமைத்திடப் படா விழியினால் இமையவர் யாவரும் கண்டுஇந்தச்
சுமைக்கு இளைத்தனம் என்பவர் போல்அவன் துணையடிகளில் வீழ்ந்தார்
18

**பொழிப்புரை:** *மாயை என்னும் இருளுக்கு அப்பாலே கடந்து நின்று அறிகின்ற சான்றாகி, அழகை எல்லாம் ஒன்று சேர்த்து, ஒருவராலும் படைக்கப்படாமல் இயற்கையாய் உள்ள, தனக்கு ஒரு காரணமும் இல்லாது இருக்கின்ற பிரமதேவனை, இமைத்திடப்படாத விழியினால் தேவர்கள் அனைவரும் கண்டு, இந்த உடல் சுமையினைத் தாங்குதற்கு இளைத்தோம் என்று சொல்லி அதைக் கீழே போடுகிறவர்கள் போல் அப்பிரம தேவனுடைய துணையடிகளில் வீழ்ந்து வணங்கினார்கள்.*

கஞ்ச நற்பதம் பணிந்தெழுந்து அமலனைக் கண்டுகண் களிகூர்ந்து
மஞ்சு எனச்சொரிதர மயிர்புளகிதம்வர மகிழ்ச்சியி னோடு
நெஞ்ச நெக்குற நிமலராய் அவாவெலாம் நீங்கிநீள் முடிமேலே
அஞ்சலித்த கையினர்களாய் ஆனந்த வாரியில் படிந்தாடி 19

**பொழிப்புரை:** *பிரம்ம தேவனது தாமரை மலர் போன்ற திருவடிகளை வணங்கி எழுந்து நின்று, அமலனைக் கண்டு அவரைச் சேவித்து களிப்படைந்து ஆனந்தக் கண்ணீரானது மேகங்கள் மழை பொழிவது போலச் சொரிய, மயிர்கூச்செறிந்து ஆனந்தத்தோடு மனமானது உருகி ஆசைகள் அனைத்தும் நீங்கியவர்களாய் தலைக்கு மேலே கூப்பிய கையை உடையவராய் ஆனந்த வெள்ளத்தில் மூழ்கிக் கூத்தாடி.*

அழுத்தமிக்க அதிபத்தியால் அவசத்தராய் உள்ள அண்டர்தம்
குழுப்புவிக்கண் விழுந்து மீள எழுந்து தாங்கள் குரல்களும்
தழுத்தழுத்து எமது உற்பவங்கள் தவிர்க்கையே தகவென்று தாம்
வழுத்தலுற்றனர் வல்லவா மறை சொன்னவாறு தம் வாய்மையால் 20

**பொழிப்புரை:** *மிக உறுதியான பத்தியால் மெய் மறந்தவர்களாகி தேவர் கூட்டங்கள் நிலத்தில் வீழ்ந்து வணங்கி மீண்டெழுந்து, சொற்கள் குழற நா தழுதழுக்க எங்களுடைய பிறப்புகளை ஒழித்தலே நீதியென்று தம்மால் முடிந்தவரை வேதத்தில் சொல்லியுள்ளவாறு தங்களுடைய சத்தியமான வாக்கினால் துதித்தல் செய்தனர்.*

பரம ஞானமாம் பாற்கடல் பண்ணிய பரமனே அடிபோற்றி
கரதல ஆமலகத்தின் நேர் பரவெளிகாட்டிடும் கழல் போற்றி
ஒருபராபரம் அன்றிநீ ஒருவனும் ஆகிய ஒளி போற்றி
பிரம நாரண சங்கர போற்றி எம் பெரும நின் பதம் போற்றி 21

**பொழிப்புரை:** *பிரமஞானமாகிய பாற்கடலை உண்டாக்கிய மேலானவனே போற்றி. உள்ளங்கை நெல்லிக் கனிபோல ஏனைய எல்லாப் பொருள்களையும் விளங்கச் செய்கின்ற நின் பாதம் போற்றி. ஓர் உயர்வு தாழ்வு இல்லாமல் நீ ஒருவனும் ஆகிய*

*ஒளியே போற்றி. பிரமனாயும், திருமாலாயும், சங்கரனாயும் இருக்கின்றவனே போற்றி. எங்கள் நாயகனே உன் திருவடிகள் போற்றி.*

அடையநீ அறிந்து ஒருவரால் உன்னை இங்கு அறிவரியாய் போற்றி
தொடையதாம் உலகு அனைத்தையும் தரித்தொரு துவக்கறு சுடர் போற்றி
முடிவும் ஆதியும் கண்டுநீ முதல்முடிவு இன்றிய முதல் போற்றி
வடிவுயாவையும் உடையையாய் உனக்கொரு வடிவிலாதாய் போற்றி 22

**பொழிப்புரை:** *அனைத்தையும் நீ அறிந்து எவராலும் உன்னை அறிதற்கு அரியவனாய இருக்கின்றவனே போற்றி. கோவையான உலகம் அனைத்தையும் தாங்கியும் ஒரு பந்தமும் இல்லாத சுடரே போற்றி. நீ ஆதியும் அந்தமும் பார்த்தும், ஆதியும் அந்தமும் இல்லாதவனே போற்றி. சகல வடிவங்களையும் உடையவனாகி உனக்கு யாதொரு வடிவமும் இல்லாதவனே போற்றி.*

அகிலமாய் அகிலத்துக்கு அதிபனாய் அகிலம் ஒன்றின்றி
நிகழும் ஞானமாம் நிமலனே போற்றிநீ நினைத்திடும் இடமெல்லாம்
முகமதாய் ஒருமுகம் உனக்கின்றியே இருக்கும் நான்முக போற்றி
திகழு முன்னொளியால் திகழ்ந்திலங்கிய சின்மய ஒளி போற்றி 23

**பொழிப்புரை:** *எல்லா உலகுமாய் எல்லா உலகுக்கும் அதிபதியாயும் தனக்கு ஒரு உலகமும் இல்லாமல் விளங்குகின்ற ஞானமுமாயும் மலமற்றவனாயும் உள்ளவனே போற்றி. நீ நினைக்கும் இடங்கள் எல்லாம் முகங்களாய் இருந்தும் உனக்கென ஒரு முகம் இல்லாதவனாய் விளங்குகின்ற உன் ஒளியால் ஓங்கு ஒளியாய்த் திகழுகின்ற ஞான ஒளியே போற்றி.*

வேதம் ஓதிய விமலனே போற்றி வேதாந்த மெய்ப்பொருள் போற்றி
காதுமா பிறவிக் கடல்கடத்து நின்கழலிணைப் புணை போற்றி
சாதலானதும் பிறப்புமற்று இருந்துள சம்புவே கழல் போற்றி
ஏதும் ஆயினாய் போற்றி ஓர் அளவிலா இன்பமே கழல் போற்றி 24

**பொழிப்புரை:** *வேதங்களைச் சொல்லி அருளிய வேத முடிவான மெய்ப்பொருளே போற்றி. துன்பத்தைத் தருகின்ற இப்பிறவிக் கடலினின்றும் கரையேற்றுகின்ற உன் திருவடிகளாகிய தெப்பத்துக்கு போற்றி. பிறப்பும் இறப்பும் இல்லாமல் என்றும் நித்தியமாய் உள்ள சம்புவே உன் திருவடிகள் போற்றி. எல்லாம் தானானவனே போற்றி. அளவற்ற இன்பமாய் இருக்கின்றவனே உன் திருவடி போற்றி.*

தோத்திரம் செயப்படுபவனாய் அத்தோத்திரம் தானாகி
ஏத்தி நிற்பவனாகியே இருந்துள இறைவனே கழல் போற்றி
காத்திரந்தனை எடாவகை மெய்யினைக் காணவே நினைவோர்க்கு
நேத்திரம் கொடுத்து அருளி அங்கு அவர்துயர்நீக்கும் நின்மல போற்றி 25

**பொழிப்புரை:** *துதிக்கப் படுகின்றவனாயும் அத் தோத்திரமாகவும் துதித்து நிற்கின்ற வனாகவே இருக்கின்ற கடவுளே உன் திருவடிகள் போற்றி. உடலை இனி அடையா*

*வண்ணம் உண்மைப் பொருளைக் காணவே நினைக்கின்றவர்களுக்கு ஞானக் கண்ணைக் கொடுத்தருளி அவ்விடத்திலே அவர்களுக்கு உற்றதான துன்பத்தைப் போக்குகின்ற நிர்மலனே போற்றி.*

ஈசனுக்கு அன்பர் ஆனார்க்கு அன்பனாம் இறைவ போற்றி
நாசமற் றிருப்பாய் போற்றி நாரணர்க்கு இனியாய் போற்றி
ஆசையற் றவர்க்கு ஞானம் அருளுவாய் போற்றி அல்லல்
பாசமுற்றவரை வெய்ய பவத்தில் இடும் பகைவ போற்றி 26

**பொழிப்புரை:** *சிவனுக்குத் தொண்டரானவர்களுக்குத் தொண்டனாகிய தேவனே போற்றி. என்றும் அழியாதவனே போற்றி. திருமாலுக்கு இனியவனே போற்றி. ஆசை அற்றவர்க்கு ஞானத்தை அருள்பவனே போற்றி. துன்பமாகிய பாசம் பொருந்தியவர்களைக் கொடியதான பிறவிக் கடலில் தள்ளும் சத்துருவே போற்றி.*

அண்டருக்கு அதிபராலும் அறிந்திடற்கு அரியாய் போற்றி
பண்டுடைப் புவனமெல்லாம் படைத்திடும் பரனே போற்றி
கண்டிடப் படாதே எல்லாம் கண்டிருக்கின்றாய் போற்றி
புண்டரீகத்தில் வாழும் புனிதனே போற்றி போற்றி 27

**பொழிப்புரை:** *தேவர்கட்குத் தலைவர்களாலும் அறிந்திடற்கு அரியவனே போற்றி. பழமையான உலகங்கள் அனைத்தையும் படைத்திடும் பரனே போற்றி. உன்னைக் காண முடியாமல் யாவற்றையும் சாட்சியாக இருந்து பார்த்துக் கொண்டிருப்பவனே போற்றி. தாமரை மலரில் வசிக்கின்ற புனிதமானவனே போற்றி. போற்றி.*

பத்தியால் இமையோர் இங்ஙன் பங்கயத் தவனைப் போற்றி
சுத்த வேதங்கள் ஓதித் துணிந்தமெய்ப் பொருளை எங்கட்கு
அத்தனே அருள்செய் என்ன அவர்கள் ஆதரத்தைக் கண்டே
புத்தியால் போதோன் உண்மைப்பொருளையே புகல லுற்றான் 28

**பொழிப்புரை:** *பக்தியால் தேவர்கள் இவ்வாறு தாமரை மலரில் வசிக்கின்ற பிரமனைத் தாமரை மலரில் வசிக்கின்ற பிரமனைத் தொழுது ஏத்தி, பரிசுத்தமாகிய வேதங்களைச் சொல்லி நிச்சயித்த மெய்ப்பொருளை அடியேங்களுக்கு ஐயனே! சொல்லி அருள்வாயாக என்று வினவுதலும், அத்தேவர்கள் கொண்டுள்ள அன்பைக் கண்டு தாமரை மலரில் வசிக்கின்ற பிரமதேவன் அறிவினால் உண்மைப் பொருளையே சொல்லத் தொடங்கினான்.*

**முதலாவது தேவர்கள் பிரமாவைத் தரிசித்து வேதார்த்தம்**
**வினவும் அத்தியாயம் முற்றிற்று.**

**இரண்டாவது அத்தியாயம்**

# ஐதரேய உபநிடத தாற்பரியம் உரைத்த அத்தியாயம்

மறைகள் ஓதுபொருள் தன்னை எவ்வழியினாலும் எக்கலையும் வல்லராம்
அறிஞராலும் அறியப்படாது அறிய ஆதரிக்கும் மிகு அன்பினீர்
செறிதலால் அதனை நான் விளங்க உரைசெய்வன் ஒன்றுபடு சிந்தையால்
நெறியதாக இது கேண்மின் என்று அயனும் நேர்மையான பொருள் ஓதுவான் 1

**பொழிப்புரை:** *வேதங்களால் சொல்லப்படுகின்றதான மெய்ப்பொருளை, எல்லாக் கலைகளிலும் வல்லவரான அறிஞர்களாலும் வாக்கினால் நேரே கூறி விளக்க முடியாததை நீங்கள் தெரிந்து கொள்ள வேண்டும் என்று அன்புடன் மிக விரும்பிக் கேட்டதற்கினங்க நான் உங்களுக்கு விளங்குமாறு உபதேசிக்கிறேன். நீங்களும் இதை ஒருமித்த மனத்துடன் கேளுங்கள் என பிரமனும், வேதப் பொருளை உள்ளது உள்ளபடி உபதேசிக்கத் தொடங்கினார்.*

சின்மாத் திரமாய் உள்ள வெறும் சிவனே திகழ்வான் யாதுக்கும்
முன்மாத் திரமும் வேறில்லை முற்றும் அவனே மொழிவுற்ற
நன்மாத் திரமாய் ஆன்மாவென்று உரைக்கும் நாமத்தினை உடையான்
தன்மாத் திரமே ஆகிய அத்தன்மையான சங்கரன்தான் 2

**பொழிப்புரை:** *அறிவுடைய பொருளாய் சிவன் ஒருவன் மட்டுமே பிரகாசிக்கின்றான். இந்த உலக உற்பத்திக்கு முன்னர், சிவனொருவனைத் தவிர வேறு எந்தப் பொருளும் இல்லை. அவனே எல்லாமாய் இருந்தான். எல்லாப் பொருள்களும் அவனேயாய் இருந்தான். இத்தகைய தன்மையுள்ள சங்கரன் ஆன்மா என்று அழைக்கப்படுகின்ற நாமத்தை உடையவன்.*

அந்தத்துள தன்சத்தியை அடைவுற்றுளதாமிச்
செந்துக்கள் செய் கருமந்திகழ் காலம் பருவம் செய்து
எந்தப் பொருள்களும் ஆக்குவன் எனவே இறை உன்னாப்
பந்தப்பட முன்போல் பல உலகங்கள் படைத்தான் 3

**பொழிப்புரை:** *முன் கல்ப காலத்தில் சீவர்கள் செய்துள்ள சஞ்சித கர்மமானது முடிவில் தனக்கு அபின்னமான சத்தியின் விளங்குதலைப் பொருந்தி புரிந்த கர்மங்களின் பலத்தை முன்னிட்டு, விளங்கும் காலத்தில் பக்குவப்படுத்தி பரமசிவன், எவ்வகைப்பட்ட பொருள்களையும் சிருஷ்டிப்பேன் என்று திருவுளம் கொண்டு சீவர்கள் பந்தம் அடையும்படி முன்காலத்தில் உள்ளபடி பல உலகங்களையும் படைத்தான்.*

பரமன் செயலறியாது படைத்தான் உலகெல்லாம்
அரனென்பவர் அரியென்பவர் அயனென்பவர் சிலர் இந்
திரன் என்பவன் முதல் தேவர்கள் செயலென்பவர் சடமாம்
மருவும் குணவடிவென்பவர் அணு என்பவர் மயலால் 4

**பொழிப்புரை:** *பரமசிவத்தின் முத்தொழில் இயல்பை அறியாது மயக்கத்தினால் உலகைப்படைத்தவன். உருத்திரன் என்று சிலரும் திருமால் என்று சிலரும் பிரம்மா என்று சிலரும் இந்திராதி தேவர்கள் தொழில் என சிலரும், முக்குணங்களின் சமுதாயம் பொருந்திய மாயை என்று சிலரும் சிலர் அணுக்கள் என்றும் சொல்வார்கள்.*

வானிலாம் ஓசை என்பார் வந்தொரு கணத்தில் தோன்றி
ஆனியாம் புந்தி என்பார் அடையவும் கெட்டு நின்ற
சூனியம் என்பார் பூதம் என்னவே சொல்லா நிற்பர்
ஆனவாறு ஒருவரால் அன்று அடையவும் இயல்பே என்பார் 5

**பொழிப்புரை:** *ஆகாயத்தின் காரியமான சப்த பிரம்மமே என்பார்கள் சத்து அசத்து சதசத்து என்னும் இலக்கணங்கள் எல்லாம் இறந்த சூனியம் என்பார்கள். ஒரு கணத்திலேயே நாசமாகும் முக்குணமாய் இருக்கின்ற புத்தி என்று கூறுவர். பூதங்களின் சேர்க்கையே என்பார். உற்பத்தியானது ஒருவராலும் அல்ல எல்லாம் சுபாவமே என்பார்.*

தத்தமாலான பெத்தவாதியர்தாம் தங்களின் தாங்கள் தர்க்கங்கள்
கத்திடா நிற்கும் பரிசெலாம் சுருதி மிருதிகள் கருதியது அழிக்கும்
சுத்தமா விருத்தம் ஆகுமென்றே என் துணிவு தொல்பிறவியில் சுழல்வார்
சித்தமானது போய் இவற்றிலே காதல் செய்யும்முன் செய்த தீவினையால் 6

**பொழிப்புரை:** *தங்கள் தங்களால் இயன்ற மட்டும் விவேகமற்றவர்களும் பந்தமுடைய வாதியர்களும் தங்கள் தங்களுக்குள்ளேயே தகுந்த யுக்திகளைச் சொல்லிக் கதறுகின்ற தன்மையெல்லாம், சுருதி ஸ்மிருதிகள் அபிப்பிராயத்தை அழிக்கும். முற்றிலும் வேறுபாடாகும் என்பதே எனது நிச்சயமான அபிப்பிராயம். முற்பிறவிகளில் செய்த தீவினைகளின் மிகுதிப் பாட்டினால் பிறவிக் கடலில் சுழல்கின்றவர்களுடைய மனமானது இவைகளில் போய் பற்றி நிற்கும்.*

காதலால் தத்தம் கடவுளார் அருளால் காலபாகத்தினால் அறத்தால்
போதார் ஆதலினால் வேதவாதத்தைப் பொருந்துவர் புகன்ற அவ்வடைவே
வேதவாதத்தை மேவுநல் வினையால் விருப்பினால் அங்கு மேவினரும்
சாதலானதுவும் பிறத்தலும் இல்லாத் தற்பதம் தன்னையே சார்வார் 7

**பொழிப்புரை:** *உண்மைப் பொருளை அடைய வேண்டும் என்ற ஆசையாலும், தாங்கள் வழிபட்டுவரும் கடவுளர்களின் திருவருளாலும் கால பரிபக்குவத்தாலும் தாங்கள் செய்த புண்ணிய பலத்தாலும் தகுந்த விவேகிகள் ஆவதானாலும் வைதிக மார்க்கத்தை அடைவார்கள். பொருந்திய நல்ல முற்பிறவிகளின் புண்ணிய பலத்தாலும் முத்தி ஆசையினால் முன் சொல்லிய வண்ணமே வைதிக மார்க்கத்தை அடைந்து இறப்பதும் பிறப்பதும் இல்லா மோட்சத்தை அடைவார்கள்.*

வான் கருதிய மறைவழியை விட்டுமேல்
தான் கருதுதல் சதுரன்று தன்கையில்
தேன் கமழ் திரளையைச் சிந்திச் சந்தியால்
கூன் கையில் விழும்துளி கொண்ட தன்மையே 8

**பொழிப்புரை:** *மேலான வேத மார்க்கத்தை விட்டு மற்ற மார்க்கங்களைப் பின்பற்றி நிற்றல் அறிவாளிகளுக்கு அழகின்றாம் அவ்வாறு பின்பற்றி நிற்றல் தன் உள்ளங்கையில் உள்ள தேன் மனக்கும் பாயாசத்தைச் சிந்தி விட்டு இடைவழியே முழங்கையில் ஒழுகிய துளியை நக்கும் தன்மை போலாகும்.*

பொருள்கொண்ட மறைநின்று புகல்கின்றது உணரா
மருள்கொண்ட சமயங்கள் மதிகொண்டு கதியா
அருள்கொண்ட பரவின்பம் அடைகின்ற அவர்பேர்
இருள்கொண்டு பொருள் கொண்ட அவரன்றி இவரார் 9

**பொழிப்புரை:** *உண்மைப் பொருளைத் தன்னுள் கொண்டுள்ள வேதங்கள் எடுத்தோதும் உண்மைப் பொருளை அறியாது, மயக்கத்தினை உடைய பிற சமயங்கள் நற்கதியினைக் கொடுக்கக் கூடியது என எண்ணி அருள் பொருந்திய பேரின்பத்தை அடைகின்ற அவர்கள் பெரிய இருளைக் கொண்டு பொருளைக் காண்பாரைப் போன்றவர்கள்.*

வேதம் ஓதியதே மெய்ப்பொருள் மற்றைப் பொருளெலாம் மித்தையே வேதம்
ஓத மேவுற்ற பொருள் இருவகையாம் அதனில் ஒன்று என்றும் உண்மையதாய்ப்
போத ஆனந்தம் ஆகிய சிவனாம் பொருளது மற்றது அப்பொருளில்
ஏதம் மேவாமல் கற்பிதமாகும் மற்றுதன் இயல்பையும் இசைப்பாம் 10

**பொழிப்புரை:** *வேதங்களில் சொல்லப்பட்டுள்ள மெய்ப்பொருளே சத்தியம். ஏனைய சமய நூல்களில் கூறப்பட்ட பொருள் எல்லாம் அசத்தியமே. வேதம் கூறுகின்ற பொருள் இரண்டு வகையாம். அவ்விரண்டில் ஒருபொருள் எக்காலத்தும் சத்தியமாயும், ஞானமாயும், ஆனந்த வடிவாயும் உள்ள சிவன் என்னும் பொருளாம். மற்ற பொருள் அந்தப் பரமசிவனாகிய பொருளில் கோதுக்கிடமின்றி அத்தியாசத்தால் தோன்றிய மாயையால் கற்பிக்கப் பட்டதாம். அந்தக் கற்பிதப் பொருளின் இயல்பைக் கூறுவாம்.*

சொல்லுறா நின்ற கற்பிதப் பொருளில் சொல்லளவு உள்ளதாய் உண்மைக்கு
இல்லையாய் இருக்கும் சில பொருள் சொலலில் இல்லையாம் சிலபொருள் அவைதான்
எல்லைதீர் வானாதிகளும் சுத்திகையில் இரசதாதிகளுமாம் முன்னைத்
தொல்லையாம் பொருளும் கற்பித்துண்மைப் பொருளையும் சொல்லுநற் சுருதி
11

**பொழிப்புரை:** *முன் கூறப்பட்ட கற்பனைப் பொருள்களுள் சில பொருள்கள் கற்பனையாகக் கூறியுள்ள உலகியல் விஷயங்களில் மட்டும் இருக்கின்றன. சில பொருள்கள் பரமார்த்தத்தில் இல்லாதனவாயும் இருக்கும். சில பொருள்கள் விவகாரத்திலும் கூட உண்மையாய் இல்லாதனவாகும். அவ்விரு வகைகளும் அளவில்லா ஆகாயம் முதலிய*

*உலகங்களும் கிளிஞ்சலில் தோற்றமளிக்கும் வெள்ளி முதலியவைகளுமாம். பழமையான ஒப்புக்கொள்ளப்பட்ட சத்தியப் பொருளையுமே நல்ல வேதங்கள் கூறும்.*

**கனவில் கற்பிதப் பொருள்போல் வாதக் கலக்கங்கள்**
**நனவில் கற்பிதப் பொருளை நவிலார் இனியச்சிற்**
**கனவத்து விதத்தினில் என்னுற்றவர் ஒரு கண்ணால்**
**சொன அத்தகவும் மெய்யே மெய்யில் தோன்றாதே 12**

**பொழிப்புரை:** *வாதங்கள் செய்து கலகத்தை உண்டுபண்ணும் பிற மதத்தவர்கள், கனவில் தோன்றும் கற்பிதமாய் உள்ள பொருள்களைப் போல், நனவில் கற்பிதமாயுள்ள பொருள்களைப் பொய் என்று நினையாமல் மெய் என்று கூறுகிறார்கள். அவர்கள் அச்சிற்சத்திப் பொருளை எவ்வாறு அடைந்தவர்கள் ஆவார்கள். வியாவகாரிகம் என்னும் கண்ணோட்டத்தில் அவர்கள் சொன்ன அந்த நீதியும் உண்மையே ஆனால் பரமார்த்திகக் கண்ணோட்டத்தில் பொய்யே.*

**போதக் கண்ணில் பூதம் பொய்யே மெய்யேயாம்**
**பேதக் கடக்குட்டியமா நிகழ்வில் பேதந்தான்**
**ஓதப்படு சுத்திகை வெள்ளியின் மெய்யுணர் காலம்**
**சேதப்படும் அக்கனவில் பெரிதும் திடமுண்டே 13**

**பொழிப்புரை:** *ஞானக் கண்ணோட்டத்தில் ஆகாயம் முதலிய பூதங்கள் பொய்யே. மண்குடம், மண்சுவர் முதலியவை உண்மையாய் உள்ளதைப் பார்க்கும் போது அவற்றிற்கு காரணமான ஆகாதி பூதங்கள், மண்ணும், மண்குடமும், மண்சுவரும் கிளிஞ்சலில் தோன்றும் வெள்ளித் தோற்றத்தைக் காட்டிலும் சத்தியமே. சாக்கிர அவஸ்தையானது அழிகின்ற அக்கனவைப் பார்க்கிலும் மிகவும் சத்தியமாகும்.*

**கனவில் கண்ட பொருள் நனவில் காணும் பொருளைக் காட்டலால்**
**நினைவில் சமயநெறி வேதநெறிக்கு நிமித்தமா நினைமின்**
**வினவில் சமயநெறிவிட்டு மேலாம் வேதநெறி நின்றோன்**
**பினைஅச் சமயத்து அவன் குறுகில் பிராயச்சித்தம் செயல் வேண்டும் 14**

**பொழிப்புரை:** *கனவில் காணும் பொருள் நனவில் காணும் பொருளைக் காட்டலால், நினைக்குங்கால் இச்சமய மார்க்கங்கள் வேதமார்க்கத்தை அடைவித்தற்கு காரணம் ஆகும் என்று நினையுங்கள். ஆராயுமிடத்து அன்னிய மார்க்கங்களை விட்டு உயர்வான வேதநெறி மார்க்கத்தில் நின்றவன், பின் காலக்களில் அம்மார்க்கங்களில் சேருவானாயாகில் மீண்டும் இந்த வேதநெறி மார்க்கத்திற்கு வந்தால் பிராயச் சித்தம் செய்ய வேண்டும்.*

**தண்ணிய சமயிகள் தங்கள் பந்தியில்**
**உண்ணுதல் அவர்களோடு உறவு பண்ணுதல்**
**புண்ணியம்அறிந்திடப் புகுதல் செய்திடில்**
**பண்ணுக சாந்தி ராயணம் பகர்ந்தவா 15**

**பொழிப்புரை:** *வேதமார்க்கத்தில் உள்ளவர் தாழ்ந்த அச்சமயவாதிகளுடைய பந்தியிலே புசித்தாலும் அச்சமயத்தார்களொடு உறவு கொண்டாலும் புண்ணியம் கருதி அவர்களோடு சேர்ந்து தர்மங்களோ தானங்களொ செய்தாலும் விவேக ஞானம் கருதி அவர்களோடு சேர்ந்தாலும் ஒவ்வொன்றிற்கும் நம் சுருதியில் சொல்லிய முறைப்படியே சந்திராயண விரதம் இருந்து தோஷ நிவர்த்தி செய்ய வேண்டும்.*

வேதம் சொனபடியொழிய வேறுஞ்சில கலைகளினை
ஓதும் திறம் மருவி மறையோதும் சிவனிருகமலப்
பாதந்தொழ நினைவிலர்கள் பாடண்டிகள் எனவறிக
தீதொன்றிய அவர்களொடு சேரும் கலர்களும் அவர்களும் 16

**பொழிப்புரை:** *வேதம் கூறிய மார்க்கத்தை விட்டு பிற மதத்தினர் மார்க்கங்களில் உள்ள சாத்திரங்களை ஓதும் திறமடைந்து, வேதங்களால் சொல்லப்படும் சிவபெருமானுடைய கமலப் பாதங்களைத் தொழ நினைவிலர்கள் பாஷாண்டிகள் எனவே அறியக் கடவீர். குற்றம் பொருந்திய அவர்களோடு சேருகின்ற கீழ்மக்களும் அந்தப் பாஷாண்டிகளேயாம்.*

மையறு வேத மார்க்கம் மறந்து பாடண்ட மார்க்கக்
கையரால் மயக்கப்பட்டுக் கலியுகம் தன்னில் உள்ளோர்
மெய்யுணர் அனந்தானந்த மேனியாம் சிவனைப் பூசை
செய்ய ஆதரியார் செய்வார் தம்மையும் செய்ய ஒட்டார் 17

**பொழிப்புரை:** *கலியுகத்தில் உள்ளவர்கள் குற்றமில்லாத வேதமார்க்கத்தை மறந்து, பாஷாண்ட மார்க்கத்தைப் பின்பற்றுகின்ற கீழ்மக்களால் மயக்கப்பட்டு, ஞானமே திருமேனியாக உள்ள பரசிவத்தைப் பூசிக்க மனம் கொள்ளார். பூசை செய்ய மனம் ஒப்பியவர்களையும் பூசை செய்ய விடாமல் தடுப்பர்.*

காதும் வாதியர்களாலே கலியுகத்துள்ளோர் கெட்டு
வேதம் ஓதியவா செய்யார் மிருதிசொல் அதுவும்செய்யார்
பூதியும் அணியார் ஞான சாதன பூதமாக
ஓதுவது ஒன்றும் செய்யார் ஒழிந்ததே உகந்து செய்வார் 18

**பொழிப்புரை:** *வேதமார்க்கத்தைக் கெடுக்கும் பாஷாண்டியர்களாலே கலியுகத்தில் உள்ளவர் கெட்டு வேதத்தில் கூறியபடி நற்காரியங்களைச் செய்யார். ஸ்மிருதியில் கூறியுள்ள கர்மங்களையும் செய்யார். மூன்று வரியாய் விபூதி பூச மாட்டார்கள். ஞான சாதன காரியங்கள் எதையும் பின்பற்றார். வைதிக மார்க்கத்திலிருந்து விலக்கப்பட்டவைகளை விரும்பிச் செய்வார்.*

தருமமது அறிவில் பாடண்டர் தங்களை
மருவலால் வேதமா வாக்கியப் பொருள்
கருதிடார் அதுகர மணியில் காட்டிடும்
குருவையும் வழிபடார் குதர்க்க மேவலார் 19

**பொழிப்புரை:** *தருமா தர்மங்களை அறிய அறிவில்லாத பாஷாண்டிகளைச் சேர்தலால் வேதாந்த மகாவாக்கியப் பொருளை நினைக்க மாட்டார்கள். அந்தப் பொருளைக் கையில் மணிபோல் காட்டி அருள்கின்ற அருள் வடிவமான சற்குரு நாதனையும் வழிபட மாட்டார்கள். குதர்க்கங்களையும் பேச வல்லமை உள்ளவர்களாய் இருப்பார்கள்.*

முன்ன நான்மறைகள் ஓதி முடிந்திடும் பரமமான
சன்னியா சத்தைச் சாரார் சார்ந்தவர் தமக்கும் தீங்கு
பன்னிடா நிற்பர் வேறு பலபல சொல்லி என்னை
மன்னும் வீடு எய்தாதான வழிகளே மருவா நிற்பர் 20

**பொழிப்புரை:** *முன்னமே நான்மறைகளாலும் முடிவாகக் கூறப்பட்ட பரமஹம்சமான சந்நியாசத்தை அங்கீகரிக்க மாட்டார்கள். அதை அங்கீகரித்த மகான்களுக்கும் கேடு புரிவார்கள். மேலும் மேலும் பல்வேறு வகைப்பட்டவைகளைக் கூறுவதால் பயன் ஏது? நித்தியமான முத்தியை அடைவதற்கு இடையூறான மார்க்கங்களையே கடைபிடிப்பார்கள்.*

துட்டமாம் மார்க்க நூலில் துவக்கிலாப் பெரியாராகிச்
சிட்டராய்த் தீரராகிச் சிவனருள் உடையரானார்
கட்டமாம் பிறவிதீரக் காதலால் வேதம் சொல்லப்
பட்டதே செய்யா நிற்பார் பரமமாம் பதத்தை உன்னி 21

**பொழிப்புரை:** *வேத விரோதமான சமய நூல்களில் கட்டுப்படாத பெரியவராகியும், சிஷ்டாசாரம் உடையவர்களாகியும், சிவனருள் பெற்றவர்களாகியும் உள்ளவர்கள், துன்பத்துக்கு இடமாகிய பிறப்பு நீங்க ஆசையினால் உயர்வான மோட்சத்தைக் கருதி வேதத்தில் விதிக்கப்பட்ட நியமப்படியே செய்வார்கள்.*

அவத்தமே பிதற்றப்படும் கலையெல்லாம் அல்லல்
பவத்தை வேரறுத் திடுவது பழமறைப் பொருளே
உவப்பினால் ஒருகணத்தில் அப்பொருள் பெற உரைப்பான்
சிவப்பிரகாசனே என்றனன் திசைமுகன் தெளிய 22

**பொழிப்புரை:** *வேத விரோதமான மார்க்கங்களின் நூல்கள் எல்லாம் பொய்யான பொருள்களை உண்மை என்று கூறும். துன்பம் தரும் இப்பிறவியை வேரறக் கெடுப்பது அநாதியான வேதார்த்தமே நொடிப் பொழுதில் அப்பொருளை மிக மகிழ்ச்சியாக அடைவதற்கு அருள் வடிவான பரசிவனே அருள் பாலிப்பான் என நான்முகனான பிரம தேவன் தேவர்களுக்குத் தெளிவாகக் கூறினான்.*

**ஐதரேய உபநிடத தாற்பரியம் உரைத்த அத்தியாயம் முற்றிற்று.**

## மூன்றாவது அத்தியாயம்

# ஐதரேய உபநிடதார்த்த சேடமும் தைத்திரிய உபநிடத தாற்பரியமும் உரைத்த அத்தியாயம்

தற்பரன் தன் உருவும் சயம்புவாம்
உற்பவம் அது உருவையும் உண்மையில்
அற்பமும் அதில் அன்னியம் இன்மையும்
பொற்பு அமைந்த நல் பூமகன் ஓதுவான். 1

**பொழிப்புரை:** *சுயம்புவான பரமசிவத்தின் சொரூப இயல்பையும், உற்பவிக்கின்ற பசுக்களின் இயல்பையும், உண்மையில் கிஞ்சித்தேனும் அப்பொருளில் வேறில்லாமயும் அழகு பொருந்திய மலரில் உறைகின்ற பிரமதேவன் சொல்லலுற்றான்.*

சான்றதே எவைக்கும் சருவ ஆன்மாவாம் சங்கர நாமன் சான்றிலதேல்
தோன்றிடாது உலகம் தோன்றிடாவாறு தனக்கெனத் தோற்றம் இன்மையினால்
தான் தனக்கு உலகம் தோற்றம் இலாமை சடத்துவத்தால் சடமாகை
ஏன்று தானறியாது ஒன்றினால் அறியப்படும் பொருளாகிய இயல்பால். 2

**பொழிப்புரை:** *எல்லா உடல்களிலும் ஆன்மாவாக விளங்குகின்ற சங்கரன் என்னும் பெயரை உடையவன் அனைத்துக்கும் சாட்சியாவான். அந்த சாட்சி இல்லையாயின் உலகம் விளங்கமாட்டாது. அப்படி உலகம் விளங்காத தன்மை, தான் தானே விளங்கக்கூடிய தன்மை, தன்னிடத்தில் இல்லாததனாலேயாம். அதற்குக்காரணம் அது சடமாய் இருப்பதேயாம். சடமாதலும் தன்னைத்தானே அறியாமல் வேறு ஒன்றினால் உணரப்படும் தன்மையாம் இயல்பினாலும்*

உலகெலாம் விளங்கவுறும் ஒளி உணர்வில் உற்பவம் எனச்சிலர் சொல்வர்
அலகில் பேரொளிதான் பிறக்குமேல் சடமாம் ஆதலால் பிறக்கை கூடாது
கலவரு நாசமுள்ளது சடங்களாம் கடாதிகள் தனக்கே ஆம்
உலைவிலா ஒளி விஞ்ஞானம் உண்டாக ஆக்குகை உள்ளவாறு அன்றே. 3

**பொழிப்புரை:** *உலகனைத்தையும் விளங்கச் செய்கின்ற ஒளியானது, உணர்விலிருந்து தோன்றியது என்று பட்ட மதத்தவர் கூறுவர். அளவற்ற உயர்ந்த ஒளியானது உற்பத்தி உடையது எனில் சடமாகிவிடும். ஆகையால் ஒளிக்கு உற்பவிக்கும் தன்மை இல்லை. அங்கங்களின் சேர்க்கையான் பிரிவுடைய சடங்கள் சேர்க்கையின் பிரிவுடைய சடங்கள்*

*நாசமுறும் தன்மை உடையது. அது கடாதிகளுக்கு பொருந்ததும் சலனமற்ற பணமாவது விஞ்ஞானத்தினின்றும் உற்பத்தியாகும் என்பது உண்மையாகாது.*

பான ரூபத்தால் ஞானம் பரிணாமத்தை அடையாது
ஞான ரூபம் அவிகாரி ஆதலாலே விஞ்ஞானம்
தானும் விகாரப்படுமேற் பால் தன்னை முதலாம் சடப்பொருள்போல்
ஆனியாகிய அறிபொருளாம் அறிவும் அறியும் பொருளாமே. 4

**பொழிப்புரை:** *ஞானமானது விளக்க ரூபமாக பரிணமித்தலை பொருந்தாது. ஞானத்தின் சுபாவம் விகாரத்தன்மை இல்லாததனால், அவ்வித விஞ்ஞானமும் விவகாரத்தை அடையுமாயின் பால் முதலாய சடப் பொருள்களைப்போல தன் இயல்பு கெட்டு சாட்சிப்பொருளாம் ஞானமும் காட்சிப் பொருளாகத் தகுமே.*

அறிவுபானம் தனக்குத்தான் ஆரம்பகமுமாக் கூடாது
அறிவுதான் ஓர் அறியவுறும் பொருளாய் இராத அதனாலும்
அறிவைக் குணமாகப் பிறரும் அங்கீகரித்த அதனாலும்
அறிவு இங்கு அசத்தாம் பானத்துக்கு ஆரம்பமும் ஆகாதே. 5

**பொழிப்புரை:** *குணவடிவ ஞானமானது பானத்திற்கு ஆரம்பம் ஆகாது ஏனெனில், ஞானமானது அறியத்தக்க ஒரு பொருளாக இல்லாததனால் அறிவை ஒரு குணப்பொருள் என அங்கீகரிக்கப்பட்டு உள்ளதாலும் இவ்விடத்தில் அசத்தால் பானத்திற்கு ஞானமானது ஆரம்பம் ஆகாது.*

தொல்லை அசத்தாம் பானத்தைத் தோற்றுவிப்பது ஒரு ஞான்றும்
இல்லை இல்லாப் பொருளுக்கும் பண்டு இன்றென்ன இயம்பவரும்
சொல்லும் இல்லை ஆதலினால் தோற்றப்படுதல் விஞ்ஞானத்து
இல்லை எல்லாப் படியாலும் என்றும் உள்ளது இவ்வொளிதான். 6

**பொழிப்புரை:** *பூர்வத்தில் அசத்தாகிய ஒளியை தோற்றுவிப்பது ஒருநாளும் இல்லை. இல்லாப்பொருளுக்கு முன்பு பின்பு என்று சொல்லும் வார்த்தையும் இல்லை. எல்லாப் படியாலும் ஒளி உண்டாகுதல் விஞ்ஞானத்தினின்றும் இல்லை. இந்த ஒளியே எப்போதும் சுயமாய் உள்ளது.*

ஓதும் நெறியால் உணர்வும் உற்பவமும் உறாதே
பேதமையதே அது பிறக்கும் எனுமாறு இங்கு
ஓதிவரு பானம் அதிலும் உற்பவமும் அற்றே
நீதி பிறவாமல் உளதால் அவ்வொளி நித்தம். 7

**பொழிப்புரை:** *ஓதும் நெறியால் ஞானமும் உற்பத்தி ஆகாது. அந்த ஞானம் உற்பத்தியாகும் என்று கூறுவதும் பேதைமையே. இவ்விடத்தில் சொல்லி வருகிற விளக்கமும் அவ்விஞ்ஞானத்தினின்று பிறக்கும் என்பதும் அப்படியே பேதமைதான். உண்மையாய் உற்பத்தி ஆகாமல் உள்ளதால் அந்த ஒளி நித்தியமாகும்.*

நிகிலலோகம் தனைநிகழ்த்து நித்தவொளியேது அவ்வொளியே
சகல லோகம் தனக்கென்றும் சான்றாய் நின்ற சங்கரன்தான்
துகளில் இறையால் கற்பிதம் தான் சம்பந்தத்தால் தோற்றமுறும்
தகவில் அஞ்ஞானமும் அன்றித் தானாத் தோற்றம் தாராதால். 8

**பொழிப்புரை:** *எல்லா உலகத்தையும் விளக்குகின்ற தன்னொளியுடைய அழிவில்லாத அந்தப் பொருளே, எக்காலத்தும் சாட்சியாய் விளங்குகின்ற சங்கரன் என்னும் பெயரை உடையவன். குற்றமற்ற அந்தச் சங்கரனால் கற்பிதமாகிய தெளிவில்லா அஞ்ஞானம் விளங்குகின்றது. அக்து அன்றி தானாக விளங்காது.*

தெரிவிலாமையில் செனித்திடும் சித்தமும் செற்றம் ஆர்வம் எல்லாம்
தெளிவில்லாமையைத் திகழ்த்திய சேதனச் செறிவினால் திகழ்கின்ற
புரிவதாம் பிராணன் திகழ்வதும் புறக்காரணங்கள் உடலம்தான்
விரிவதாம் விடயங்கள் எல்லாம் சித்த விருத்திசேர் உணர்வாலே. 9

**பொழிப்புரை:** *அஞ்ஞானத்திலிருந்து உண்டாகின்ற மனமும் விருப்பு வெறுப்புகளும் இவைகள் எல்லாம் அஞ்ஞானத்தை விளக்குகின்ற சைதன்யத்தின் பலத்தினால் விளங்குகின்ற தொழிற்படுகின்ற பிராணன் விள்க்குவதும் இந்திரியங்களும் உடலமும் விரிவதாம் விடயங்களும் இவை அனைத்தும் சித்தவிருத்தி சம்பந்தத்தை முன்னிட்ட ஞானத்தினாலேயாம்.*

அன்றி அனுமான முதல் தன்னில் அறிவறிவு
நின்றுசில சில்பொருள் நிகழ்த்திவிடும் அதனால்
என்றும் இறை எப்பொருள்கள் யாவும் நிகழ்விப்பான்
ஒன்றும் அவனால் ஒழிய என்றும் நிகழாதால். 10

**பொழிப்புரை:** *மேலும் அனுமானத்தால் அறிகின்ற சைதன்யமானது, நிலைபெற்று நின்று சில பொருள்களை விளங்கச் செய்யும். எக்காலத்திலும் சக்கரன் அனைத்துப் பொருள்களிலும் விளங்குகிறான். அவனன்றி யாதொன்றும் எக்காலத்திலும் நிகழாது.*

ஆதலால் உருவம் காண்பதும் ஒலிதான் அழகுறக் கேட்பதும் ஒருவன்
காதலால் கந்தம் கொள்வதும் இனிது இன்னாது என இரதம் காண்பதுவும்
ஓதலாம் பரிசம் உணர்வதும் இறையால் உரைத்த சங்கரன் எனும் உணர்வை
மேதையால் மிகுத்தோர் வேறுவேறாக விளம்புவார் அது விளம்பிடுவாம். 11

**பொழிப்புரை:** *ஆகையால் ஒருவன் உருவங்களைப் பார்ப்பதுவும், சப்தங்களைக் கேட்பதுவும் வாசனைகளைப் பிரியமாக முகர்வதுவும், அறுசுவையான ருசிகளை அறிவதுவும், வெப்பம் குளிர் முதலியவற்றை உணர்வதும், சங்கரனால்தான். இச்சங்கரனுடைய மேலான ஞானத்தை அறிவில் சிறந்த மகான்கள் வெவ்வேறு விதமாகக் கூறுவார்கள். அதை உரைப்பேன் என்றார் பிரம்மா.*

சிலர்தாம் இதயம் என்பர்கள் மனமே என்பர்கள் சிலவர்தாம் சிலவர்கள்
நலமதாம் ஞானம் என்பர்கள் எல்லாம் நாடிடு ஞானம் என்பர்களாம்
இலகு விஞ்ஞானம் என்பர்கள் மிகுத்தே இலங்கிய ஞானம் என்பர்களாம்
சொலவரும் மேதை என்பர்கள் வேறு சொல்லிடும் பரிசையும் கேண்மோ. 12

**பொழிப்புரை:** *சிலர்கள் அந்த விஞ்ஞானத்தை இதயம் என்று சொல்வார்கள். இன்னும் சிலர்கள் மனமென்று சொல்வார்கள். மற்றும் சிலர் நன்மையாகிய ஞானம் என்பார்கள். அனைத்தையும் நாடுகின்ற அஞ்ஞானம் என்பார்கள். பிரகாசிக்கின்ற விஞ்ஞானம் என்பார்கள் மிகுதியாய்ப் பிரகாசிக்கின்ற பிரஞ்ஞானம் என்பார்கள். சொல்லப்படுகின்ற மேதை என்று சொல்வார்கள். மற்றும் பகர்ந்திடும் விதத்தையும் கேளுங்கள்.*

யாதையும் காணும் கண்ணென மொழிவர் எழில்மிகு திருதியாம் என்பார்
சூதியது என்பார் மிருதி என்று உரைப்பார் சொல்லும் சங்கற்பம் என்றுரைப்பார்
நீதியாம் கிருது காமமே என்பார் நிகழ்வுறு வசமென உரைப்பர்
ஓதிய இந்த நாம தேயங்கள் உணர்வதாம் சிவனது பெயரே. 13

**பொழிப்புரை:** *அனைத்தையும் பார்க்கின்ற கண் என்று சொல்வார்கள். அழகு மிகுந்த திருதி என்பார்கள். சூதி என்று சொல்லுவார்கள். சொல்லப்பட்ட சங்கல்பம் என்று சொல்வார்கள். நீதியாகிய கிருது என்பார்கள் காமந்தான் என்பார்கள் சொல்லப்பட்ட சொல்லப்பட்ட இந்தப் பெயர்கள் எல்லாம் உணர்வு மயமாய் உள்ள சிவனது பெயர்கள் ஆகும்.*

பிரமன் இவனே இந்திரனும் பிரசாபதியும் இவன் இவனே
உரமது உடைய உம்பர்கள் பூதங்கள் உலகங்களும் எல்லாம்
உரை செய்திடும் அண்டச முதலாம் யோனி பேதங்களும் இவனே
குரகதம் கோ மானிடமும் குஞ்சராதிகளும் இவனே. 14

**பொழிப்புரை:** *பிரம்மனும் இந்தச் சிவனே. இந்திரனும் பிரசாபதியும் இவனே வலிமை உடைய தேவர்களும் பூதங்களும் புவனங்களும் அனைத்தும் இந்தப் பரமசிவனே. சொல்லா நின்ற அண்டச, சராயுச. சுவேதச. உற்பீச முதலிய பலவகை உற்பத்திகளும் இந்தச் சிவமாகிய அறிவுப் பொருளே. குதிரைகளும் பசுக்களும் மானிடர்களும் யானை முதலானவைகளும் இச்சிவப்பொருளேதான்.*

ஏனை மற்று இயம்பாத இயங்க நிற்கப் படுவது எல்லாம்
ஞானகனமாம் இறையவனே நலமாம் சிவனும் அரனும் முத
லான நாமங்களை உடைய பிரமம் அறிவு மெய்ப்பரமன்
ஈனமில்லாஅறிவுருவே எல்லாப் பொருட்கும் பதிட்டையதாம். 15

**பொழிப்புரை:** *ஒழிந்த இன்னமும் சொல்லாத இயங்க, நிற்கப் படுவது எல்லாம் ஞானகனமான இச்சிவனே தான். நன்மையான சிவனும் உருத்திரனும் முதலாகிய பெயர்களை உடைய பிரம்மமே அறிவாம். மெய்ப்பொருளாகிய சிவனுடைய கெடுதல் இல்லாத அறிவு உருவமே அனைத்துப் பொருள்களுக்கும் அடிப்படை ஆகும்.*

மையல் ஒன்று அற இவ்வறிவினை அறியில் மானுடன் முத்தனாம் அன்றி
துய்ய கன்மத்தால் மைந்தரால் மற்றோர் பொருளினால் உற்பவம் துடையான்
வையகம் பிரமவேதனம் தன்னின் மாத்திரத்தால் பிரமந்தான்
ஐயம் ஒன்று அறவே ஆமென முக்கால் ஆணையிட்டு அறைந்தனன் அலரோன்.
16

**பொழிப்புரை:** *மயக்கம் ஒன்றும் இல்லாமல் இந்த அறிவினை அறிந்தால் மனிதனானவன் முத்தன ஆவான். இது இல்லாமல் தூய கன்மத்தாலும் மைந்தராலும் மற்றைய பொருள்களினாலும் பிறவியை நீக்கமாட்டான். உலகத்தோர் பிரம்மஞான மாத்திரத்தினாலேயே ஐயம் ஏதுமின்றிப் பிரம்மம் ஆவாரென்று பிரம்மதேவன் மூன்றுமுறை சபதம் செய்து சொன்னான்.*

அந்த விச்சைக்கு விடயமாம் சச்சிதானந்தமாம் பிரமத்தைப்
பந்தமாம் குகையில் மாயை அஞ்ஞானம் என்பதில் பர வியோமத்தில்
அந்த அங்கத்துப் பிரம ரூபமதா அறிந்தவன் அவன் ஒருக்காலே
சிந்தைசெய் காமம் யாவையும் பெற்றுத் தீரவே சீவன் முத்தனுமாம். 17

**பொழிப்புரை:** *அந்த ஞானம் ஒன்றிற்கே விடயமாகிய சச்சிதானந்தமான பிரம்மத்தை மாயை, அஞ்ஞானம் என்பவற்றுடன் பரமாகாசம் என்னும் பெயர்களை உடைய, பந்தமாகிய குகையில் அந்த அங்கத்துப் பிரம ரூபமதாக எவன் அறிகிறானோ அவனே ஏக காலத்திலேயே கருதிய காமம் அனைத்தையும் கடந்து அடைந்து சீவன் முத்தனும் ஆவான்.*

அஞ்ஞான மாயா சத்திக்குச் சான்றாய் அகத்துறை அசல ஆன்மாவை
மெய்ஞ்ஞான பரத்தில் வேறு அறக் காணும் அவன் பிரமவித்தினின் மிக்கான்
மெய்ஞ்ஞான பரத்தில் வேறு அறும் சத்தி மிச்சிர மித்த ஆன்மாவில்
பைஞ்ஞாக மாலை போலவே தோன்றப்படும் பஞ்சீகரித்திடா வானம். 18

**பொழிப்புரை:** *அஞ்ஞானமாகிய மாயா சக்திக்குச் சாட்சியாய் உள்ளத்தில் உறைகின்ற அசைவற்ற ஆன்மாவை மெய்யுணர்வாகிய பிரமத்துக்கு வேறாகக் காணும் அவன் பிரமவித்துக்களில் மேலானவன். மெய்ஞ்ஞான பிரமத்திற்கு வேறறும் சக்தியுடன் கூடி இருக்கின்ற ஆன்மாவினிடத்திலிருந்து மாலையிடத்தில் தோற்றுகின்ற விஷப்பையை உடைய சர்ப்பம் போலவே பஞ்சீகரிக்கப்படாத வானம் தோற்றப்படும்.*

வாயு என்று பெயருடைய பரிசம் வானத்து உண்டாகி
தேயு அதிலே தோன்றிற்று அவ்வனலில் அப்பும் உண்டாய் அத்
தோயமதில் மண்ணுதித்தது சூக்குமம் ஐந்தையும் பஞ்சீகரிக்கத்
தூய இறைவன் ஆக்கிணையால் தூல பஞ்ச பூதமுமாம். 19

**பொழிப்புரை:** *வானத்து, வாயு என்று பெயருடைய பரிசமானது தோன்றி, அதிலிருந்து அக்கினி உண்டாயிற்று. அந்த அக்கினியிலிருந்து நீரும் உண்டாகி, அந்த நீரினின்றும் நிலம் உண்டாயிற்று. இவ்வித சூக்கும பஞ்ச பூதங்களையும் பஞ்சீகரணம் செய்ய, பரிசுத்தம் பொருந்திய சிவன், ஆணையால் தூலமான பஞ்ச பூதங்களும் உண்டாகும்.*

பரமன் ஆக்கிணையினாலே பஞ்ச பூதங்களாலே
பிரமாண்டம் படைத்தேன் அந்தப் பிரமாண்டம் அத்தினுள்ளே
திறமுறும் உலகும் தேவசாதியும் தாம் தாம் பண்ணும்
கரும ரூபத்தால் வானோர் ஆதியும் பிறவும் கண்டேன். 20

**பொழிப்புரை:** *சிவன் ஆணையினாலே பஞ்ச பூதங்களைக் கொண்டு பிரமாண்டத்தை நான் படைத்தேன். அந்தப் பிரமாண்டத்தினடத்தே நிலைபெற்றிருக்கின்ற புவனங்களையும் தேவ வர்க்கங்களையும் தாங்கள் தாங்கள் செய்த கர்ம ரூபமாக வந்த தேவர்முதலானவர்களையும் மற்றுமுள்ள அனைத்தையும் நான் படைத்தேன்.*

யாதொன்று எலும்பு நரம்பு முதல் இந்த உடம்பு எனத்தோன்றும்
ஓது பிராணமயன் அத்துக்குள்ளாய் வேறாயே ஒளிரும்
ஓது பிராணமயற்கு அயலாய் உள்ளாய் ஒளிரும் மனோமயன் அந்
நீதியுற விஞ்ஞானமயன் அவனுக்கு உள்ளாய் நிகழுமால். 21

**பொழிப்புரை:** *எது, எலும்பு நரம்பு முதலிய இந்த உடல் என்று விளங்குகின்றதோ, சொல்லப்பட்ட பிராணாமயமானவன் அதற்குள்ளாக வேறாக விளங்குவான். இப்போது கூறிய பிராணமயருக்கு வேறாய் உள்ளாய் மனோமயன் ஆனவன் விளங்குவான். விஞ் ஞானமயன் என்பவன் அந்தக் கிரமாக மனோமயனுக்கு உள்ளாகிப் பிரகாசிப்பான்.*

அன்னியமாய் விஞ்ஞானமயனுக்கு உள்ளாம் ஆனந்தமயன் தன்னுள்ளாம்
மன்னிய அப்பிராணமயனாலே பூர்ணன் அவன் மனோமயன் தான்
அன்னவகை விஞ்ஞானமயனால் பூர்ணன் ஆனந்தமயனாலே அவன் தான் பூர்ணன்
தன்னிகரற்று அனைத்தினுக்கும் உள்ளாய் வேறாம் தற்பரத்தால் பூர்ணன்
அது தானே பூர்ணம். 22

**பொழிப்புரை:** *ஆனந்தமயமான ஆன்மா அன்னியமாய் விஞ்ஞானமயனுக்கு உள்ளாவான். அன்னமய னானவன் தன்க்குள்ளாகப் பொருந்துகிற அந்த பிராண மயனாலே வியாபிக்கப்பட்டவன். மனோமயன் என்பவனால் அப்பிராணமயனும் வியாபிக்கப்பட்டவன். மனோமயன் என்பவனும் அத்தன்மையாகவே விஞ்ஞானமயன் என்பவனால் வியாபிக்கப்பட்டவன். அவ்விஞ்ஞான மயனும் ஆனந்தமயனால் வியாபிக்கப்பட்டவன். தனக்கு நிகரற்றும் அனைத்திற்கும் உள்ளாயும் சாட்சியால் அவ்வானந்த மயனும் வியாபிக்கப்பட்டவன் பிரம்மமோ எனில் மற்றொன்றால் வியாபிக்கப்படாமல் தானே பூரணமாக இருக்கிறது.*

சச்சிதானந்தம் ஆகி ஒன்றாம் பரப்பிரமம்
புச்சம் என்று உரைத்திடப்படும் இரதம் அப்பொருளே
இச் சதானந்தம் எய்தினோன் யாவன் எவ்விடத்தும்
துச்ச ஆக்கையின் துயர் அறுத்து அவன் சுகம் பெறுமால். 23

**பொழிப்புரை:** *சச்சிதானந்தமாயும், அத்துவிதமாயும் உள்ள பரப்பிரம்மமானது ஆதார அதிஷ்டானம் என்று சொல்லப்படும் அந்தப் பிரமமே எக்காலத்தும் இரதப்*

*பொருளாகும். இந்தச் சதானந்த ரதப்பொருளை அடைந்த சனாதனன் யாவன் அன்னவனே இழிவான உடலைப் பற்றிய துன்பத்தை ஒழித்து எங்கும் சுகத்தைப் பெறுவான்.*

இன்பமாம் பரம் இலதெனில் யாவன் உண்டாகும் ஏது எவன் செய்வான்
துன்பமே தனக்கு இயல்பதாய்த் துயர்க்கடல் இடைப்படுமுயிர் தன்னைத்
தன் பரம்பெரும் கருணையால் இரதமாய்ச் சார்ந்து அவனுளத்தே நின்று
இன்பம் மேவுற அளித்திடல் இறைவனுக்கு இயல்பது எப்படியாலும். 24

**பொழிப்புரை:** *இன்ப வடிவான பரமன் இல்லாது போனால் எவன் உண்டாவன்? எவனால் எந்தக்காரியம் செய்ய முடியும்? துன்பமே தனக்கு இயல்பானது என்று துன்பக்கடலில் முழுகுகின்ற சீவான்மாவை அப்பரமன் தன் கருணையினால் சீவர்களின் உள்ளத்திலே சுகமாய்க் கல்ந்து நின்று எவ்விதத்தாலும் ஆனந்தம் உண்டாகுமாறு கொடுத்தல் பரமசிவன் இயல்பாம்.*

யாதொரு பொழுது காட்சி முதல் இலதாம் பரத்தில்
பேதமது அற உணர்ந்தான் அப்பொழுது அபயன் ஆகி
கோதிலா அமுதம் எய்தும் கூடுமேல் சிறிது பேதம்
சாதலும் பிறப்பும் அச்சம் சார்தலும் சங்கை இல்லை 25

**பொழிப்புரை:** *எப்பொழுது இந்தச் சீவன் காட்சி முதலானவை இல்லாத அரனிடத்தில் பேதமில்லாமல் அறிகின்றானோ அக்காலத்தே பயமில்லாதவனாகி குற்றமில்லாத பரப்பிரமத்தை அறிவான். அற்பமேனும் பேதபுத்தி கொள்ளுவானாயின் இறப்பதும் பிறப்பதும் பயம் பொருந்துவதும் அளவில்லாததாகும்.*

தான் எலா இடத்திலும் உளதாகிலும் சாங்கரியம் சேர்ந்த
ஈனசாதியைக் குறித்து அது வெளிப்படாது இருக்குமே எப்போதும்
ஞானமே முயல்பவற்கு நல்பரம்பரம் நல்பரம்பதமே தான்
ஆனவாறு அறிந்திடும்படி கேவலம் அருளினால் வெளியாமால். 26

**பொழிப்புரை:** *தானாகிய அந்தப் பிரம்மம் எவ்விடத்தும் இருந்தபோதும், வரம்பு தப்பிச் சேர்ந்திருக்கின்ற அஞ்ஞர்களாகிய இழிந்த சாதியைக் கருதி அந்தப் பிரம்மம் வெளித்தோன்றாதிருக்கும். எக்காலத்தும் ஞானத்தையே முயலுகின்ற ஞானிகளுக்கு நல்ல பிரம்மமானது நன்மையாகிய பிரம்மமே தானான வண்ணம் தெரிந்திடும்படி கிருபையினால் கேவலம் தானாகவே வெளிப்படும்.*

அங்கம் ஆறினையும்வேதம் நான்குடனே அறியினும் மனனம் இல்லாதவனுக்கு
எங்கும் எப்பொழுதும் பயத்தினுக்கு ஏதுவாயிடும் இறைவன் இந்திரன் கால்
செங்கதிர்ச்செல்வன் தீ யமன் தத்தம் செய்தொழில்களில் ஒருகாலும்
பங்கியாது ஒழுகும் பரிசது பரனைப்பற்றி உண்டாகிய பயத்தால். 27

**பொழிப்புரை:** *நான்கு வேதங்களுடனே ஆறு அங்கங்களையும் உணர்ந்த போதிலும், மனனம் இல்லாதவனுக்கு எவ்விடத்தும் எக்காலத்தும் பரமசிவனானவன் அச்சத்துக்கு ஏதுவாகவே பவிப்பான். இந்திரன் வாயு, சூரியன், அக்கினி காலன் தங்கள் தங்கள் செய்கின்ற தொழில்களில் ஒரு பொழுதும் குறைவு வராமல் நடக்கும் தன்மையாலும், அந்தப் பரசிவனைப் பற்றி விளைந்த பயத்தினாலே தான்.*

தம்தம் அளவில் அரி ஆதி தம்பம் ஈறாச் சகத்து எல்லாம்
இந்த இறைவன் ஆனந்த இலேசத்தாலே இன்புறுமால்
அந்த அந்தப்பதத்து ஆசை அற்றோர்க்கு அருளால் உள்ளபடி
தொந்தம் அறு தன் சொரூபமதாம் இன்பம் தானே தோன்றுமால். 28

**பொழிப்புரை:** *திருமால் முதல் தம்பப்பூச்சி வரையிலும் உலகிலுள்ள எல்லா உயிர்களும் இந்த இறைவனுடைய ஆனந்தத்தின் ஒரு திவலையாவது அவரவர்களுக்கு ஏற்றபடி பெற்று இன்புறுகிறார்கள். அந்த அந்தப் பதவிகளில் இச்சை இல்லாதவனுக்கு சிவனருளால் மெய்யாகவே இரண்டற்ற தன்மையான் தனது சொரூபமாகிய ஆனந்தம் தானாகவே உண்டாகும்.*

பருதி நெஞ்சினும் ஒழிந்தவர் நெஞ்சினும் பரனே
கரியதாகி நின்று அறிபவன் காயமே முதலாம்
பொருளை மாய்வுறத் தத்துவ விவேகத்தால் போக்கிக்
கரியதாகிய ஈசனைக் கண்டவன் கண்டான். 29

**பொழிப்புரை:** *சூரியனின் இதயத்திலும் ஏனையவர் இதயத்திலும் சாட்சியாகவே நின்று தானே அறிகின்றவன், தேகம் முதல் மாயை ஈறாக தத்துவ விவேகத்தால் படியும்படி நீக்கி சாட்சியாகப் பரசிவனை எவன் பார்த்தானோ அவனே பார்த்தவனாவான்.*

உருத்திரன் மால் முதலாக தம்பம் ஈறாய் உள பொருட்கும்
சான்றாகும் ஒருவன் தன்னைக்
கருத்துறத் தர்க்கத்தாலும் மானத்தாலும் கண்டவன் கண்டவன்
தர்க்கம் மானம் ஞானம்
கருத்துறா உள்ளவன் உலகில் நின்றும் தன்னைத் தன்னாலே
வேறுபடக் கழற்றிக் கற்றோன்
உருத்துவரும் அன்ன ஆதி கோசமெல்லாம் உட்பகிரும்
இறைவன் அருள் ஒன்றினாலே. 30

**பொழிப்புரை:** *உருத்திரன் நாராயணன் முதல் தம்பம் ஈராய் உள்ள பொருள்கள் அனைத்திற்கும் சாட்சியான பரமசிவனை சுருதிப் பிரமாணத்தாலும் அறிகிறானோ அவனே, யுக்தியோடும் கூடிய ஞானம் எவன் சித்தத்தில் பொருந்த இருக்கின்றானோ அவனே, இவ்வுலகத்னின்றும் தன்னாலே கூடஸ்தனாகிய தன்னை வேறாகப் பிரித்து அறிந்தோன். சிவன் அருளாலே மட்டுமே ஆபாசமாகத் தோன்றி வருகின்ற அன்னமாதி கோசங்களை எல்லாம் சிவ அருளினாலே பிரித்து அறிவன்.*

**விளம்பும் வாக்கு யாதொன்றின் பக்கல் செல்லாதே மீளும்**
**விளம்பும் வாக்குத்தான் விளம்ப விசேடம் ஒன்றும் பெறாமையினால்**
**விளம்பும் வாதம் சிறிதில்லை விசேடம் பெறிலே விசேடமாம்**
**விளம்பல் ஆவது அறும் சிவனை உரையால் விளம்பும் பரிசு என்னோ. 31**

**பொழிப்புரை:** *சொல்லப்பட்ட வாக்கானது எதனிடத்தில் போகாமல் திரும்பி மீளுமோ, சொல்லப்பட்ட அந்த வாக்கானது நிரூபிக்க விசேஷம் ஒன்றும் சொல்லத்தக்க வாதம் எதுவும் இல்லை. விசேடத்தை அடைந்திடுமானால், சொல்லுதற்கரிய பிரம்மம் சொல்லால் ஆகும் தன்மை உடையதாகும் சொல்லும் தன்மை உடையதாகிவிடும். சொல்லும் தன்மை என்ன இருக்கிறது இல்லை.*

**யாதொன்றின்பால் எங்கும் கோசரமாம் இந்த மனம் செல்லாது**
**யாதொன்றின்பால் செவிமுதல் இந்தியங்கள் விடயங்களும் செல்லாது**
**ஓதும் சச்சிதானந்த ஒன்றாம் பிரம்மம் அதுதன்னைப்**
**பேதமறத் தன் வடிவாகப் பெற்றான் அச்சம் அற்றானால். 32**

**பொழிப்புரை:** *எந்தப்பொருளிடத்தும் எந்த இடத்தும் உள்ள பொருளை அறியத்தக்கதானதை இந்த மனமானது அடைய மாட்டாதோ, எந்தப் பொருளினிடத்து செவி முதலான ஞானேந்திரியங்களும் விஷயங்களும் சேரமாட்டாதோ அதுவே சொல்லப்பட்ட சச்சிதானந்தமாகிய பிரம்மம் ஆகும். அந்தப் பிரம்மத்தை துவிதம் நீக்கும்படி தன் சொரூபமாக அடைந்தவனே பயமற்றவன் ஆவான்.*

**அன்புறு குரவன் அருளினால் இங்ஙன் அறிந்தவன் அயர்ந்து இருவினையால்**
**துன்புறான் துன்பம் செய்வதும் துன்பம் துய்ப்பதுமாகிய தோற்றம்**
**முன்பதாம் வேதமுடிவு வாக்கியத்தால் முளைத்த ஞானத்தினால் முற்றும்**
**இன்பமாம் தன்னது உருவமாய் இலங்கும் இறைமிகு திருவருள் அதனால். 33**

**பொழிப்புரை:** *அன்புமிக்க குருவின் உபதேசத்தால் இத்தன்மையை எவன் அறிகிறானோ அவன் புண்ணிய பாவங்களால் தளர்ந்து துன்பப்படமாட்டான். துயரப்படச் செய்கின்றதும் துயரத்தை அனுபவிப்பதுமாகிய அனைத்தும் காட்சியே ஆகும். முந்தியதான வேதாந்த மகாவாக்கியங்களாலும் தனக்கு ஏற்பட்ட அறிவினாலும் இறைவனின் திருவருளாலும் இன்பவடிவான சச்சிதானந்தம் தன்னுடைய சொரூபமாக விளங்கும்.*

**செய்வான் செய்விப்பவன் செய்யும் பொருள் செய்கருவி செய்தொழில் என்று**
**ஐவாய்ப் பொருளும் வெறும் ஆன்மா ஆகித் தோன்றும் இறையருளால்**
**எய்யா மானம் அறிபொருளும் அறிவோன் என்னப்படும் பேதம் எல்லாம்**
**மெய்யாம் இறைவன் திருவருளால் எல்லாம் தானாய் விளங்குமால். 34**

**பொழிப்புரை:** *பரசிவத்தின் அருளால் செய்வான், செய்விப்பவன், செய்யும் பொருள், செய்கருவி, செயல் என்று சொல்லுகின்ற இந்த ஐந்துவகை பொருளும் அடங்கிய எல்லாப் பொருளும் வெரும் ஆன்மாவாகத் தானே விளங்கும். இளையாத பிரமாணமும். அறிவோன் அறிபொருள் என்று கூறப்பட்ட வேறுபாடுகள் அனைத்தும் பரசிவத்தின் கருணையாலே தானாகவே விளங்கும்.*

துய்க்கும் அவன்தான் துய்ப்பிப்பான் துய்க்கும் பொருள்தான் துய்த்தல்தான்
கைக்கொள் பொருள் கொள்பவன் கொள்கை கடவுளருளால் தானேயாம்
மைக்கொள் ஞானம் ஒன்று ஒன்றா மாறுஞானம் ஐயமுறும்
துய்க்கும் ஞானம் முற்றும் இறையருளால் தானேயாய்த் தோன்றும். 35

**பொழிப்புரை:** *புசிப்பவன், புசிக்கச் செய்பவன், புசிக்கப்படுபொருள், புசித்தல், கிரகிக்கும் பொருள் கிரகிப்பவன், கிரகித்தல் இவையெல்லாம் பரமசிவன் அருளால் ஆன்மாவாகவே விளங்கும். அனுபவிக்கத்தக்க அஞ்ஞானம், விபரீத ஞானம், மாறுபடுகின்ற பிராந்தி ஞானம், அனுபவிக்கின்ற சந்தேக ஞானம் ஆத்ம சொரூபமாகவே தோன்றும்.*

கட பட குட்டிய முதலாம் இதின் ஞானங்கள் கடமது குட்டியம் குதுலம் படமது ஆகும்
தடமலை பாதாள முதல் உலகம் மற்றைச் சத்தியமே முதலான உலகம் எல்லாம்
இடவிய மாமலரன் தன் அண்டம் இத்தில் கற்பிதமாம் எல்லையில் அண்டங்கள் எல்லாம்
கடல் தடம் ஆறுகள் மற்றும் கண்டதெல்லாம் கடவுள் அருள் அதனாலே
தானாய்க்காணும். 36

**பொழிப்புரை:** *குடம் துணி சுவர் முதலான இவற்றின் ஞானங்கள் கலசம், குதிர் வஸ்திரம் விசாலமான மலை, பாதாளம் முதலிய கீழ் உலகங்கள் இன்னும் உள்ள சத்திய லோகங்கள் எல்லாம், தாமரை மலரின்கண் வீற்றிருக்கும் பிரம்மாவினால் சிருஷ்டிக்கப்பட்ட பிரம்மாண்டமும், அதிலுள்ள ஜீவ கற்பிதமாகிய அளவில்லாத அண்ட கோடிகளும், கடல், தடாகம் நதிகளும் மற்றன அனைத்தும் பரமசிவன் அருளால் ஆன்ம சொரூபமாகவே தோன்றும்.*

மேரு மந்தரம் முதலதாம் மிகுத்த மால்வரைகள்
சாரும் எல்லையின்றிய வனம் வனத்தில் உள்ளவைதான்
தாரு அந்தமில் விதங்கள் புல்புதல் எல்லாம் தானா
ஏதம் இன்றிய இறைவன் திருவருளினால் இலங்கும். 37

**பொழிப்புரை:** *மகாமேரு மந்தரம் முதலிய மிகப்பெரிய மலைகளும், எல்லை இல்லாத காடுகளும் அக்காடுகளிலுள்ள அனைத்தும், மரங்களும் அளவில்லாச் செடி கொடிகளும் புல்பூண்டுகள் அனைத்தும் பரசிவ அருளால் ஆத்ம சொரூபமாகவே விளங்கும்.*

வான் முதலாம் பூதங்கள் பௌதிகங்கள் மன்னும் ஒலி
பரிசம் உரு சுவை நாற்றங்கள்
ஊன் மருவு கிருமி கீடம் பதங்கம் உலவு பசு
விதமோடும் ஒட்டை யானை
கான் மருவு பரி கரபம் மனிதர் சித்தர் கந்தருவர் அரக்கர்
இயக்கர்கள் தாம் மிக்க
வான்மருவு தேவ கணம் எல்லாம் மற்று மா பரமன் அருளால்
தன்வடிவாய்த் தோன்றும். 38

**பொழிப்புரை:** *ஆகாயம் முதலிய ஐம்பூதங்களும், பூத சம்பந்தமான உலகாதிப் பொருள்கள், நிலைபெற்ற ஒலி தொடு உணர்வு, உரு, சுவை, மணம், தசை பொருந்திய புழு, வண்டு, பறவை, பசுவகைகள் ஒட்டகம், யானை, காட்டிலுள்ள குதிரைகள், கழுதை மனிதர்கள், சித்தர்கள், கந்தர்வர்கள், அரக்கர்கள், இயக்கர்கள், விண்ணிலுள்ள தேவர்கள் மற்றுமுள்ள ஏனைய பொருள்களும் பெருமைமிக்க பரமசிவனால் ஆத்ம சொரூபமாகவே தோன்றும்.*

**வினைமிகு விண்ணோர் விண்ணவர் விண்ணோர்**
**வேந்தனும் விராட்டுடன் சுராட்டும்**
**எனை அடைந்தவர் என் செல்வம் இயான் நெடுமால் உருத்திரன்**
**ஈசன் நற்சிவன் என்று**
**அனைவர் தம் பதங்கள் அவர்களை அடைந்தோர்**
**அவர்கள்தாம் அன்னியம் இன்றித்**
**தனை நிகர் இல்லா இறையவன் அருளால்**
**சகலமும் தானெனத் தோன்றும். 39**

**பொழிப்புரை:** *கருமத் தேவர்களும் முக்கியமற்ற தேவர்களும் தேவராசனாகிய இந்திரனும், சமஷ்டி தூல சரீர அபிமானியாகிய விராட்டோடு, சமட்டி சூட்சும சரீர அபிமானமாகிய சுராட்டும் எனது பக்தர்களும் எனது செல்வமும், பிரம்மா ஆகிய நானும், திருமாலும், ருத்ரனும், சிவனும் ஆகிய இவர்களின் பதவிகளும், அவர்களை அடைந்த பக்தர்களும் மற்றுமுள்ளோரும், தனக்கு உவமை இல்லாதவனாகிய பரசிவத்தின் அருளால் வேற்றுமை இல்லாது ஆத்ம வடிவமாகவே விளங்கும்.*

**தீதெனும் பொருள்கள் நன்றெனும் பொருள்கள் செய்யலாவன செயப்படாத**
**ஏதமாம் உடலன் இந்தியம் பிராணன் இசைமனம் புத்தி ஆங்காரம்**
**தீதறு காமம் கோபமே முதலாம் தீயன சாந்தி தாந்திகளே**
**ஆதியாம் நலங்கள் அடையவும் தானேயாகியே தோன்றும் மெய்யருளால்.40**

**பொழிப்புரை:** *நன்மை தீமை என்று சொல்லப்பட்ட பொருள்களும், செய்யப்பட்டவைகளும், செய்யப்படாதவைகளும், குற்றம் பொருந்திய இவ்வுடலும், இந்திரியங்களும், உயிரும், மனம், புத்தி, அகங்காரமும், தீமையான காமமும், குரோதம் முதலிய தீமைகளும், சமம், தமம் முதலானவைகளும், நன்மைகளும் சத்தியப் பொருளான ஆத்ம சொரூபமாகவே விளங்கும்.*

**பேதமாம் சீவ பரங்களும் அவர்கள் பேதமும் பேதிக்கும் அதுவும்**
**போதமில் சட சத்தியும் அதன் பிதையும் போத சத்தியும் அதன் பிதையும்**
**ஓதும் உண்டு இல்லை என உரையில் உள்ளதாம் பொருள்களும் இலாதும்**
**இயாதும் இவ்விறைவன் அருளினால் தன்னது ஏகமாம் உருவமாய் எறிக்கும்.41**

**பொழிப்புரை:** *பேதமுடைய சீவேசுவரர்களும் அன்னவர்களின் பேதமும் அவர்களைப் பேதப்படுத்தும் உபாதிகளும், அறிவில்லாத சடசத்தியும் அதன் பேதங்களும், ஞான சத்தியும் அதன் பேதங்களும் அஸ்தி நாஸ்தி என்று கூறும் உரையில் உதிக்கின்ற*

*பொருள்களும், இல்லாத பொருள்களும் இப்பரமசிவன் அருளால் தனது ஏகமாகிய சொரூபம் ஆகியே விளங்கும்.*

தன்னது ஒளியால் தான்விளங்கப் படுவான் ஆன்மா எனத் தகுவான்
அன்னவனையே நான் நீ என்று அறியாநின்ற அவ்வுளத்தே
உன்ன அரிய அவன் தன்னது உண்மை உணரார் ஒருவர்களும்
பின்னம் இல்லாமையில் அறிவார் தாமும் அறியப் பெற்றிலரால். 42

**பொழிப்புரை:** *தனது பிரகாசத்தால் தானே விளங்குபவன் ஆன்மா என்று கூறத் தகுவான் அந்த ஆன்மாவையே நான்,நீ என்று உணருகின்ற அந்த உள்ளத்தில் தானே நினைக்க அரிதான அந்த ஆன்மாவின் உண்மையை ஒருவர்களும் அறியமாட்டார்கள். ஏன் அறியமாட்டார்கள் எனில் ஆன்மாவுக்கு வேறாக வேறு ஒன்றும் இல்லாமையினால் பின்னப் பொருள்களையே அறிந்தவர்களும், அறியும் தன்மையை அடையாமல் போனார்கள்.*

அயல் தானின்றித் தன்னைத்தான் ஆன்மாவாக அறிவுற்றோன்
இயல்பால் இந்தப் பொருளினையே என்றும் பாடி இருக்குமால்
இயல்பு ஆராலும் அறிவரிய ஈசன் நடம்போல் யாவர்க்கும்
நயமார் ஞான வினோதன் தன் கீதம் நலமே நல்கிடுமால். 43

**பொழிப்புரை:** *வேரில்லாமல் தான் தன்னைப் பரமாத்மாவாக அறிந்தவன் அந்த இயல்பால் இப்பொருளினையே தினமும் பாடிக்கொண்டு இருப்பான். தன் சுபாவத்தை எவராலும் அறிய இயலாத பரசிவத்தின் திருநடனம் போல இன்பம் பொருந்திய ஞானகீதம் யாவர்க்கும் இன்பம் நல்கும்.*

அன்பினால் எம் ஆதி குருவாகும் இறைவன் அருள் கீதை
இன்பமே செய்திடல் உலகுக்கு இயல்பாம்எவ்வாறு அவ்வாறே
முன்புபரமன் திருவாக்கால் மொழிந்தகீதைப் பொருளான
பின்பு இக்குரவன் அருள்கீதை பேரா இன்பம் பிறப்பிக்கும். 44

**பொழிப்புரை:** *எமது ஆதி குருவான பரமசிவன் அருளால் பரமசிவன் திருவாய் மலர்ந்து அருளிய அருள்கீதையானது உலகத்துக்கு சுகத்தையே செய்வது எப்படி இயல்பாகுமோ அப்படியே முற்காலத்தில் பரமசிவத்தின் திருவாக்கால் உரைத்து அருளிய அந்தக் கீதையின் அர்த்தமாகிய பிற்காலத்தில் இந்த ஆசிரியன் மொழிந்தருளும் கானமானது நீங்காத சுகத்தை உண்டாக்கும்.*

உலகியல்பாம் கீதைக்கும் உவந்துஅருளும் இறைஎன்றால்
இலகிய வைதிக கீதைக்கு ஏன்செய்யான் இறைஅதனால்
நலமிகுத்த பொருள் வேண்டில் நலமிகு பத்தியினோடும்
பலமிகுநற் கீதைகளே எப்போதும் பாடுவான். 45

**பொழிப்புரை:** *உலகியல் சம்பந்தமான கானத்திற்கே சிவபெருமான் உவந்து அருள்புரிவான் என்றால் வேத சம்பந்தமான வைதீகக் கானத்திற்கு பரசிவன் ஏன்*

*அருள்பாலிக்க மாட்டான். அதனால், நலமிகுந்த நல்ல கானங்களையே எப்போதும் பாடுவான்.*

**அறையும் மறையால் ஆகமத்தால் அறியான் ஆகின் மற்றுந்தான்**
**அறிவது ஒரு பாடையினாலே அறைவான் என்றும் அமைவுறவே**
**இறையை அடைதற்கு ஏதுஇது இதனால் பரம யோகுஎய்தும்**
**பிரிவொன்றுஅறவே சிவன்தன்னை யோகத்தாலே பெறலாமால். 46**

**பொழிப்புரை:** *சொல்லப்படும் வைதீக கானத்தாலும் வியாக்கியானத்தாலும் அறியும் திரம் இல்லாதவனாகில், தனக்குத் தெரிந்த ஏதாவது ஒரு மொழியினால், பரமசிவனைக் குறித்துக் கானம் செய்து கொண்டிருப்பானேயானால் இறைவனை அடைய இது ஏதுவாகும். இந்த யோகத்தினால் பரசிவனை ஒரு பேதமும் இல்லாமல் அடையலாம்.*

**கீதைசெய்தோன் யோகத்தால் கீழ்ச்செய்வினையின் பெருமையினால்**
**பேதமில்லான் தனைக்கூடப் பெறாதேவிடினும் பின்சென்றான்**
**ஆதலாலே இறைகீதை அல்லாது எல்லாம் கைவிடுவான்**
**பேதமையினால் செய்தானேல் பிராயச்சித்தம் செயவேண்டும். 47**

**பொழிப்புரை:** *இப்படிக் கானம் செய்தவன் யோகத்தாலும், முற்பிறவியில் செய்த நல்வினையின் மிகுதியிலும், இரண்டற்றவனான பரமசிவனை இப்பொழுது அடையப்பெறாது போனாலும் பின்பு அடையக் கடவான். எனவே பரமசிவனின் கானத்தை அன்றி, அறியாமையால் வேறு கானங்கள் எல்லாவற்றையும் கைவிடக்கடவன். அறியாமையினால் செய்தவற்றிற்குப் பிராயச் சித்தம் செய்ய வேண்டும்.*

**ஆதலால்பிறவி அறுக்க ஆதரிப்போன் அருமறைப் பிரமாணத்தாலும்**
**தீதிலாத்தர்க்க நெறியதனாலும் சிவனுடை உணர்வுபெற்று அதுவே**
**கீதமே செய்வான் உபனிடமதனில் கிளத்தியபொருள் இதுஇப் பொருளைத்**
**தீதிலாச் சிவன்நற்பத்தருக்கு உரைக்க, அல்லவர்தமக்கு உரையீரே. 48**

**பொழிப்புரை:** *ஆகையால் பிறவிப் பெருந்துயரை ஒழிக்க இச்சை கொண்டவன் அறிதான வேத அளவை நூல்களிலும் குற்றமிலாத் தருக்க வழியானலும் பரசிவ ஞானத்தை அடைந்து அதையே கானம் செய்வான். உபநிடதங்களில் சொல்லியுள்ள பொருள் இதுவே. இந்தத் தத்துவங்களை சிவநேசம் இல்லாதவர்களுக்குச் சொல்லவேண்டாம். தீதிலா சிவ பெருமானிடம் பக்தியுள்ள நல்ல அடியார்களுக்கு உபதேசிக்க வேண்டியது.*

**மூன்றாவது ஐதரேய உபநிடதசேடமும் தைத்திரிய உபநிடத தாற்பரியமும்**
**உரைத்த அத்தியாயம் முற்றிற்று.**

## நான்காம் அத்தியாயம்

# கேனோபநிடத தாற்பரியம் உரைத்த அத்தியாயம்

வான்தொடங்கி மலர்ந்தன யாவைக்கும்
சான்றதாம் அறிவைத் தன் அருளினால்
தோன்று சோதியைச் சொல்லுவன் என்று எலாம்
ஈன்றவன் இமையோர்கட்கு இயம்பினான். 1

**பொழிப்புரை:** *ஆகாயம் முதல் தொடங்கி அதிலிருந்து உருவான எல்லாவற்றிற்கும் சாட்சியாய் விளங்கும் பிரம்மத்தைத் தன் அருளினால் தானாகவே ஒளிரும் சோதியை எல்லா உலகங்களையும் படைத்த நான்முகன் தேவர்களுக்குக் கூறினான்.*

தானே உளனாய் எப்போதும் எல்லாப் பொருட்கும் சான்றாகி
ஊன்ஏய் பவசாகரத்து உற்றோர்க்கு உடன் தாரகமாகிய உம்பர்
கோனே நியமித்திட மனமும் குறித்து விடயங்களில் செய்கை
தானே சேட்டை செய்யாது பிராணன் இறைவன் தன்னாலே. 2

**பொழிப்புரை:** *தானாகவே விளங்குகின்றவனாய் எல்லாக் காலங்களிலும் எல்லாப் பொருள்களுக்கும் சாட்சியாகி, அப்பொழுது ஆதாரமாய் விளங்குகின்ற பரசிவன் அவர்களை நடத்துதல் கருதி மனம் கொண்டு, விடயங்களில் செல்வது தானாகவே பிராணன் தொழிற்படாது இறைவனை தொழிற்படச் செய்கின்றான்.*

நா உரைப்பதுவும் செவி உரைப்பதனை நலம்பெறக் கேட்பதும் நயனம்
மேவு உருத் திகழக் காண்பதும் மற்றும் வேறுள்ள இந்தியங்களும் அத்
தேவனால் தத்தம் விடயமேல் சொல்லப் படுவது இங்கு இவை செலுத்திடல் அத்
தேவ மாயையினால் அன்றி உண்மையில் அத்தேவனுக்கு இல்லை தெரியில். 3

**பொழிப்புரை:** *நாவானது சொல்லுவதும் செவியானது கேட்பதுவும் கண்கள் உருவங்களைப் பார்த்து விளங்கிக் கொள்ளவும் மற்ற இந்திரியங்களும் அந்த இறையால் தத்தம் விடயங்களில் செல்கின்றன. அந்தப் பரசிவனுடைய மாயையினால் தானே அன்றி, உண்மையில் அந்தப் பரசிவத்துக்கு இல்லை.*

இந்தியங்களுக்குச் சத்தை இல்லையே இவற்றின் சத்தை
செந்தழல் அயம்போல் உள்ள தேவனால் உள்ள சத்தை
தொந்தமில் பரன்தாள் தன்னில் சோத்திரம் தன்னைக் கற்பித்து
அந்த அத்தன்மை உண்டா அளிக்கும் அங்கு அனுவேசித்து. 4

**பொழிப்புரை:** *இந்திரியங்களுக்கு இயற்கையாக இருப்பு இல்லை. இவ்விந்திரியங்களில் தோன்றுகின்ற இருப்பு, தணல் போல் விளங்குவது போல என்றும் உள்ள பரசிவனிடம் பொருந்திய இருப்பே இரண்டற்றதான பரசிவனானவனால் பொருந்தியது தான் தன்னிடத்தில் செவியைத் தோற்றுவித்து அதில் அச்செவியின் தன்மை உண்டாகும்படி அத்தொழிலைச் செய்கிறான்.*

தன்னில் கற்பித மனத்தை அனுவேசித்துச் சத்துவத்தில்
நின்று மனத்தன்மை நல்கும்
நண்ணுற்ற கற்பிதமாம் நாட்டம் தன்னை நாட்டமாம்
தன்மை பெற நல்கா நிற்கும்
மன்னுற்ற பிராணனுக்குப் பிராணனாகை வாக்குக்கு
வாக்காகை மற்றும் உண்டாய்ப்
பன்னுற்ற கற்பிதமாம் கருவிகட்கும் பரிசு அனுவேசித்து
அளிக்கும் பரமன் தானே. 5

**பொழிப்புரை:** *தன்னிடத்தில் கற்பிதமான மனத்தை உட்புகுத்தித் தான் சத்துவத்தில் இருந்து கொண்டு அதற்கு மனத்தன்மையைக் கொடுக்கிறான். அவ்வாறே கற்பிதமாய்ப் பொருந்தியுள்ள கண்ணை அதற்குப் பார்வையையும் உட்புகுத்திக் கொடுக்கிறான். நிலைபெற்றுள்ள பிராணனுக்குப் பிராணத் தன்மையும் வாக்கு இந்திரியத்துக்கு வாக்குத் தன்மையும் மற்றும் உள்ள இந்திரியங்களுக்கும் அவற்றின் தன்மையைப் பரசிவனே உட்புகுத்திக் கொடுக்கிறான்.*

வாக்கும் மனமும் கண்ணும் மற்றுள இந்தியங்களுமே
நோக்கரிய பரஞ்சுடரை நோக்கி இவை செலமாட்டா
தாக்கில் பரம்பரன் அறியில் தான்வேறாம் அறியாதே
போக்கு பொருளினும் வேறாம் பரன் அரிய பொருள் அன்றோ. 6

**பொழிப்புரை:** *வாக்கு, மனம், கண் மற்றுமுள இந்திரியங்களும் காண்பதற்கு அரிதான பரசிவனை எதிரிட்டு இவ்விந்திரியங்கள் செல்லமாட்டா. சென்று அடைந்தாலும் அறிந்தால் அந்தப் பரம்பொருளின் வேறானவன், அறியாமல் விடுத்த பொருள்களுக்கும் வேறானவன் அந்தப் பரசிவன் அறிதற்கு அரிய பொருள் அல்லவா?*

வாக்கு மனம் கண் செவியால் மன்னி நின்ற பிராணனால்
நீக்கியுள காரணத்தால் நின்மலன் கோசரிக்க உறான்
பார்க்கரனுக்கு உருவம் போல் பகர் பொருளெலாம் திகழ்வது
ஆக்க அதனைச் சனாதனமாம் பரப்பிரமம் என அறிமின். 7

**பொழிப்புரை:** *வாக்கினாலும், மனத்தினாலும், கண், காது முதலியவைகளாலும் நிலைபெற்று இருக்கின்ற பிராணனாலும் இவையன்றி அந்தக் கரணத்தினாலும் மலமற்றவனான சங்கரன் பாதிக்கப்பட மாட்டான். சூரியன் ஒளிக்கு முன் எல்லாப் பொருள்களும் விளங்குவது போல சொல்லுகின்ற எல்லாப் பொருள்களையும் பிரகாசிக்கச் செய்கின்ற பரம்பொருளை சனாதனமாய் உள்ள பரப்பிரம்மம் என்றே நீங்கள் அறியுங்கள்.*

ஆன தர்க்கத்தால் மனத்தால் குரவன் அருளினால் அனுபூதி அதனால்
ஞான மெய்ப்பொருளை அறிந்திடும் அவரே நலம்பெறு முத்தர் ஆனவர்கள்
ஊனம் அற்று அந்தத் தற்பரம் விளங்க உணர்ந்திடப்பட்டது என்று உணரில்
தான் அனைத்தினுக்கும் சாட்சியாம் பிரமம் தான் அறிபொருளுமாய் அசத்தாம்.
8

**பொழிப்புரை:** *யூகமான தருக்கத்தினாலும் வேதப்பிரமாணத்தாலும் சற்குரு கடாட்சத்தாலும் சுவானுபூதியினாலும் சத்திய ஞான சொரூபத்தை அறியும் தீரர்களே நன்மையுடைய முத்தர் ஆனவர்கள். களங்கம் இல்லாமல் அந்தப் பிரம்ம சொரூபம் நன்றாக அறியப்பட்டது என்று உணர்ந்தால் தானே அனைத்திற்கும் சாட்சியாக விளங்கும் பிரம்மமானது தன்னாலே அறியப்பட்ட பொருளுமாகி அசத்தாகிவிடும்.*

தனக்கு மெய்ப்பிரமம் விடயமாய் இராமல் தான் அதன் சாட்சியாய் இராமல்
தனில் பிரிதறத் தானாக அப்பரத்தை அறிந்தவன்தான் அறிந்தவனாம்
தனில் பிரிந்தறியாதவன் அறிந்தவனாம் அறிந்தவன் தான்அறிந்திலனாம்
உனற்கு அரும் பிரமம் உணர்ந்தவர்க்கு உணர்வன்று உணர்வுறார் தமக்கு
உணர்ந்ததுவாம். 9

**பொழிப்புரை:** *அதிகாரியாகிய தனக்கு உண்மையாகிய பிரம்மப் பொருளானது விஷயமாய் இராமலும் தான் அந்தப் பிரம்மத்தை அறிகின்றவனாக இராமலும் தன்னில் வேறு இல்லாமல் தானாகவே அந்தப் பிரமத்தை எவன் அறிந்தவனோ அவனேதான் அறிந்தவனாகிறான். அந்தப்பிரமத்தைத் தன்னில் வேறாக அறியாதவன் அறிந்தவன் ஆவான். இதற்கு அன்னியமாய் அறிந்தவன் அறியாதவன் ஆவான். நினைக்க முடியாத அந்தப் பிரம்மமானது அறிந்தவர்க்கு அறிந்ததல்ல. அவ்வண்ணம் அறியாதவர்களுக்கு அறிந்ததாகும்.*

பித்தாம் ஞானம் கடஞானம் பிரமஞானம் எனும் இவற்றில்
கத்தா அன்று பரப்பிரமம் கன்மம் தானும் அன்று வெறும்
சித்தாம் இதனைத் தெரியாமல் கத்தாவாகச் சிந்தித்தல்
பித்தாம் அகர்த்தாவாய் அறியப் பெற்றான் அறியப் பெற்றானாம். 10

**பொழிப்புரை:** *பித்து ஆகின்ற ஞானம், கடஞானம், பிரம்ம ஞானம் என்று சொல்லும் இவைகளுக்குள் பரப்பிரம்மமானது கர்த்தாவும் அன்று கருமமும் அன்று. வெறும் சித்தாம். இந்தப் பிரம்மத்தை அறியாமல் கருத்தாவாக நினப்பது பிராந்தியாகும். எவன் அகர்த்தாவாக அறியப் பெற்றவனோ அவனே அறியப் பெற்றவன் ஆகின்றான்.*

தர்க்கம் மானம் தான் ஒழியத் தானாய் உள்ள பேரொளியை
மிக்க கருத்தா ஆகுதலும் விடயம் ஆகுதலும் ஒழியப்
பொக்கம் அற வேறறக் கண்ட பொழுது புரைதீர் பொருளான
தக்க பிரம தத்துவத்தைக் கண்டான் ஆகும் தானாக. 11

**பொழிப்புரை:** *தர்க்கம் வேதப் பிரமாணம் இவைகள் நீங்கத் தானாகவே விளங்குகின்ற பிரம்மத்தை மிகவும் கருத்தா ஆதலும் விடயம் ஆகுதலும் நீங்க பொய்யில்லாமலும்*

*அன்னியம் இல்லாமலும் காணும் பொழுதும் குற்றம் நீங்கிய பொருளாய் விளங்கிய தகுந்த பிரம்ம தத்துவத்தை தானாகவே கண்டவன் ஆவான்.*

நோக்குறாத மெய்ஞ்ஞானமும் காட்சியாய் நோக்கவும் பட்டுத் தான்
சாக்கியாய் அறிந்திடுபவன் எங்ஙனே தத்துவ வித்தானான்
தாக்கிலாப் பரவிச்சையும் சனிக்குமேல் சடமதாம் கடம்போலப்
பார்க்கில் அந்த விச்சையின் புணர்ப்பால் உணர்பொருளதாம் பரன்தானும். 12

**பொழிப்புரை:** *பார்க்கப்படாத இந்தப் பரஞானமும் காட்சியாய் நோக்கவும் பட்டு தான் சாட்சியாகவும் இருந்து அறிபவன் எங்கே பிரம்ம சொரூபத்தை அறிந்தவன் ஆயினான். சம்பந்தம் இல்லாத பரஞானமும் பிறக்குமானால் கடம்போலச் சடமாகிவிடும். கூர்ந்து பார்த்திடில் அந்தக் காட்சி ஞானத்தின் சம்பந்தத்தால் பரம சிவமும் உணர் பொருளாகின்றதாகும்.*

விச்சை உள்ளவன் விசேடவானாம் பரதத்துவம் அவிசேடம்
விச்சை உள்ளவன் ஆதலால் தத்துவவித்து அலன் விச்சைக்கண்
துச்சமுற்று உளதாகுதல் விடயமாய்த் தோன்றுதல் செய்யாது
சச்சிதானந்தம் அப்படிஇராதெனில் தற்பரம் ஆமோதான். 13

**பொழிப்புரை:** *பரவித்தை உடையவன் விசேடவான் ஆவான். பிரம்மம் ஆனது நிர் விசேடம் ஆகையால் இந்தப் பரவித்தை உள்ளவன் ஆத்தும வித்து ஆகான். இந்த பிரம்மமானது வித்தையினிடத்தில் கீழ்மை பொருந்தி அதற்கு உற்று உளதாகுதல் விடயமாகத் தோன்றுதல் செய்யாது. சத்சித் ஆனந்தமான அந்தப் பொருள் அவ்வாறு இராவிடின் எப்படிப் பிரமம் ஆகும்.*

ஆதலால் விஞ்சையால் அறிவுறுதற்கு ஆவது அன்றாகில் அப்பரம்தான்
ஏதினால் அறியப்படும் அறிவுறுவதற்கு ஏவனால் ஆம்இமையவர்கான்
காதலால் பரத்தில் கற்பிதமாயை கழியுமேல் பரம்பரன் கண்ஓர்
ஏதமாமாயை இல்லைஉண்டாகில் இருக்குமோ இரவிமுன் இருள்தான். 14

**பொழிப்புரை:** *அவித்தையானது பிரம்ம சம்பந்தியில்லாதது ஆகையால், பிரம்ம ஞானத்தினால் அறியப்படுவதல்ல. ஆனால் அப்பிரம்மமானது எதனாலோ தான் அறியப்படும். தேவர்களே எவனாலே அறியலாகும் எனில் மிகுந்த ஆசையினால் பிரம்மத்தின்கண் கற்பிதமான மாயையானது ஞானத்தினால் நீங்குமேல், பரம்பரன்கண் ஒரு குற்றமுடைய இருளாகிய மாயைக்குச் சம்பந்தம் இல்லை. உங்கள் மதிக்கேற்ப உண்டாய் இருக்குமானால் சூரியன் முன்பு இருட்டானது இருக்குமா?*

ஆதலால் மாயைதர்க்க மானத்தால் ஆனுபாவத்தினால்தானே
சோதிஞானச் சிற்கனச்சுடர் முன்னர்தோன்றிடாது அவிச்சை விச்சைகள்தான்
ஓதுமாத்திரமாம் உலகுரை வழக்கத்து உள்ளன உண்மையில் இல்லை
ஏதமாம் உலகவழக்கமும் ஒளியாய் இலங்கலால் அபேதமேஎன்றும். 15

**பொழிப்புரை:** *ஆகையால் தர்க்கப் பிரமாணங்களாலும் சுவானுபூதியினாலும் மாயை என்பது சுயமாகவே ஞானப்பிரகாச சித்தின் பரமான்மாவின் முன்பு உண்டாக மாட்டாது. வித்தை, அவித்தையெனும் இவ்விரண்டும் சொல்லளவே ஆகிய உலக விவகார வழக்கத்தில் இருக்கின்றனவாம், பரமார்த்திக திருஷ்டியில் இல்லையாம். குற்றமாகிய லோக விவகாரமும் ஆனமப் பிரகாசமாகவே விளங்குவதனால் எப்பொழுதும் அத்துவிதம்தான்.*

வேறுஇல் அத்துவிதம் என்பதும் ஒளியில்வேறு இலாமையில் உளதுஒளியே
கூறல் அற்றிடலால் இப்பொருள் கூடும்கூடுவது அளவையினாலும்
ஊறுஇல் தர்க்கத்தால் மறைகளால் குரவன் உபதேசத்தால் இறைஅருளால்
ஈறுஇல் மாதவத்தால் காலபாகத்தால் அப்பொருள் புருடனுக்கு எய்தும். 16

**பொழிப்புரை:** *பின்னமில்லாத அத்துவிதம் என்பதும் ஆனம்ப் பிரகாசத்திற்கு வேறாக இல்லாததனால் எப்பொழுதும் உள்ளது அந்தப் பிரகாசமேதான். இந்தப் பொருளானது மௌனத்தினால் ஒருவனுக்குச் சித்திக்கும். அப்படிச் சித்திப்பதும் பிரத்யட்சம் முதலிய பிரமாணங்களாலும், குற்றமில்லாத தருக்கத்தினாலும், ஆசாரியன் உபதேசத்தினாலும் ஈசுவர கிருபையாலும், பல பிறவிகளில் செய்த அழிவில்லாத பெருமை பொருந்திய தவத்தாலும், கால பரிபாகத்தாலும் அங்கப் பொருளானது ஒரு புண்ணிய புருஷனுக்குச் சித்திக்கும்.*

ஓதும் இப்பரம் பொருள் உணர்ந்தவன் செய்வது
ஏதும் இல்லை ஞானமும் இலைஇரண்டு இலாமையினால்
நீதிவன்ன ஆச்சிரமும் நிடேதமும் விதியும்
சாதிநல்வினை தீவினை சகலமும் இலதே. 17

**பொழிப்புரை:** *இப்பொழுது சொல்லப்பட்ட இந்த மேலான பரம்பொருளை சுவானுபூதியால் அறிந்தவன் எவனோ அவனுக்கு செய்யத் தக்க கருமம் யாதொன்றும் இல்லை. அவனுக்கு இரண்டு இலாமையால் ஞானமும் இல்லை. நீதியும் வர்ணாசிரம தர்மமும், விலக்கும் விதியும், சாதியும் புண்ணிய பாவமும் மற்ற அனைத்தும் இல்லை.*

இந்தப் பரமாம்பொருள் இறைவன் அருளால் யாவன்பெறும் அவன்தான்
அந்தப் பரமனே என்றுஎன் அறிவில் திகழ்வது அவன்பெருமை
சிந்தித்திட ஒண்ணாது என்னால் செய்யப்படும் அத்தேவர்களால்
சந்தப்படும் மாலால் அரனால் சாற்றும் தன்மை சாராதால். 18

**பொழிப்புரை:** *இந்த மகத் ஆகிய பிரம்மப் பொருளை சிவன் அருளால் எவன் அடைகிறானோ அந்த மகான் அந்தப் பரமனே என்று என் அறிவில் விளங்குகின்றது. அவனுடைய மகிமையை என்னாலும் நினைத்து அளவிடுதற்கு முடியாது.என்னால் படைக்கப்பட்ட அத்தேவர்களாலும் அழகு பொருந்திய திருமாலும் உருத்திரனாலும் சொல்லும் தரம் உடையதன்று.*

இந்த ஆக்கையில் இயம்பிய பரம்பொருள் அறியில்
அந்தமானுடன் மெய்யதாய் அபேதமாய் அழிந்த
தொந்தமாம் பரம் அடைந்திடும் தோன்றிடாது ஆகில்
அந்தமாம் பவக்கடல் படும்பரகதி அடையான். 19

**பொழிப்புரை:** *இந்தமானுட தேகம் இருக்கும் போதே முன் சொல்லப்பட்ட பரம்பொருளை அறியப் பெற்றிடில் அந்தப் புண்ணிய புருஷனே உண்மையாயும் பேதம் இல்லாததாயும் துவிதம் நீங்கியதான பரத்தை அடைந்திடுவான். அந்த அறிவு தோன்றாமல் போனால் பந்தமாகின்ற பிறவிப் பெருங்கடலில் அகப்படுவான். வீடுபேறு அடைய மாட்டான்.*

தங்கள் ஆக்கையில் சகலயாக்கையினிலும் தத்துவம் அதுதானே
எங்கும் ஒன்றெனக் காண்பவர் யாவர்இங்கு இறந்திடார் பிறவாமல்
பங்குபட்டு அறிந்தவன் அறியாதவன் பந்தன் முத்தர்கள் என்றே
இங்கு ஒருத்தனே நிகழ்பவன் சேதனன் இவைகனவு இயல்புஒக்கும். 20

**பொழிப்புரை:** *தங்கள் உடலிலும் எல்லா உடல்களிலும் மற்ற எல்லா இடத்திலும் பிரம்ம சொரூபம்தான் ஏக சுபாவமாக விளங்குகின்றது என்று அனுபவித்து அறிபவர்கள் எவர்களோ அவர்கள். இவ்விடத்து சாகாதவர்களும் பிறவாதவர்களும் ஆவர். பிரித்து அறிந்தவன் என்றும் அறியாதவன் என்றும், அறியாதவன் என்றும் பெத்தன் என்றும், முத்தர்கள் என்றும் சொல்லப்பட்டு சேதனன் ஆகிய அவன் ஒருவன் இவ்விடத்தில் விளங்குகின்றவன். மேற்கூறிய அனைத்தும் கனவின் தன்மையை நிகராகும்.*

தன்னில் வேறு இலாமையில் பரமுத்தியில் தனது புத்தியினாலே
அன்னியங் களாய்த் தோற்றும் ஆபாசர்க்கும் பரம்பதம் அறிகின்றான்
முன்னம் எப்படிமூடமாம் திசையில்தன் மோகத்தால் எல்லாம் பெத்தம்
என்ன உற்றனன் முத்தியில் அப்பரிசு இருக்கும் அதுஇயல்பேயாம். 21

**பொழிப்புரை:** *தன்னைத்தவிர வேறு இல்லாததனால் உயர்ந்த முத்தி திசையில் அந்தக் கரண விருத்தியால் அன்னிய சரீரங்களாகத் தோற்றுகின்ற சீவர்களுக்கும் தெளிந்த தனது புத்தியால் முத்திதிசையை உணர்கின்றான். தான் முத்தி அடைதற்கு முன்னமே எவ்விதமாக அஞ்ஞான திசையில் தனது பிராந்தியால் அனைத்தையும் சமுசார பந்தம் உடையதென்று இருந்தானோ முத்தி திசையிலும் அப்படியே எல்லாரையும் முத்தர்கள் என்றே அறிந்திருப்பான். அப்படி அறிதல் சுபாவமேதான்.*

ஒருகாலம் முன்செய்வினை அளவும்யோகி உயிர்உலகு
ஆதியைக் காண்பான் ஒருகால்காணான்
ஒருகாலில் தோற்றம் எல்லாம் பரமாய்க்காணும் உளபரிசேயாய்
ஒருகால் ஒன்றும் காணான்
துரிசான சகரூபம் தோன்றும்போது துக்கங்களும்
ஆபாதித்துத் தோன்றும்
பரமாகத் தோன்றுபொழுது ஆபாதித்துத் தோன்றாது
துக்கசுகம் பரமே தோன்றும். 22

**பொழிப்புரை:** *முன்செய்வினை அளவும் ஒரு காலத்தில் சிவயோகி என்னும் பிரம்ம வித்தானவன் உயிர்கள் உலகம் முதலியவற்றைக் காண்பான். ஒருகாலத்தில் காணமாட்டான். ஒருகாலத்தில் தோன்றுகின்ற எல்லாவற்றையும் பிரம்ம சொரூபமாகவே பார்ப்பான். ஒரு காலத்தில் உள்ளபடியே ஆகி அன்னியமான ஒன்றையும் காணமாட்டான். குற்றமான உலக ரூபம் தோன்றும் காலத்தில் துன்ப இன்பங்களும் ஆபாசமாகத் தோன்றாது. பிரம்மமே விளங்கும்.*

தத்துவஞானி காணிலும் சகத்தைக் கண்டிலன் தத்வமே கண்டான்
வத்துவேயாக அல்லவே யாகமற்றொரு பொருள்இலை ஆனால்
இத்தில் வேறொன்றை எங்ஙனம் காண்பான் யாதொரு படிசகத்தாகத்
தொத்தரவில்லாத் தோற்றம் எப்படியோ அப்படி நிகழ்வது பரந்தான். 23

**பொழிப்புரை:** *பிரம்ம வித்தானவன் உலகத்தை கண்டாலும் காணாதவன் தான். தத்துவ ரூபமான பிரம்மமாகவே கண்டவனாவான். பரமார்த்திகமாய் ஆவது வியாவகாரிகமாயாவது பிரம்மத்துக்கு அன்னியமாக ஒருபொருளும் இல்லாதது ஆகுமானல் இதில் எப்படி உலகத்து வடிவாக வேறொரு பொருளை அவன் எங்கே காண்பவன் ஆவான். தொந்தரவு இல்லாத அவனது தோற்றம் எவ்வண்ணமோ அவ்வண்ணமே பிரம்மமானது விளங்குகின்றது.*

எப்படித்தோற்றம் அப்படியாகி இலங்குவது உண்மையே யோகிக்கு
அப்படி உண்மையாகவே தெளிவுற்று அறிவதே ஆன்ம வேதனம்தான்
செப்புநாமத்தால் உண்மையில் எல்லாத் திகழ்வும் மாதவனே ஆகில்
இப்படிஅறிந்த ஞானிகைக் கொள்வான் எத்தைஅன்று எனஎத்தை விடுவான்.
24

**பொழிப்புரை:** *யோகிக்கு எப்படிக் காணப்படுகிறதோ அப்படியே ஆன்ம சுபாவம் விளங்குவது மெய்தான். அந்தப்பிரகாரம் மெய்யாகவே தெளிவடைந்து அறிவதே ஆன்ம தரிசனமாகும். சொல்லுகின்ற நாமத்தினாகும் அதன் உண்மைப் பொருளாலும் எல்லாத் திகழ்வும் பிரபுவாகிய மகாதேவரது விளக்கமே ஆகுமானால் இவ்விதமாக உணர்ந்த ஞானியானவன் எந்தப் பொருளைக் கிரகிப்பான். எந்தப் பொருளைக் கிரகிப்பான். எந்தப் பொருளைக் கிரகிக்கத்தக்கதன்று என்று தள்ளுவான்.*

அன்னியமாக விடுதல் பற்றுதல் உண்டாகுமேல் பூரணனாகப்
பன்னிய பெருமைக்கு ஆனியாம் அந்தப்பரமனது இயல்பழுதுறாதே
தன்னில் வேறு இன்மையால் மகத்துவமும் தன்மமோ தன்மதன்மிகளாம்
பின்ன வாசகமும் இப்பரம்பொருளில் பேதம் உண்டாகிலே பிறக்கும். 25

**பொழிப்புரை:** *அந்த மகா தேவனுக்கு வேறாகத் தள்ளுவதாகவும், கொள்ளுவதாகவும் ஏதேனும் இருக்குமாகில் சுயம்பூரணன் என்று சொன்ன மகத்துவத்துக்கு குறை உண்டாகும் அந்த மகாதேவனது, இயல்பானது ஒரு நாளும் கெடத்தக்கது அல்லவே. தன்னைத் தவிர வேறு இல்லாததனால் அந்த மகாதேவனது மகத்துவமும் தர்மமாகுமே தர்ம தர்மிகளாகச் சொல்லுகின்ற பேத வார்த்தையும் இந்த மகாதேவனிடத்தில் பேதத்தன்மை இருந்தால் அல்லவா உண்டாகும்.*

பேதமும் அபேதம் தானும் பேதாபேதமும் வேறல்ல
ஓதில் அப்பரத்துக்கு என்றும் உள்ளது பிரமம்தானே
தீதாக நன்றேயாகச் சிவன் அலாதது இல்லை ஞானி
ஏதுஆகும் என்று கொள்வான் ஏதுஆகாது என்று நீப்பன். 26

**பொழிப்புரை:** *சொல்லுங்கால் பேதமும். அபேதமும் பேதாபேதமும் ஆகிய இவைகள் அந்தப் பரமாத்மாவுக்கு அன்னியம் அல்லவாம். பிரம்மம் ஒன்று தானே எக்காலத்தும் இருக்கின்றது. தீமை ஆயினும் ஆகுக. நன்மை ஆயினும் ஆகுக. அவை பரமசிவனன்றி வேறில்லை. இப்படியானால் சிவஞானியான எதனைத் தனக்கு ஆகும் என்று ஏற்றுக் கொள்ளுவான். எதனைத் தனக்கு ஆகாது என்று புறந்தள்ளுவான்.*

எப்பொருளும் மாயையினால் எனச்சிலர் இயம்புவார்கள்
மெய்ப் பரமன்தனை ஒழிய வேறொரு மாயையும் இல்லை
ஒப்பரிய பரனொழிய ஒருமாயை உண்டாகில்
அப்பரமன் பெருமைக்கு அதுநேரே அழிவன்றோ. 27

**பொழிப்புரை:** *எந்தப் பொருள்களும் மாயையினாலே உண்டாயிருக்கின்றன் என்று சிலர் சொல்லுவார்கள். உண்மையான பரமசிவனைத்தவிர மற்றொரு மாயையும் இல்லை. உவமை உண்டாயிருக்குமானால் அவ்விவகாரமானது அந்தப் பரமசிவனது மகத்துவத்திற்கு பிரத்யட்சமாகவே கெடுதல் அல்லவா.*

பெருமையினில் சங்கோசம் பிறவாது பிறக்கும் எனில்
அருமறை வாக்கியம் பொய்யாம் அப்பிரமான முமாகும்
பொருவில் பரானந்த பரிபூரண மெய்ச் சுடராகும்
தெரிவரும் மாதேவன் அலால் திகழ்வது ஒரு சிறிதும் இலை. 28

**பொழிப்புரை:** *மகத்துவத்தில் குறை உண்டாக மாட்டாது. உண்டாகும் என்று ஒப்பிடில் அருமையாகிய சுருதி வாக்கியம் பிரமாணத்தை அசத்தியம் ஆக்கும். பிரமாணம் இல்லாததாகவும் பலிக்கும். ஆகையால் எவராலும் காண்டற்கரிய ஒப்பற்ற பிரம்மானந்தம்தன்னை சம்பூர்ண சுய ஒளியினான மகாதேவன் அல்லாமல் ஓரணுவும் பிரகாசிப்பது இல்லை.*

இதுவே முடிந்த நிலம் எல்லாத் தர்க்கங்களுக்கும் காட்சியே
முதலாம் பிரமாணங் களுக்கும் மொழியும் வேதாந்தங் களுக்கும்
விதமாம் புராணம் அனைத்தினுக்கும் மிருதிகளுக்கும் வேதத்தின்
மதமாம் விச்சை அனைத்தினுக்கும் மன்னுமா பாரதத்துக்கும். 29

**பொழிப்புரை:** *தர்க்கங்கள் அனைத்தினுக்கும் பிரத்தியட்சம் முதலிய அளவைகளுக்கும் சொல்லா நின்ற உபநிடதங்களுக்கும் பலவிதமான சகல புராணங்களுக்கும் ஸ்மிருதிகளுக்கும் வேதத்தின் சம்மதமான சகல வித்தைகளும் நிலைபெற்ற மகாபாரதம் என்னும் இதிகாசத்துக்கும் இந்தப் பரமாத்துவிதம் ஒன்றே முடிவான இடமாகும்.*

ஐயன்சைவ ஆகமங்கட்கும் அரிஆக மத்துக்கும் எனது
பொய்யின்றிய ஆகமத்துக்கும் புத்தஆக மங்கட்கும் அருகன்
செய்யும் ஆகமத்துக்கும் சித்தர் இயக்கர் கந்தருவர்
உய்யும் பரிசுமற்றுளோர் உரைத்த ஆகமங் கட்கும். 30

**பொழிப்புரை:** *மகாதேவனால் சொல்லப்பட்ட சைவ ஆகமங்களுக்கும், திருமாலின் ஆகமத்துக்கும் என்னுடைய சத்திய அர்த்தமாகிய ஆகமத்துக்கும் பிடகம் முதலிய ஆகமங்கட்கும், அருகனால் செய்யப்பட்ட ஆகமத்துக்கும், யாவரும் பிழைக்கும்படி சித்தர்களும் இயக்கர்களும் கந்தருவர்களும் இன்னமுள்ள அனைவர்களுக்கும் சொல்லிய ஆகமங்களுக்கும் இதுவே முடிந்த நிலமாகும்.*

உவமையில் பரமாத்துவிதமாம் இந்த ஒண்பொருள் உலகின் மானிடரில்
எவர்இது பெற்றோர் அன்றி விண்ணவரில் ஏவரே பெற்றவர் உடையான்
சிவனொருவனும் இப்பரம்பொருள் சுபாவ சித்தமாம் சிவனுக்கும் சிவைக்கும்
அவரருளாலே அரிக்கும் இப்பொருள் உண்டு அப்படிஎனக்கும் உண்டு அருளால்.
31

**பொழிப்புரை:** *இந்த ஒளிமிக்க பொருளே ஒப்பு இல்லாத பரமாத்துவிதமாகும். இவ்வுலகில் உள்ள மனிதர்களில் எவர்கள் இதனை அடைந்தவர்கள் ஆவார்கள். அன்றியும் தேவர்களில் எவர் அடைந்தவர்கள் ஆவார்கள். பரமசிவன் ஒருவனே உடையவன் பரம அத்துவித சிவனுக்கும் பராசக்திக்கும் இந்த பரம அத்துவித ஞானமானது இயல்பாகவே சித்தித்து இருக்கின்றதாகும். அந்தப் பரமசிவன் பராசக்தி இவர்களுடைய திருவருளாலே திருமாலுக்கும் இந்தப் பரமாத்துவித ஞானம் உண்டு அந்தப் பிரகாரமே அவர்களின் திருவருளினால் எனக்கும் உண்டாகி இருக்கிறது.*

சாற்றிடப்பட்ட விராட்டுடன் சுராட்டு சாம்ராட்டெனும் இறையவர்க்கும்
ஏற்றமதுடைய தேவராம் உமக்கும் இயக்கரோடு அரக்கர் கந்தருவர்
சீற்றமில்சித்தர் இவர்முதலான தேவசாதிகள் அனைவருக்கும்
தோற்றிய மனிதர் விலங்கு சாதிகட்கும் அருளினால் இப்பொருள் தோன்றும். 32

**பொழிப்புரை:** *சொல்லப்படுகின்ற விராட் புருஷனோடு சாம்ராட்டு சுராட்டு என்று சொல்லப்படுகின்ற அதிகாரிகட்கும், மேன்மை பொருந்திய தேவர்களாகிய உங்களுக்கும், யட்சர், அரக்கர், கந்தருவர், அகங்காரமற்ற சித்தர்கள் முதலிய தேவ சாதியர்க்கும் தோற்றா நின்ற மனிதர்கட்கும், விலங்குகட்கும் பரசிவனின் அருளால் இந்தப் பரமாத்துவித ஞானம் கிட்டும்.*

பரமனது அருள் உண்டாயிடில் கீடம்பதங்கம் மானிடவரோடு அசுரர்
சுரன் அனைவருக்கும் ஞானம்உண்டு அவனே சுடர்மிகு ஞானம் இங்களிப்பான்
அரியினால் என்னால் அவனருள் ஒழிய அளித்திடப்படாது ஒருபொருளும்
சுரர்களேதரவும் வாங்கவும் நாங்கள் சுதந்திரர் அன்று மெய்சொல்லில். 33

**பொழிப்புரை:** *சிவனருள் உண்டானால் புழுக்கள் விட்டில், மானிடரோடு அசுரர், சுரர், தேவர் எல்லோருக்கும் ஞானம் உண்டாகும். அந்தப் பரசிவனே ஒளிமிகு*

*ஞானத்தைக் கொடுக்கத்தக்கவன். அவனது அருளன்றி திருமாலும், பிரம்மாவான என்னாலும் யாதொரு பொருளையும் கொடுக்கப்படாதது. தேவர்களே, கொடுக்கவும் வாங்கவும் நாங்கள் இருவரும் சுதந்திரர்கள் அல்லர். இது உண்மை.*

**சுதந்திரன் சிவனே அவனன்றோ பிறவிச்சுழல் நின்று எடுப்பவன் அவன்தன்**
**பதங்களால் அன்றி எங்களால் எடுக்கப்படாது ஒருசெந்துவும் எங்கள்**
**மதங்களால் ஒழிய அருளினால் பிறவிமாற்றவும் வல்ல மற்றொருவன்**
**திதம்பெற வழங்கும் போதுதான் வழக்கம் செய்வது தருவியேபோல. 34**

**பொழிப்புரை:** *பரமசிவன் ஒருவனே சுதந்திரம் உடையவன். அந்தப் பரமசிவன் தான் பிறப்பு என்னும் சுழலில் இருந்து உயிர்களை நீக்கி அருள்பவன். அவனுடைய திருவடிகளால் அன்றி ஒரு உயிர்களையும் எங்களால் பிறவிச் சுழலில் இருந்து விடுவிக்க முடியாது. வேறு ஒருவன் நிலைபெற இலையில் அன்னம் படைக்கும் காலத்தில் அகப்பை தான் வழங்குவதுபோல எங்கள் வல்லமைகளும் நீங்க பரசிவனுடைய அருளைக் கொண்டு பிறவியை நீக்க வல்லமை உடையோம்.*

**தேவதேவன் சிவன்பெருமை தானும் அவந்தன் திருவுருவும்**
**ஏவரறிவார் ஆதலினால் இல்லை ஆகில் தவறுதலே**
**யாவர் அருளால் அன்றியவிர் பெரியோர் தமக்குஅறிவரியன்**
**கோவின் அறிதற்கு அருமையைத் தான்கூற மிகவும் குறிக்கொள்மின். 35**

**பொழிப்புரை:** *தேவர்களுக்குத் தேவனாகிய மகாதேவனது பெருமையும், அந்த மகாதேவனது திருவுருவின் பேரழகும் யாவர் அறிவார்கள். ஒருவராலும் அறியப்படுவதில்லை. எவரேனும் அறிந்தார்களேயானால், தவறுதலை உடையவர்கள் ஆவார்கள். விளங்குகின்ற மகான் எவருக்கும் அவன் அருளால் அன்றி அறிதற்கு அரியவன். அந்த பரசிவனது அரிய பெருமையை நான் சொல்ல கேட்டுக் கொள்ளுங்கள்.*

**கலக்குறும் மோகத்தால் இமையவரும் கடுந்திறல் அசுரரும் பகைத்து**
**விலக்கரும் பூசல்முன் பொருகாலம் விளைந்து விண்ணவர் தலைசாயப்**
**பெலத்தினால் மிக்கஅசுரர்கள் வெல்லப் பெருகிய அருளுடை இறைவன்**
**நலத்தகும் இமையோர் வெல்லவும் அசுரர் நசிக்கவும் நயந்தான். 36**

**பொழிப்புரை:** *முன்னொரு காலத்தில் கலங்கச் செய்கின்ற தேவர்களும், கடுமையான வீரத்தையுடைய அசுரர்களும் விரோதம் உண்டாகி விலக்கமுடியாத போர்செய்து தேவர்கள் தோற்றுத் தலைகுனிய அசுரர்கள் வெற்றிபெற, மிகுந்த கருணை உடைய சிவபெருமான் தேவர்கள் வெற்றிபெறவும் அரக்கர்கள் மாளவும் திருவருள் செய்தான்.*

**திருவருள் அதனால் அசுரரைத்தேவர் செயித்து மாதேவன் தன்செயல்என்று**
**ஒருவரும் அறியார் உம்பர்தானவரை ஓட்டினார் தாம்என உவந்து**
**பெருகிய அகந்தை செய்திடத்தேவர் பிழைக்கவும் பிரான்தனை அறிதற்கு**
**அருமையும் அறிய இயக்கரூபம் கொண்டு அமலன் அங்கு அருளினால்**
**நின்றான். 37**

**பொழிப்புரை:** *சிவபெருமான் திருவருளால் தேவர்கள் அசுரரைப் போரில் வென்றது. சிவனின் கருணையால் என்று தேவர்கள் யாவரும் அறிந்திலர். அசுரர்களைத் தோல்வியுறச் செய்தது தாங்களே என மகிழ்ந்து மிகுந்த அகங்காரம் கொண்டார்கள். அந்தத் தேவர்கள் உய்யவும், பரமசிவன் இத்தன்மை உடையவன் என்று யாவரும் அறியவும் மகாதேவன் தனது அருளினால் அந்தத் தேவலோகத்தின்கண் ஒரு யட்சரூபம் கொண்டு நின்றான்.*

**இயக்கரூபனாம் இறையவன் தன்னைக் கண்டு இமையவர் இனம்கூடி**
**வியக்க உற்றது ஏதெனத் தங்களில் விசாரித்து விளங்காமல்**
**மயக்கம் அற்றிட அறிந்துஎமக்கு உரைஎன வன்னியை விடுத்தார்கள்**
**நயக்கஉற்று இதுதன் இயல்பறிந்து நான்நவிலுவன் எனச் சென்றான். 38**

**பொழிப்புரை:** *யட்சவடிவம் கொண்ட சிவனைப் பார்த்து, தேவர்கள் எல்லோரும் ஒன்றாகக் கூடி, நாம் அதிசயிக்கக் கூடிய வகையில் வந்துள்ள இது யாதென்று தங்களுக்குள்ளே விசாரித்துத் தெளியாமல், எங்களது சந்தேகம் தீரும்படி தெரிந்து சொல் என்று அக்கினி தேவனை ஏவினார்கள். அவனும், நான் இதன் சுபாவத்தை அறிந்து சொல்லுவேன் என்று சென்றான்.*

**அனலனைக் குறித்து இயக்கனாம் இறைவன் ஆரென்று**
**வினவ அங்கி நானென்று அவன்குறித்து அவன்விளம்ப**
**உனது வீரியம் ஏதென இறையவன் உரைப்ப**
**எனது பூமியில் உளதெலாம் சுடும்இயல்பு என்றான். 39**

**பொழிப்புரை:** *தன்னிடத்தில் வந்த அக்கினியைப் பார்த்து யட்ச ரூபமான சிவபெருமான் நீ யார் என்று கேட்க, நான் அக்கினிதேவன் என்று இறைவனிடத்தில் அக்னி தேவன் கூற சிவபெருமான் அவனை நோக்கி, உன்னுடைய வலிமை என்ன கேட்டருளலும், என்னுடைய இயல்பு இவ்வுலகிலுள்ள அனைத்தையும் எரிப்பது என்று கூறினன்.*

**அத்தன் அங்குஓர் திரணத்தை எடுத்து அனலவனை**
**இத்தை நீதகிஎன குறுமுறுவல் கொண்டு இசைப்ப**
**எத்தன் வேகமும் கொண்டுஅது சுடஎரி அவனும்**
**சத்தன் அன்றி நாணிப் பயந்து அமரரைச் சார்ந்தான். 40**

**பொழிப்புரை:** *அப்போது சிவபெருமானும் அவ்விடத்தில் ஒரு துரும்பை எடுத்து வைத்து அக்கினியைப் பார்த்து இத்துரும்பை நீ தகிப்பாய் என்று புன்சிரிப்பை அடைந்து திருவாய் மலர்ந்து அருள, தனக்கு எவ்வளவு வேகம் உண்டோ அவ்வளவையும் கொண்டு அத்துரும்பைக் கொளுத்துவதற்கு அக்கினி தேவனும் வலிமை இல்லாதவன் ஆகி வெட்கமுற்று அச்சம் கொண்டு தேவர்களை அடைந்தான்.*

அவனது இயல்பை என்னால் இங்குஅறிதற்கு அரிதுஎன்று அனல் சொல்லப்
பவனன் அறிஎன்று இமையவர் பகரஅவனும் அப்பரிசே
சிவனால் அபசெயப் பட்டுத் தேவர்தம் பால்செல்லுதலும்
அவனைநானே அறிகுவன் என்று அகந்தை உற்றான் அமரேசன். 41

**பொழிப்புரை:** *அவனுடைய தன்மையை என்னால் இவ்விடத்தில் தெரிவதற்கு அருமையாய் இருக்கிறது என்று அக்னி பகவான் கூற, வாயுவே, நீ போய்த் தெரிந்துவா என்று கூற, அந்த வாயுவும் அக்கினியைப் போலவே அந்தத் துரும்பை அசைக்க முடியாமல் சிவபெருமானிடத்தில் தோல்வியை அடைந்து தேவர்களிடத்தில் மீண்டு வந்தடைதலும், இந்திரனானவன் அந்த இயக்கனை நானே போய் அறிகிறேன் என்று செருக்கடைந்தான்.*

புரந்தரன் அறியச் சென்றிடும் பொழுதில் போக்கு அறஅவ்விடம் தனிலே
கரந்திட மிகவும் கலங்கி உள்வெதும்பி கருதுபு கருணையே வடிவாய்
வரம்தரும் விச்சாவல்லி ஆளுமையை வைதிக நெறியினால் வழுத்தா
அரந்தை தீர்வுறவே புகழ்ந்தனன் புகழ்ந்த அளவில் அங்கு அளவிலா அருளால்.
42

**பொழிப்புரை:** *தேவேந்திரனானவன் அந்த யட்சவடிவத்தை அறியும் பொருட்டு செல்லும் காலத்தில், சிவபெருமான் வேறு எங்கும் போகாமல் நின்ற அவ்விடத்திலேயே மறைந்து அருள, அப்போது இந்திரன் மிகவும் கலக்கம் அடைந்து மனம் வாடிச் சிந்தித்து கருணையே வடிவமாய் வரங்களைக் கொடுத்து அருளும் வித்தியா வல்லியாகிய பார்வதி தேவியை வைதீக நெறியினால் வாழ்த்தித் துன்பம். அகலும் பொருட்டே புகழ்ந்தான். அப்படிப் புகழ்ந்த அளவில் அங்கு அளவில்லாத திருவருளால்.*

அங்கவே தத்தின் மயமதாய்ச் சிவனுக்கு அபினையாய் ஆனந்தமாகி
சங்கரன் தனக்கும்தான் அளித்துஇன்பம் கருணையால் உயிர்க்கெலாம் தாயாய்த்
துங்கமால் வரையில் இச்சையில் தோன்றும் தோகைஈசனது வல்லபமும்
அங்குஅவன் அறிதற்கு அருமையும் தோன்றத் தோன்றினள் அவ்விடம்தனிலே.
43

**பொழிப்புரை:** *ஆறு அங்கங்களை உடைய வேத வடிவமானவளும், சிவபெருமானுக்கு வேறு இல்லாதவளாகவும், ஆனந்த வடிவானவளும், சிவபெருமானுக்கும் சுகத்தைக் கொடுத்துத் தனது திருவருளினால் அனைத்து உயிர்களுக்கும் தாயாகிப் பரிசுத்தமான இமய மலையில் தனது இச்சையினால் தோன்றி அருளிய மயில் போன்ற சாயலை உடையவளாகிய பார்வதி தேவியானவள் சிவபெருமானின் வல்லமையும், அவ்விடத்தில் பரமேசுவரனுடைய தறிதற்கரிய தன்னையும் விளங்கும் பொருட்டு அந்த இடத்தில் தோன்றினாள்.*

உமையை அர்ச்சித்து அங்கு உம்பர்கோன் இயக்கரூபமாய் இவ்விடத்து உண்டாய்
எமது கட்புலத்து உற்று இவ்விடம் தனிலே மறைந்தது ஈதென்னை என்று இயம்ப
மமதிருக் கொழுநன் அருளினால் தோன்றி மறைந்தனன் மாலுக்கும் அயற்கும்
இமையவர் எவர்க்கும் உனக்கும் மாதேவன் இயல்பு அறியப்படாது என்றும். 44

**பொழிப்புரை:** *ஆங்கே எழுந்தருளிய உமாதேவியைத் தேவர்கள் அதிபனாகிய இந்திரன் அவ்விடத்தில் அர்ச்சனை செய்து யட்ச வடிவமாய் இவ்விடத்தில் உண்டாக, எங்களுடைய கண்ணுக்கு எதிராகத் தொன்றி இவ்விடத்தில் தானே தோன்றாமையால் போனது. இது என்ன என்று வணங்கிக் கேட்க, அதை உமையவள், கேட்டு எனது பதியாகிய மகாதேவனே அருளினால் தோன்றி மறைந்தனன் . திருமாலுக்கும், நான்முகனுக்கும் அனைத்து தேவர்களுக்கும் இந்திரனாகிய உனக்கும் மகாதேவனது சுபாவத்தை எக்காலத்துக்கும் உணர முடியாது.*

**தன்னை அறிதற்கு அருமை தன்னை அறிவித்தற்கு**
**உன்னி நிகழ்வுற்றதும் ஒளித்ததுவும் உம்பன்**
**என்னது அற வானவரும் நீயும் விசயத்தே**
**மன்னஅவனே அசுரர்மாய அருள் செய்தான். 45**

**பொழிப்புரை:** *சத் சித் ஆனந்தமாகிய தன்னை எவராலும் அறிவதற்கு அருமையாகிய தன்மையைத் தெரிவிக்க வேண்டும் என்று கருதித் தோன்றியதும் மறைந்ததும் அந்த மகாதேவனேதான். உங்களுடைய நான் எனது என்னும் செருக்கு அகலவும் தேவர்களும் நீயும் விஷயத்தில் தானே நிலை பெறவும், அசுரர்கள் அழியவும் அந்த மகாதேவனே கிருபை செய்தான்.*

**அத்தனே சரணமாக அடையும் என்று அருளிச்செய்து**
**பத்தர்கள் பாவம் தீர்க்கும் பரம காருணிகை ஆகி**
**சித்திரு ஆகிச் சான்றாய்த் திகழ்ந்திடும் தேவியும்தன்**
**சுத்தமாம் சொரூபம் தன்னில் கரந்தனள் தோன்றா வண்ணம். 46**

**பொழிப்புரை:** *ஆதலால் பரமசிவத்தையே அடைக்கலமாக அடியுங்கள் என்று திருவாய் மலர்ந்த்து அருளிச்செய்து அடியார்களுடைய அறியாமை நீக்குகின்ற மேலான கருணை உள்ளவளாயும். சித்து உருவத்தையும், சர்வ சாட்சியாயும் திகழ்ந்திடும் பார்வதி தேவியும் தன்னுடைய நிர்மலமாகிய பிரம்ம வடிவத்தில் எவருக்கும் புலப்படாத் வண்ணம் மறைந்து அருளினாள்.*

**அன்றுமால் ஒழிந்து அங்கு இமையவர் ஈசன் அறிவதற்கு அருமையும் அருளும்**
**துன்றுபுத்தியும் நன்முத்தியும் அளிக்கும் சுதந்திரம் தன்னையும் துணிந்து**
**நன்றியே உற்றார் அருள்பெறில் எளியநாதன் இங்கு அறிவுறும் அருள்தான்**
**இன்றியே ஒழியில் ஒருவராலும் தன்இயல்பு அறியப்படாது என்றும். 47**

**பொழிப்புரை:** *இக்காலத்தில் அவ்விடத்தில் தேவர்கள் மயக்கம் அகன்று, பரமசிவனுடைய அறிவதற்கு அருமையும், தன்மையும் நெருங்கிய புத்தியையும் நன்மையாகிய மோட்சத்தையும் கொடுத்து அருளும் சுதந்திரத்தன்மையையும், நன்றாகத் தெளிந்து நன்மையே அடைந்தார்கள். திருவருள் அடைந்தால் அவர்களுக்கு எளிய சிவபெருமான் இவ்விடத்தில் தானே அறியப்படுவான். அவனது திருவருள் இல்லாது நீங்குமாயின் யாவராலும் அந்தச் சிவபிரானுடைய சுபாவத்தை எக்காலத்தும் அறியமுடியாது.*

சம்புவின் அருளால் அன்றிமால் யானும்சகல தேவதைகளும் அந்த
உம்பனை உணரோம் அருள்பெறும் பொருட்டே ஓதியயாவையும் உளதாம்
செம்பொருள் தன்னை அருளினால் ஒழிய தெரிவினால் தெளிகுவராக
நம்பு மானிடவர் கையினால் நாற்றம் அறிவரே நாசியால் ஒழிய. 48

**பொழிப்புரை:** *சிவபெருமானுடைய அருளினால் அன்றி திருமாலும், நானும் மற்ற தேவதைகளும் அந்தச் சிவபெருமானை அறியும் தகுதி உடையவராக மாட்டோம். சொல்லிய அனைத்தும் சிவனருள் கிடைக்கும் பொருட்டே. எக்காலத்தும் உள்ளதாகிய செவ்விய பொருள் தன்னை சிவன் அருளினால் ஒழிய அறிவினால் அறிபவர்களாக நம்புகின்ற மனிதர்கள் மூக்கினால் அன்றி கரத்தினாலும் வாசனையை அறிவார்களோ.*

ஒழிவிலா இறைவன் அருள்உருவு உணரில் ஒத்திடும் வினையினில் குரவன்
விழியினால் விளையப் படுவதாய் உளதோர் மிக்கதோர் அதிசயம் அதனை
மொழியுமாறு என்னால் முகுந்தனால் முடிந்திடாகண் முகப்படாதே
அழிவிலாச் சிவற்கும் சிவைக்கும் மாற்கும் எனக்கும்சில அறிகுறியால். 49

**பொழிப்புரை:** *சிவபெருமானுடைய நீங்காத அருளின் உருவத்தைக் கருதுங்கால், ஒத்திடும் வினையினால் குருநாதனுடைய விழிக்கருணையால் உண்டாகத் தக்கதாய் இருக்கிறது. ஒப்பற்ற மிகுதியான இந்த அதிசயத் தன்மையைச் சொல்லுவதற்கு என்னாலும், மாலாலும், ருத்ரனாலும் முடியாது. கண்ணுக்கும் புலனாகாது. ஒருநாளும் அழிவில்லாத பரம சிவனுக்கும், பராசக்திக்கும், மாலுக்கும், எனக்கும் சில அடையாளங்களால் தெரியும்.*

மொழியும் அக்குறிதான் மிக்க பேருவகை மொழிதழுத்து அழுகை அங்கத்தும்
விழியிலும் விகாரம் பிறக்கை நம்பிக்கை மெய்விதிர்த்து இருக்கை மெய்விழுகை
சுழல்கை மற்று எழுகை வானிலே இருத்தல் சுடரொளி ஆகியே தோன்றல்
ஒழியும் இவ்வுடலம் கண்டிடாது இருத்தல் உம்பர்தேக அந்தரத்து உறைதல். 50

**பொழிப்புரை:** *சொல்லப்பட்ட அந்த அடையாளங்கள் யாவை என்னில் மிக்க பேருவகை அடைதலும், மொழி தழுதழுத்து அழுதலும் உடலிலும் விழியிலும் விவகாரம் உண்டாதலும், ஸ்தம்பமாயுறுதலும், புல்லரித்து உடல் நடுக்கமுற்று, இருத்தலும், சரீரம் கீழே விழுதலும் சுற்றுதலும் மற்றும் எழுதலும் ஆகாயத்தில் இருத்தலும் உடல் விளங்குகின்ற சோதியாகியே காணப்படுதலும், அழியும் தன்மையுள்ள இவ்வுடலானது ஒருவருக்கும் தெரியாமல் மறைந்திருத்தலும் உயர்வாக பரகாயப் பிரவேசம் செய்தலும்.*

ஓதிடாது உணர்தல் கலைமலை முதலா உள்ளபேதனம் தெறல் உணர்த்தல்
ஆதியாம் குறிகள் இறைவனார் அருளுக்கு அறிகுறியான அருள்தன்
நீதிதான் எவர்க்கும் ஒருபடித்தாகி நிறைவுறாது அந்த நிமலன்தன்
பாதம் மேவுறுவார் பக்குவம் தோறும் படுதரமாகியே நிகழும். 51

**பொழிப்புரை:** *ஓதிடாமல் கலைகளைத் தானே அறிதல், மலை முதலானவற்றைச் சாதனமின்றி நிலைகுலையச் செய்தல், அழிக்கல், அருள் செய்தல் என்னும் இவை முதலான குறிகள் சிவபெருமானின் திருவருளுக்கு அடையாளங்கள் ஆகின்றன.*

*அந்தச் சிவப்பிரசாதத்தின் முறைமையானது, எல்லார்க்கும் ஒரே தன்மையாக விளங்க மாட்டாது. அந்த நின்மலனின் திருவடிகளை அடையத் தக்கவர்களின் பக்குவங்களுக்குத் தகுந்தபடி அதிகமதிகமாகவே அந்த அருள் விளங்கும்.*

செப்பிய இந்த அருள் சிவனாலும் சிவையினாலும் செயப்படுவது
அப்பெருந்தன்மை அரியினால் என்னால் ஒருவரால் அளிக்கல் ஆகாதே
இப்பவம் தனிலே முத்தி இச்சிப்பான் இயம்பும் எத்தேவையும் விட்டுச்
சிற்பரன் ஆகும்சிவன் ஒருவனையே சரண்எனச் சென்று சேர்வுறுவான். 52

**பொழிப்புரை:** *இப்போது சொல்லப்பட்ட இந்த அருள், சிவபெருமானாலும் பராசக்தியாலும் கொடுக்கப்படுவது. நாராயணனாலும் என்னாலும் வேறு ஒருவரலூம் அந்த மகத்துவமுடைய அருளைக் கொடுக்க முடியாது. இந்தப் பிறப்பில் தானே முத்தியை விரும்புபவன் எத்தேவர்களையும் நீக்கி சித்சொரூபனான சிவபெருமான் ஒருவனையே அடைக்கலம் என்று போய் அடைவன்.*

பரகதி சிவனால் வைத்திடப் பட்டபக்தியால் உறும் அதுவன்றி
உரகமேல் துயில்வோன் பாலும் என்பாலும் உற்றபக்தியினால் உண்டாகா
திரமுறு சிவபத்தன் தன்ஆகத்துத் திருவருள் ஒளிமிகத்திகழும்
பரிசு அரிபத்தர்க்கு எனது பத்தர்க்கும் பரமுற நிகழ்வுறப் படாதால். 53

**பொழிப்புரை:** *சிவனிடத்தில் வைக்கப்பட்ட உத்தமமான பக்தியால் முக்தியானது சித்திக்கும். அந்தச் சிவபக்தி அல்லாமல் அரவணையில் துயிலும் மால் இடத்திலும் என்னிடத்திலும் பொருந்திய பக்தியினால் ஒருவருக்கு மோட்சம் உண்டாகாது. நிலைபெற்ற இறைவன் திருவருள் ஒளி மிகுதியாய் மகானுடைய தேகத்தில் விளங்கும் தன்மை போல, நாராயணன் அடியார்களுக்கும், என்னுடைய அடியார்களுக்கும் பரத்தை அடையும்படி அந்த அருள் விளக்கமுற மாட்டாது.*

ஆதலால் அரியை என்னை ஆதரவுசெய்திடாது அரன் மகேசனைக்
காதலால் அடைக முத்திசித்தி கடுகக் கிடைக்கும் அருளெய்தும்அப்
போதிலே அரியனாகிலும் தனது பூரணப் புரணமானசிற்
சோதியே முழுதுமாகி நின்றபடி தோன்றுமாறு வெளிதோன்றுமால். 54

**பொழிப்புரை:** *ஆதலால் முமூட்சுவானவன் விஷ்ணுவையும் என்னையும் வேண்டாமல் அரன் என்னும் சிவபெருமானை அன்பினால் சரணடையக் கடவன். மோட்ச சித்தியானது சீக்கிரத்தில் கிடைக்கத்தக்க அருள் உண்டாகும். அக்கணத்தில் தானே காண்பதற்கு அரியன் ஆகிலும் தன்னுடைய பூரண பிரகாசமான சித்தியே எல்லாமாய் இருக்கின்ற தன்மை விளங்கும்படி சாம்ப மூர்த்தியாகத் தோன்றுவான்.*

சாக்கியாம் எல்லாப் பொருட்கும் ஈசனைப் பொருள்களும் சாக்கிமாத்திரமா
நோக்கினான் யாவன் நோக்கதனாலே நோக்கலாம் இதுமறை அந்தம்
நீக்கிலாப் பரமாத்துவித நிட்டையாம் இந்நிலம் ஒன்றே முடிவு இதில்பேதம்
ஆக்கினான் அறிவால் அறிவிலாதமையால் அவன் அலாதுஆர் பசுவாவார்.55

**பொழிப்புரை:** *எல்லாப் பொருட்கும் சாட்சியாகிய பரசிவனையும், எந்தப் பொருளையும் சாட்சிமாத்திரமாகவே அறிந்தவன் எவனோ அவனுடைய ஞானத்தினாலே இந்தப் பிரமமானது அறியலாகும். வேதாந்தத்தை நீங்காத பரமாத்துவித நிட்டையாகும் இந்த பூமி ஒன்றே முடிவாய் உள்ளது. ஞானத்தினாலும் அஞ்ஞானத்தினாலும் இந்தப் பரமாத்துவித நிட்டையாம் ஸ்தானத்தில் பேதம் செய்தவன் எவனோ, அவனைத் தவிர உலகத்தில் எவர்கள்தான் பசு ஆவார்கள்*

பரமாத்துவித ஞானியே பரதேவதை தான் அவனேஇத்
திரமாமுத்தியான் இங்குச் செப்பும் பொருள் செய்வினையாலும்
உரமாம் ததீசிகௌதமனால் உண்டாம்சாப உரையாலும்
கரமாமனிதர் நெஞ்சுதனில் காதல் செய்யார் ஒருகாலும். 56

**பொழிப்புரை:** *பரமாத்துவித ஞானியே பரம்பொருள் ஆவான். அந்த ஞானியே இந்த நிலை பெற்றதாகிய முத்தியும் ஆவான். நான் இவ்விடத்தில் கூறிய பரமாத்துவிதப் பொருளை முன்செய்த பாவத்தினாலும், வலி பொருந்திய ததீசி முனிவராலும், கௌதம முனிவராலும் சம்பவித்த சாப மொழிகளாலும், கழுதை போன்ற மானிடர்கள் தங்கள் மனத்தின்கண் ஒருகாலும் அன்பு செய்ய மாட்டார்கள்.*

ஆரணத்து அந்நியம் இல்லாச்சிவன் தன்பாலும்
அத்துவித வேதனத்தும் அடைதற்கு உள்ள
காரணமாம் சிவலிங்க அர்ச்சனத்தும் சாலக்காய்வதுமே
அன்றி உருத்திராக்க
தாரணத்தும் திரிபுண்டரதி ரணத்தும் சருவ
அங்கத்தூளனைத்தும் தாமேகாய்வர்
சீர்இணக்கும் சிவன்என்னும் உரையும் தங்கள்
செவியாலும் கேளார் செய்வினையா தீயோர். 57

**பொழிப்புரை:** *தீயோர்கள் செய்வினையாலும், வேதத்துக்கு வேறில்லாத சிவபெருமானிடத்தும், அத்வைத ஞானத்தும், சிவபெருமானை அடைவதற்கு ஏற்றதாய் உள்ள சிவலிங்க வழிபாட்டிலும் மிகவும் வெறுப்பதுவும் விபூதியைத் திரிபுண்டரமாகவும், உத்தூளனமாகவும் பூசிக் கொள்வதிலும் தாங்களே வெறுப்பார்கள். சிவன் என்ற சொல்லையும் தங்களின் காதினாலும் கேட்கமாட்டார்கள்.*

தொல்லை நல்வினையால் சுருதிநன்மிருதி சொன்னவா துணிந்த அத்தூயோர்
ஒல்லையில் பரமாத்துவித வேதனத்தை உள்ளவாறு உணரவே உணர்வர்
நல்ல இப்பரமாத்து விதஞானியை நாராயணன் நான் உருத்திரனும்
எல்லை எல்லாத் தேவரும் பூசித்து ஏத்தவும்படும் இவன்என்றும். 58

**பொழிப்புரை:** *முன்பு செய்த நல்வினைகளால், வேதங்களும் நல்ல ஸ்மிருதிகளும் சொல்லிய பிரகாரமே தெளிந்தவர்களாகிய அந்தப் பரிசுத்தமானவர்கள் சீக்கிரத்தில் பரமாத்துவித ஞானத்தை உள்ளபடி அறியவே அறிவார்கள். நன்மை பொருந்திய இந்தப் பரமாத்துவித ஞானம் உடையவனை மகா விஷ்ணுவும் நானும் ருத்திரனும் சகல தேவர்களும் என்றும் பூசித்துத் துதிப்பார்கள்.*

ஈசனாம் ஞானிஇருந்துள இடத்தில் இருப்பது முத்திதான் அந்தத்
தேசிகன் ஏவல்செய்பவன் கால்என் சென்னியில் இருப்பது மன்னி
மாசிலாப் பரமஞானியாம் முனிக்குமகேசனும் ஒப்பலன் மதிக்கில்
ஆசிலா அரியும் ஒப்பலன் நானும் ஒப்பலன் எவர் ஒப்பாரே. 59

**பொழிப்புரை:** *ஈசுவர சொரூபனாகிய ஞானியானவன் வசிக்கின்ற இடத்திலேயே முக்தி இருக்கிறது. அந்தக் குருநாதனுக்குப் பணிவிடை செய்பவன் பாதம் என் தலைமேல் சிலையாய் இருக்கிறது. குற்றமில்லாத அத்துவித ஞானியாகிய முனிவனுக்கு உருத்திரனும் சமானமாக மாட்டான். ஆராயுங்கால் குற்றமில்லாத திருமாலும் சமானமாக மாட்டான். நானும் சமானமாக மாட்டேன் என்றால் யாவர்தாம் சமமானவர்கள்.*

ஒப்பரு பரமாத்துவித ஞானத்தை உணர்ந்துள்ள பரமயோகிக்குக்
கைப்பொருள் ஆவிகாயமும் கொடுப்பான் காதலால் அவை கொடுத்திடவே
இப்பவம் அறுக்கும் ஞானம்வந்து உதித்தற்கு ஏதுவாம் அதுஇது ஒழிய
உற்பவம் துடைக்கும் உணர்வுபெற்று உய்தற்குஇலது இதில்ஐயுறீர் ஒன்றும். 60

**பொழிப்புரை:** *நிகரில்லாத உயர்ந்த அத்துவித விஞ்ஞானத்தை அறிந்திருக்கிற பரம யோகிக்கு, தன் கைப்பொருளையும், தன் உயிரையும், தன் உடலையும் மிகுந்த அன்பினாலே, கொடுக்கக் கடவன். அந்த மூன்றையும் கொடுக்கவே இப்பிறவியை ஒழிக்கத்தக்க பரஞானம் வந்தடைவதற்கு அது காரணம் ஆகும். இதுவல்லாமல் பிறப்பை ஒழிக்கின்ற ஞானத்தை அடைந்து பிழைப்பதற்கு இல்லையாகும். இந்தப் பொருளில் யாதொன்றும் நீங்கள் சந்தேகம் கொள்ளாதீர்கள்.*

சதுமறை ஒழிந்தவாதனை பொல்லாத் தர்க்கவாதனை உலகத்தின்
மதமுறு சமயவாதனை தாரம்மக்கள் சுற்றத்தின் வாதனையும்
இதமுறு பொருளின் வாதனைதேக இந்தியமனம் புத்தி நற்பிராணன்
முதலவாதனையும் வித்தைவாதனையும் முடிவில் போகத்தின் வாதனையும்.61

**பொழிப்புரை:** *நான்கு வேதங்களுக்கும் புறம்பானவைகளில் வாசனை, கொடிய குதர்க்க வாசனை, உலகத்தில் அகங்காரம் உள்ள சமய வாசனை, மனைவி, புத்திரர், உறவோர் வாசனை, நன்மை பொருந்துகின்ற பொருளின் வாசனை, உடல் இந்திரியம், மனம், புத்தி, நல்ல ஆவி முதலானவற்றின் வாசனை, கல்வியின் வாசனை ஒழிவில்லாத போகத்திலுள்ள வாசனை ஆகிய வாசனைகளும்.*

ஏறுடைச் சிவனைத் திருநெடுமாலை இகழும் வாதனையும் வேதத்தில்
கூறிடும் ஞானசாதனமாகக் கொளும் உத்தூளன புண்டரத்தை
மாறுடன் நிகழும்வாதனை பாவவாதனை யாவும் மானிடர்க்கு
வேறடும் பரமாத்து விதஞானத்தை விலக்கிடும் விரோதி விண்ணவரே. 62

**பொழிப்புரை:** *இடபவாகனனாகிய ருத்திரனையும் திருநெடுமாலையும் நிந்திக்கும் வாசனையும், வேதங்களில் சொல்லியிருகின்ற ஞானத்திற்குச் சாதனமாக அங்கீகரிக்கப்பட்ட விபூதி, உத்தூளனம், திரிபுண்டரம் இவற்றை விரோதத்துடனே*

*இகழ்ந்திடும் வாசனையும், பாவ சம்பந்தமான வாசனைகள் அனைத்தும் தேவர்கள், மனிதர்க்கு அருமையை நாசம் செய்கின்ற உயர்ந்த அத்துவித ஞானத்தை நீக்குகின்ற விரோதிகளாகும்.*

ஆதலால் வீடதனில்ஆசை உள்ளோன் அதில்மிகவும் தாற்பரியன் ஆகிமுன்னம்
ஓதுவாதனைகள் எல்லாம் இகந்துஎப்போதும் உற்ற பரமாத்து விதஞானி அவன்எனவும்
வேத வேதாந்தங்கள் உரைக்கப்பட்ட மேலான அத்துவித ஞானமாகும்
நாதனாம் பிரமத்தை நவிலலாமோ நாம்மெளனத்து இருப்பதல்லால் நாகத்தீரே. 63

**பொழிப்புரை:** *ஆதலால் முத்தியில் விருப்பம் உள்ளவன் அந்தப் பிரமத்துவைதத்தில் மிகவும் கருத்து உள்ளவனாகி, முன்சொன்ன வாசனைகள் அனைத்தையும் விட்டு, எக்காலத்தும் பொருந்திய பரமாத்துவித ஞானம் உடையவன் ஆவான். வேதங்களாலும் சொல்லப்பட்ட உயர்வான அத்துவித ஞானமாகும் நாதனாம் பிரம்மத்தை விண்ணவர்களே, நாம் சும்மா இருக்க வேண்டுவதன்றி சொல்ல முடியுமோ.*

ஓதியதோட மெல்லாம் ஒழிந்து உளராகிஉற்ற
வேதவேதாந்தம் தன்னில்மிக நிட்டை உடைய நல்லோர்
யாதுதம் இதயத்து உள்ளாம் இரண்டிலா ஞானம்அத்தைப்
போதகம் செய்யத்தக்கார் ஆவார்கள்புரை அற்றார்க்கே. 64

**பொழிப்புரை:** *முன்பு கூறிய குற்றம் அனைத்தும் நீங்கினவர்களாய் இருக்கிற வேதத்திலும் வேதாந்ததிலும் மிகவும் நிஷ்டை உடைய மகான்கள், தங்கள் மனத்துள் பொருந்துகின்ற எது துவிதம் இல்லாத ஞானமோ அதனைக் குற்றமில்லாதவர்க்கே உபதேசம் செய்யத் தகுந்தவர் ஆவார்கள்.*

சுரரில் உத்தமரே எல்லாத் துக்கமும் தொலைப்பதாகிப்
பரிவொடு ஒண்குரவன் பார்த்த பொழுதிலே பரமானந்தப்
பொருவிலாச் சிவரூபத்தை அடைவித்துப் புரணமாக்கும்
பெரிய அத்துவித ஞானமும் உங்கட்குப் பேசலானோம். 65

**பொழிப்புரை:** *தேவர்களில் உயர்ந்தவர்களே, எல்லாத் துக்கமும் தொலைப்பதாகி அன்புடன் ஞான குருவானவன் பார்த்த போதிலே ஒப்பில்லாத பிரமானந்த சிவசொரூபத்தை அடையப் பண்ணிப் பூரணமாகச் செய்கின்ற பரமாத்துவித ஞானத்தை உங்களுக்குச் சொல்லலானோம்.*

**நான்காவது கேனோபநிடத தாற்பரியம் உரைத்த அத்தியாயம் முற்றிற்று.**

**ஐந்தாவது அத்தியாயம்**

# சாந்தோக்கிய உபநிடத தாற்பரியம் உரைத்த அத்தியாயம்

மறைப்பதாய் மிகவும் முன்னோர் மடிவிலாப் பொருளைக் காட்டுஞ்
சிறப்புடை உபதேசத்தைச் செப்புவன் உங்கட்கு எல்லாம்
இறப்பில் ஆதரத்தின் ஓடும் இசைந்து இது கேண்மின் என்றான்
பிறப்பன முழுதுஞ் செய்யும் பீடு உடை மலரின் மேலோன் 1

**பொழிப்புரை:** *பிறக்கும் பொருள்களை எல்லாம் படைக்கின்ற பெருமை உடைய,தாமரை மலரில் வீற்றிருக்கின்ற பிரம்மா, முன்னோர் மறைபொருளாய் வைத்திருந்த அழிவில்லாத நித்தியமான பொருளை விளக்கிக் காட்டுகிற மேன்மை பொருந்திய உபதேசத்தை எல்லாம் உங்களுக்குக் கூறுவேன். அன்புடனும் மன ஒருமைப்பாட்டுடனும் கேளுங்கள்.*

யாதொன்று இருந்தபடி கேட்கக் கேளா முழுதுங் கேட்டனவாம்
யாதொன்று இருந்தபடி பார்க்கப் பாரா எவையும் பார்த்தனவாம்
யாதொன்று இருந்தபடி அறிய அறியா எல்லாம் அறிந்தனவாம்
யாதொன்று அந்த உபதேசம் அறிக அறிவு மிக உடையீர். 2

**பொழிப்புரை:** *மிக்க அறிவுடைய தேவர்களே! யாதொரு பொருளை உள்ளபடி கேட்க கேட்கப்படாத அனைத்தும் கேட்டவைகள் ஆகுமோ, யாதொரு பொருளை உள்ளபடி பார்க்க பார்க்கப்படாத அனைத்தும் பார்த்தவைகள் ஆகுமோ, யாதொரு பொருளை உள்ளபடி உணர, அறியப்படாத அனைத்தும் அறியப்பட்டனவாக ஆகமோ அந்த உபதேசத்தை நீங்கள் அறியுங்கள்.*

மண்ணது ஓர் திரளைக் காண வனைந்த காரியங்கள் அந்த
மண்ணில் வேறிலாது எக்காலும் வருவதே ஆதலால் வேறு
எண்ணிடும் நாம ரூபம் இசைவுறாது ஆகும் என்றும்
மண்ணிதே உள்ளது என்றும் வானவர்க்கு அயன் முன் சொன்னான் 3

**பொழிப்புரை:** *மண்ணினுடைய ஒரு பிண்டத்தைப் பார்க்க, வேறுவேறாகச் செய்யப்பட்ட குடம் முதலிய பாண்டங்கள் அந்த மண்ணிலிருந்து வேறல்ல என்று எக்காலத்திலும் அறிய வருகிறது. வேறு வேறாகக் கூறுகிற பெயர், உருவங்கள் பொருந்தாதது ஆகும். இந்த மண்ணே இயல்பானதாக இருக்கும் என்று தேவர்களுக்கு பிரமதேவன் முன் கூறினான்.*

உலகம்ஓர் மணி இரும்பாம் உகிர் சீவி ஒன்று காண
உலகம் எல்லாமும் ஆய உருவமும் இரும்பும் அற்றே
அலகில் காரணத்தின் ஓடு காரியம் வேறிலாமை
பலபட அறியும் வண்ணம் பகர்ந்தனன் படைக்கும் நாதன். 4

**பொழிப்புரை:** *ஓர் உலோக மணி, இரும்பு வடிவமான நகம் செதுக்கும் கத்தியையும் பார்க்குங்கால் எல்லா ஆபரணங்களின் பெயர்களும் உலோகம் ஒன்றையாம். இரும்பும் அத்தன்மையதே ஆகும் என்று, அளவு இல்லாத காரணத்தோடு காரியங்கள் வேறுபட்ட தன்மையைப் பலவிதமாக அறியும்படி படைக்கும் பிரம்மா கூறினான்.*

காரியம் எல்லாம் உள்ள காரணம் வேறும் அன்று
காரியம் ஒருகால் வேறாய் வேறன்று இருப்பது அன்று
காரியங் காரணத்தின் வேறு என்று கருதில் அந்தக்
காரியம் சத்து அசத்தோ சதசத்தாய் வேறோ என்றான் 5

**பொழிப்புரை:** *காரியங்கள் அனைத்தும் காரணம் தானேதவிர அதிலிருந்து வேறுபட்டதல்ல. ஒருகாலத்தில் வேறாய் வேறன்றி இருப்பதும் அல்ல. காரியமானது காரணத்திலிருந்து வேறுபட்டது என்று எண்ணினால் அந்தக் காரியம் சத்தாக வேறுபட்டதா, அசத்தாக வேறுபட்டதா, சதசத்தாக வேறுபட்டதா என்று கேட்டான்.*

சத்தாயே வேறு அது என்னில் காரண சத்தை தானோ
பொய்த்தாய காரியத்தின் சத்தை தான் புகலில் வேறோ
ஒத்தே தான் நிற்பது ஏது என்று உரைத்தனன் உலகம் எல்லாம்
வைத்தாயும் மறைகள் ஓதும் மலர்மிசை மன்னும் வானோன். 6

**பொழிப்புரை:** *சத்தாக வேறுபட்டது என்றால் பொய்யான காரியத்தின் சத்தைக் கூறும்போது காரணமான சத்தைத்தானா, அல்லது அதற்கு அன்னியப்பட்டதா, பொருந்தி நிற்பது எது என்று மறைகளை ஓதும் தாமரை மலரின் மேலோன் கூறினான்.*

காரண சத்தை தானே என்றிடில் வேறு சொன்ன
காரிய சத்தை இல்லை ஆயிடும் முன்பு சொன்ன
காரண சத்தை ஒன்றே ஆன பின் அந்தச் சத்தைக்கு
ஓது ஒரு பேதம் உண்டாம்படி எங்ஙனம் உரைமின் என்றான். 7

**பொழிப்புரை:** *காரண சத்தையே காரிய சத்தை என்று கூறுவதால், வேறுபட்டது என்று சொன்ன காரிய சத்தை இல்லை என்று ஆகிவிடும். காரணசத்தே காரிய சத்து என்றபின் பேதம் உண்டாகும் விதம் எவ்வாறு என்று கூறுங்கள் என்றான்.*

சத்தை தான் ஒன்றா நின்றது ஆயினும் காரியங்கள்
ஒத்த பேர் வேறுபாட்டால் உள்ள காரணத்தில் வேறேல்
இத் தகைத்தான வார்த்தை இயம்பு பேர் அளவே ஆனால்
வைத்த காரியம் உண்டெண்ணும் வார்த்தையும் அசத்தே ஆகும். 8

**பொழிப்புரை:** *காரண சத்தை, காரிய சத்தை இரண்டும் ஒன்றாகி நின்றதானாலும், காரிய சத்தை பொருந்திய பெயர் வேற்றுமை கொள்ளப்படுவதால், இயல்பாய் உள்ள காரணத்தை விட வேறுபட்டது என்று கூறுவது வெறும் பெயர் மாத்திரமே ஆகும். அந்தப் பெயரும் அசத்தே ஆகும்.*

**சத்தை இல்லாத போது காரியம் இல்லை ஆகும்**
**இத்தன்மைக் காரியத்துக்கு இலாமையே இசைவதானால்**
**அத்தன்மைச் சத்து அது ஆகக் காரியம் பின்னம் என்று இங்கு**
**ஒத்திடாது உரைத்த வார்த்தை என்றும் இன்றாகும் அன்றே. 9**

**பொழிப்புரை:** *சத்தை இல்லாத காலத்தில் காரியமானது இல்லாததாகி விடும். இத்தன்மையை உடைய காரியத்திற்கு தானே இல்லாமையானது பொருந்துவதால், காரியமானது முன்கூறிய இயல்பையுடையதாக சத்தையுடைய வேறு என்று இவ்விடத்தில் பொருத்தமில்லாமல் சொன்ன சொல்லானது எக்காலத்திலும் இல்லாததாகும்.*

**காரண சத்தையே அக்காரிய சத்தை இன்று**
**வேறு ஒரு சத்தை உண்டே என்றிடில் வேறு சொன்ன**
**காரிய சத்தை உள்ள காரண சத்தை ஓடு**
**கூறிய சத்தாய்க் கொண்டோ அசத்தாயோ நிற்பது என்றான். 10**

**பொழிப்புரை:** *காரண சத்தை தானே அக்காரிய சத்தை என்பதில்லை. காரியத்துக்கு வேறானதாக ஒரு சத்தை இருக்கிறதே என்று சொல்லிடில் வேறாகச் சொல்லிய காரிய சத்தையானது, இயல்பாயுள்ள காரண சத்தையுடன் சொல்லுகின்ற சத்து ரூபமாகவோ அசத்து ரூபமாகவோ வேறுபட்டு நிற்கிறது என்றான்.*

**சத்தாக் கொண்டே வேறு என்னில் ஒன்றே சத்தை இரண்டு ஆகா**
**சத்தாய் அன்றிக் காரணத்தொடு ஆகி வேறு நிற்கும் எனில்**
**சத்தாய் இது தான் இலாமையினால் அசத்தே ஆகும் காரியம்**
**அசத்தேல் உளது ஆகச் செய மாட்டாது என்றும் மலடி மகன் போல 11**

**பொழிப்புரை:** *சத்து ரூபமாகக் கொண்டு பின்னம் என்றால் காரண காரியங்களின் சத்தை ஒன்றாகவே சித்திக்கும் வேறுபடாது. காரிய சத்தையானது அசத்தாக காரணத்தோடு, பின்னமாகி நிற்கும் எனில், இந்தக் காரிய சத்தையானது சத்தாகக் இல்லாத தன்மையினால் சத்தை இல்லாததாகும். காரியமானது அசத்து ரூபமாகிப் பின்னமாகும் எனில் மலடி மகன்போல அது காரியசத்தை இருப்பதாகச் செய்ய மாட்டாது.*

**காரியம் ஒருக்கால் உண்டாம் ஒன்றினால் அழிவதில்லை**
**காரியம் தனக்கு உற்பத்தி இலாமையால் இல்லா ஒன்றாங்**
**காரியம் தான் ஒன்றோடே நண்ணும் என்று உரைத்தல் கூடா**
**பாருமின் என்று வானோர்க்கு உரைத்தனன் பதும மேலோன். 12**

**பொழிப்புரை:** *காரியமானது ஒரு காலத்தில் உற்பத்தி ஆகும். ஒன்றினாலும் அழிவதில்லை எனில் அந்தக் காரியத்திற்கு உற்பத்தி என்பது இல்லாமையே சொரூபம் ஆதலால் காரியமாகாது. அசத்தாகிய காரியம் தானும் ஒரு காரகத்தோடு தொடர்பு கொள்ளும் என்று கூறுதல் பொருந்தாது பாருங்கள் என்று தாமரை மலரின்மேல் வீற்றிருக்கின்ற பிரம்ம தேவனானவன் தேவர்களுக்குக் கூறினான்.*

**இன்னதோர் படி இருக்கும் எனப்படா இலாமையே போல்**
**அன்னதே ஆதலாலே யாவதும் இலதே ஆகும்**
**சொன்ன இவ் இலாமை தான் இங்கு அசத்து எனத் தோற்றினாலும்**
**பின்னையும் விசேடம் என்று உண்டு என்னவே பேசுவீரேல். 13**

**பொழிப்புரை:** *இவ்விதமாய் இருக்கிறது எனக்கூறத்தகாத சூனியம்போல், நிருபிக்கத் தகாததனால் அது உற்பத்தியும் இலதே யாகும். முன் உரைத்த இந்த இளமைதான் இங்கு அசத்து என்று காணப்பட்டாலும், மறுபடியும் ஒரு விசேஷம் இருக்கிறது என்று சொல்லுவீர்களானால்.*

**இதற்கு நீர் சொன்ன வேறு ஏது இயைந்திடும் சம்பந்தம் தான்**
**அதற்கு ஒரு காரகத்தால் என்னில் வேறு அமைவது இல்லை**
**ஒதுக்கம் இல்லாதது ஒன்றே விசேடமாய் இருக்கும் என்னும்**
**அதற்கு வேறு ஒன்றுமில்லை ஆதலால் கூடாது என்றும். 14**

**பொழிப்புரை:** *அசத்தாகிய இந்தக் காரியத்திற்கு நீர் சொல்லிய விசேடமாகிய வேற்றுமை, யாது, அந்தக் காரியத்திற்குப் பொருந்திய சம்பந்தமானது ஒரு கருவியால் உண்டு என்றால் அந்த விசேடமானது, பொருந்துவது இன்றாகும் பிரிவுபடாத சம்பந்தமொன்று தானே விசேடமாய் இருக்கப் பொருந்தும் என்பதற்கு விசேடம் ஒன்றுமில்லை ஆகையால் எக்காலத்தும் ஒவ்வாது.*

**காரணத்தோடு கூடல் வேறு எனில் அது தன்னாலும்**
**காரணம் தானே ஆகும் இதின் நின்றும் கருதிச் சொன்ன**
**காரியம் பிறக்கும் என்ற இது கொண்டு வேறு சொல்லிற்**
**பாருமின் குற்றம் முன்போல் பரிகரிப்பாரும் இல்லை. 15**

**பொழிப்புரை:** *சத்தாகிய காரணத்தோடு அசத்தாகிய காரியம் விசேடமாகப் பொருந்துதல். முன்கூறிய தொடர்புக்கு வேறு என்றால் அத்தன்மையின் ஆனாலும் காரியத்தையிட்ட யாதேனுமொரு காரணம் தானே ஆகும். இதிலிருந்து கருதிச் சொன்ன காரியம் பிறக்கும் என்ற இத்தன்மையைக் கொண்டு முன் கூறியதை வேறு என்று கூறினால் முன்போல் குற்றமாகும் பாருங்கள் இதை நிவிர்த்தி செய்பவரும் இல்லை.*

**இரண்டுக்கும் ஒன்றே சத்தை எனும் இது வேறே என்னில்**
**திரண்டிடும் குற்றம் எல்லாம் செறிதல் நிச்சயம் எப்போதும்**
**திரண்ட காரியம் அசத்தே ஆதலால் சதசத்து என்னில்**
**இரண்டிற்கும் உரைத்த குற்றம் இசைந்திடு இயல்பினாலே 16**

**பொழிப்புரை:** *காரியம் காரணம் இரண்டினுக்கும் சத்தை ஒன்றே எனப்படும். இது வேறென்று எண்ணினால் திரண்ட குற்றமெல்லாம் எக்காலத்தும் முன்போல சேருவது நிச்சயமாகும். ஆகையால் கூடிய காரியம் அசத்தே ஆகும். காரியமானது சதசத்தாகப் பின்னமெனில் இத்தன்மையினால், சத்தாகவும் அசத்தாகவும் சொன்ன குற்றத்திற்குப் பொருந்திவிடும்.*

உண்மையில் பேதம் இன்றி இருந்தேயும் பேதம் என்னல்
வெண்மையே செய்த ரூப வியாபாரம் தோற்றம் கேடு
பண்வயின் இவற்றால் கொள்ளும் பயன் நாம ரூபம் வேறும்
உண்மையில் எல்லாம் பொய்யால் உண்டாகிப் பொலியும் அன்றே 17

**பொழிப்புரை:** *உண்மையில் பேதம் இன்றியும் பேதமாயும் இருந்து பொருந்தும் என்று சொல்லுதல் அறிவின்மையே ஆகும். இயற்றிய வியாபாரம், உற்பத்தி நாசம் செய்யுமிடம் இவைகளால் கொள்கிற பயன் நாம ரூபம் இன்னமும் பரமார்த்த சொரூபத்தில் அனைத்தும் பொய்யினால் உண்டாகிப் பொலிவடையும்.*

எல்லா விகாரங்களும் வாக்கால் என்றும் உண்டென்று உரைப்பதுவும்
சொல்லாம் அளவே எவ்விடத்தும் தோன்றும் என்றது உண்மையதே
அல்லா விகாரம் அறிவு ஒழிய அனைத்தும் பொய்யே விகாரத்துக்கு
இல்லாதாகும் உண்மை பிறிது இல்லாதாகும் ஆதலினால். 18

**பொழிப்புரை:** *சொல்லால் சகல விகாரங்களும் எக்காலத்தும் இருக்கின்றது எனக் கூறுவதும் வாக்கு மாத்திரமே தான். எவ்விடத்தும் அவ்விகாரம் தோன்றும் என்பது உண்மையே அல்ல. காரணமாகிய அறிவைத் தவிர காரிய வருக்கங்கள் எல்லாம் மித்தையே ஆகையால். உண்மையானது காரண சொரூபத்திற்கு வேறில்லாததாகும்.*

காரணம் அதனால் அன்றிக் காரியம் உளவாய்த் தோன்றா
காரணம் ஒழிய வேறு காரியம் இன்மையாலே
காரியம் அனைத்தினுக்கும் காரணம் அதுவே உண்மை
ஏரதா இரண்டும் வேறு என்று இயம்பிடல் இயல்பு இன்றாம் ஆல் 19

**பொழிப்புரை:** *காரணம் இன்று வேறு காரியம் இல்லாததனால் காரணத்தைத் தவிர காரியங்கள் இருக்கின்றனவாகத் தோன்றமாட்டா. சகல காரியங்களுக்கும் காரணமே சத்தியமாகும், அழகுடைய காரணம் காரியம் இரண்டும் வேறுவேறு என்று சொல்லுவது தகுதியில்லாததாகும்.*

ஆம் அன்று என நினையீர் அலது அன்பின் வழி அறிவீர்
நாம் முன் சொன முதல் காரணம் அறிய முழுது அறிவாம்
சேமம்பட மிகவும் தெளிவு உறுவீர் இது என்றே
தாமம் தரு மலர் மேல் உறை தலைவன் உரை தரும் ஆல் 20

**பொழிப்புரை:** *நாம் முன்பு சொல்லிய முதன்மைக் காரணமாகிய பிரம்மத்தை அறிந்திடில் அது முழுமையான அறிவாகும், இதனை நீங்கள், அன்பின் வழி அறிவீர்களே*

*அன்றி ஆகும், ஆகாதென்று கருதமாட்டீர்கள். ஆதலால், இன்பம் உண்டாகும்படி மிகவும் தெளிவாக அறிவீர் என்று விளக்கத்தைத் தருகின்ற தாமரையில் வீற்றிருக்கும் பிரம்மன் சொல்கின்றான்.*

கூறும் பொருள் விரிவு என்றிடல் அறியாமையின் முழுதும்
வேறும் அல வேறு ஓடு உடனாய் நின்றதும் அல தான்
தேறும்படி உள காரணம் ஒன்றே உளது எனலால்
வேறு என்றிடு பேதம் இலதாம் எங்கணும் வினையால் 21

**பொழிப்புரை:** *இப்போது சொல்லிய பொருள் விரிவு என்று சொல்லுதல் முழுவதும் அறியாமையிலே தான். காரணமானது வேறானதும் அல்ல, வேறோரு உடனாய் நின்றதும் அல்ல. தான் தெளியும்படி உள்ள காரணமானது ஒன்றாக உளது எனலால் வினையால் வேறு என்கிற பேதம் எவ்விடத்திலும் இல்லாததாகும்.*

அயல் ஒன்றிடு பொருளும் அதன் பிரிவும் அறிவு அரிதாம்
இயல்பின் கண் அது அறியும் பொழுது இதுதான் மிகும் வேறாம்
அயல் என்றது அறியில் தருமியின் ஞானமும் ஆகும்
முயலும் பல பேதம் என மொழிகின்றதும் அரிதே. 22

**பொழிப்புரை:** *பேதம் பொருந்திய தருமியாகிய பொருளும் அதன் பேதமும் அறிதற்கு அரிதாகும். உண்மையாகத் தருமியை அறியும் போது வேறான இந்தப் பொருள் அதிகமாக உண்டாகும். பேதம் என்கிறது அறியுங்கால் தருமியின் ஞானம் உண்டாகும் ஆகையால், முயற்சி செய்கின்ற பல பேதம் உண்டு என்று சொல்லுவதற்கு அரிதாகும்.*

பேதம் நெறி ஓரில் இலதாகும் அதனாலே
பேதம் ஓட பேதம் அது பேசல் பிழையே ஆம்
ஏதம் இலதாய் எங்கணும் ஒன்றாய் ஒழிவில்லாது
யாது ஒன்றது முதல் காரணம் எனும் மாமலர் மிசையோன் 23

**பொழிப்புரை:** *ஆராயுங்கால் பேதமார்க்கம் இல்லாததாம் அத்தன்மையினால் பேதத்தோடு அபேதம் என்று நீரூபித்தல் குற்றமே ஆகும். துன்பம் இல்லாததாய் எவ்விடத்தும் ஒரே பொருளாய் அழியாது இருக்கின்றது எதுவோ, இதுவே ஆதிகாரணம் என்று சொல்லுவான் பெரிய தாமரை மலரின் மேலிருக்கும் பிரமதேவன்.*

மண்ணும் வனை வானும் வனைபவையும் பிறிதாயே
எண்ணும் அளவு அறிவு இன்மையில் இவனைப் பெறும் இதுவும்
கண் என்றிட வரு காரணம் ஒன்றாய் அமலம் அதாய்
எண்ணும் அறிவு உருவை இசையா நிற்பது இவ்விடையே. 24

**பொழிப்புரை:** *மண்ணாகிய துணைக் காரணமும் குயவனாகிய நிமித்த காரணமும், செய்யப்பட்ட குடம் முதலானவைகளும் பேதமாகவே எண்ணுங்கால், இந்த மண்ணும் அறிவு இன்மையில் குயவனை அடையும் இவ்விடத்தில் 'திருக்' என்னும்படி வருகின்ற காரணமானது ஒன்றியும், சுத்தமாயும் கருதுகின்ற அறிவுருவைப் பொருந்தி நிற்கிறது.*

**வனைகின்றவன் எனக் காரணமாஞ் சேதனம் வேறாய்**
**நினையும்படி இலது ஆதலின் நிலையாய் உளது அறிவே**
**அன காரணம் அறிவாயினும் வனைவானிகர் அன்றாம்**
**நினை மண்ணோடு நிகரானவை தனையே கொடு செயும் ஆல். 25**

**பொழிப்புரை:** *செய்பவனாகிய குயவனைப் போலவே காரணமாகிய அறிவுப் பொருளை வேறாய் நினைக்கும்படி இலதாதலின் நிலையாயுள்ளது அறிவே. அத்தன்மைத்தாகிய காரணமானது அறிவாயினும் குயவன் போலன்றாகும். கருதப்படும் மண்ணினோடு சமானமாய் உள்ள துணைக் காரணங்களாகவும் தன்னையே கொண்டு செய்யும்.*

**தோன்றலால் அசித்துமாகித் தமத்தொடு கலந்து நின்றே**
**ஆன்ற தவம் முனிகள் பண்ணு மனனத்தால அளப்ப ஒண்ணாதாய்ச்**
**சான்றதாய் எங்கும் நின்ற சங்கரன் உடைத்தாய் ஒன்றாய்**
**ஈன்றிடும் அரிய எல்லாம் இத் தன்மைத்து என ஒன்று உண்டு 26**

**பொழிப்புரை:** *விவாகமாத்திரத்தால் தோன்றுதலால் அசித்து ரூபியாகியும், தமோ ரூபத்துடன் பொருந்தி நின்று அறிவுமிகுந்த அந்த முனிவர்கள் செய்யும் மனனத்தால் அளக்கக்கூடாததாகவும், சாட்சியாகவே எவ்விடத்தும் பிரகாசிக்கின்றன சங்கர சம்பந்தமுடையதாயும், ஒரு பொருளுமாயுள்ள உற்பத்தி செய்தற்கரிய அனைத்தையும் இப்பரிசினையுடையது என்னும்படி சிருஷ்டி செய்கின்ற மாயை என்னும் சத்தியிருக்கின்றது.*

**காரணம் மேவி மாயை படைத்து அளித்து அழிப்பது ஆகும்**
**காரணஞ் சத்தாஞ் சித்தாய் இருத்தலால் என்று கொண்டே**
**பூரணம் ஆகி உள்ள பொருளினைச் சுரர்கள் கேட்ப**
**ஆரணம் உரைத்த ஆதி அருளினன் அறியும் வண்ணம் 27**

**பொழிப்புரை:** *பரிபூரணமாக உள்ள பொருளினை தேவர்கள் பிரம்மனிடத்தில் கேட்க காரணப் பொருளானது தன்னில் கற்பிக்கப்பட்ட அந்த மாயையோடு பொருந்தி, சகலத்தையும் படைத்து, காத்து, அழிப்பதாகும். காரண சொரூபமானது சித்தாக இருப்பதால் சத்தாகும் என்று கருதி அத்தேவர்கள் உணரும்படி வேதத்தை அருளிய பிரம்ம தேவனானவன் சொன்னான்.*

**உண்மை சித்தினுக்கே உள்ளது அசித்து எனும் பழுதைப் பாம்பு இங்கு**
**எண்மையில் இலாத வண்ணம் இசையும் உங்கட்கும் ஏற்கக்**
**கண் என முழுதும் நின்ற காரணம் ஒன்றே சத்தாய்**
**எண்ணிடில் என்றும் உள்ளது இச்சகம் முனம் சத்தாம் ஆல். 28**

**பொழிப்புரை:** *இருக்கும் தன்மை சித்து ஒன்றிற்கு மட்டுமே இருக்கின்றது. சடம் என்று சொல்லப்பட்ட கயிறு, பாம்பு இவ்விடத்தில் எண்ணிடில் இல்லாதவாறு உங்களுக்குச் சமாதானம் ஆகும்படி பொருந்தும், கருதில்திருக்கும் சொரூபமாக எங்கும் வியாபித்த காரண சொரூபமொன்று தானே சத்தாகி எக்காலத்தும் இருக்கிறது. இந்த உலகம் எல்லாம் சிருட்டிக்குமுன் சத்தாகும்.*

அறியாதார் அசத்தாய் முன்பு காரணம் உளதாய்த்து என்பர்
நெறியால் இவ் அசத்து உண்டாக்கும் காரணம் ஆகாது என்றும்
பிறியாத காரியங்கள் இதினின்றும் பிறக்கும் என்னில்
வறியாத மலடி மைந்தன் காரணம் மக்கட்கு எல்லாம் 29

**பொழிப்புரை:** *உணராதவர்கள் சிருட்டிக்கு முன் அசத்தாக காரணம் உள்ளதாயிற்று என்பார்கள். முறைமையால் இந்த அசத்தானது எக்காலத்தும் உற்பத்தி செய்யும் காரணம் ஆகாது. காரணத்துக்கு வேறாகிய காரியம் பொருள்கள் இந்த அசத்தில் நின்று உற்பவிக்கும் என்றால் வீணாகிய மலடி மைந்தனும் எல்லா மானிடவர்க்கும் காரணமாகும்.*

அசத்துத் தன் சத்தியாலே யாவுக்கும் முதலாம் என்னில்
அசத்துக்குச் சத்தி கூடாதாம் அசத் ஆதலாலே
அசத்து அலா வித்தினின்றும் அங்குரம் தோன்றலாலே
அசத்திற்கு அஃதின்றாம் சத்தே யாவையும் ஆவது என்றும் 30

**பொழிப்புரை:** *அசத்தானது தனது சத்தியினால் சகலங்களுக்கும் காரணம் ஆகும் என்னில் அந்த அசத்தினுக்கு வல்லமை சேராதாகும். ஏனெனில், அபாவ ரூபமாதலால் சத்தாகிய வித்தினின்றும் முளை உண்டாதலால் அசத்தாய வித்திற்கு முளை உண்டாகும். தன்மை இல்லாதாகும். ஆகையால் சத்தொன்றே எக்காலத்தும் காரணம் அனைத்தும் ஆகின்றது.*

அசத்தின் கண் உளதாம் சத்தி சத்தாயோ அசத்தாக் கொண்டோ
அசத்துடன் சத்தாய்க் கொண்டோ ஆய் நின்றவாறு அது என்னை
அசத்தினை உளதாம் சத்தி ஆசிரித்திடுவது என்னில்
அசத்தாய் மலடி மைந்தன் அத்தகு சத்தன் ஆவான் 31

**பொழிப்புரை:** *அசத்தினிடத்தில் இருக்கின்ற சத்தியானது சத்தாகவோ அசத்தாகவோ சதசத்தாகவோ இவைகளில் எதுவாகி நிற்கின்றது? அசத்தாகிய காரணத்தினை சத்தாகிய சத்தியானது ஆசிரித்திடுவதென்னில், அசத்தாய மலடி மைந்தன் அத்தன்மைத்தாய சத்தியை உடையவன் ஆனான்.*

அசத்தின் தன் சத்தி தானும் அசத்தாயே நிற்பது என்னில்
இசைத்திடுங் காரியங்கள் யாவையும் இயற்றாது என்று
அசத்தோடே மலடி மைந்தன் ஆக்குவது இலாமையே போல்
அசத்தோடே சத்தே என்னில் ஆயிடும் இரண்டின் குற்றம். 32

**பொழிப்புரை:** *அசத்தினுடைய சத்தியானது அசத்தாயே நிற்கின்ற தென்றால் மலடி மைந்தன் அசத்துடன் பொருந்தி ஒரு பொருளை உற்பத்தி செய்வதில்லாதது போல, சொல்லுகின்ற தொழில்கள் அனைத்தையும் எக்காலத்தும் செய்யமாட்டாது அசத்தியானது சதசத்து என்னில் முன்சொல்லிய இரண்டு விதமான குற்றங்களும் உண்டாகிவிடும்.*

அசத்துத் தன் சத்தியாலும் காரணம் ஆகாதானால்
அசத்து முன்பு உளது என்று ஓதற்கு அருத்தமும் இல்லையே ஆம்
அசத்து அலாது ஆகும் ஒன்றே அனைத்திற்கும் முதல் அதாகும்
அசத்து உளதாகும் என்றல் அழிந்திடும் வார்த்தை அன்றே. 33

**பொழிப்புரை:** *அசத்தானது தனது சத்தியினாலும் காரணம் ஆகாதாயின் அசத்தானது சிருட்டிக்கும் முன்பு இருந்ததென்று சொல்லுவதற்கு பொருளில்லாததாகும். ஆகையால், அசத்து அல்லாத சத்து ஒன்றே சகலங்களுக்கும் காரணமாகும். இருட்டிக்கு முன்பு அசத்து இருந்ததாகச் சொல்லுதல் நிலையாத வார்த்தையாகும்.*

பூத்ததால் உளதாய் உள்ள புவனங்கள் உயிர்கள் முன் போன்று
ஓதத்தான் அரிய சத்தால் உதித்தது என்று உணரும் வண்ணம்
வேதத்தால் முழுதும் சொன்ன வடிவினை விளங்கு மாற்றால்
ஓதத்தான் தொடங்கல் உற்றான் உயர்தரு சுரர்கட்கு எல்லாம். 34

**பொழிப்புரை:** *ஐம்பூதங்களால் உற்பத்தி ஆக்கப்பட்டுள்ளதான உலகங்களும் உயிர்களும் முன் ஊழிக்காலத்தில் சொல்லுதற்கு அரிய சத்ரூப பிரம்மத்தில் நின்றும் உண்டாகியது என்று, தேவர்கள் அறியும் வண்ணம் வேதங்களில், முழுதும் சொல்லியபடி பிரம்ம வடிவத்தை விளங்கும்படியாக பெருமை பொருந்திய தேவர்கட்கு எல்லாம் பிரம்ம தேவன் சொல்லத் தொடங்கினான்.*

எல்லாம் உண்டாவதற்கு முன்னே தோன்றும்
இத்தனைக்கும் காரணமாம் சத்தேயாகும்
இல்லாத முதன் முடிவை உடைத்தாய் ஒன்றாய் இருக்கும்
இது என்றும் உள இயல்பிற் றாகி
நில்லாத உலகனைத்தும் முன்பு செய்த
நெறியதனை உடைத்தாகி நிமலமாகிச்
சொல்லாலும் அளப்பரிதாய்த் தன்னது உண்மை
சுருதி முடிவுதனாலும் தொடர ஓணாதாய் 35

**பொழிப்புரை:** *சிருஷ்டிக்கு முன்னே உலகெலாம் தோன்றி உள்ளதற்குக் காரணமாய் உள்ளது பிரம்மமே. ஆதியும் அந்தமும் இல்லாத தன்மை உடையதாயும், ஏகமாய் இருக்கின்றதாயும் முக்காலத்திலும் உள்ள இயலபினதாய் நிலையில்லாத இந்த உலகனைத்தும் முன் ஊழிக்காலத்தில் செய்த நெறிமுறை உடையதாகி, நின்மலமாகி, வாக்கினால விளக்க முடியாததாகி தன்னுடைய மெய்ம்மையை வேதாந்தங்களாலும் தொடர முடியாததாகி உள்ளது.*

காலமும் கன்மம் தானும் பரிபாகம் ஆனவாற்றால்
ஞாலம் உண்டாக்கும் நல்ல குணத்தினைக் கலந்து நிற்கும்
பாலது ஒன்றில்லா இந்தச் சத்திமான் படைத்தற்காக
ஏலவே எல்லாம் ஆவோம் என்று கொண்டு இசைந்து பார்த்தான் 36

**பொழிப்புரை:** *சிருஷ்டிக்கிரியை காலமும் பிராணிகளின் புண்ணிய பாவ கன்மங்களும் பரிபக்குவமான படியால், உலகைச் சிருஷ்டி செய்ய சுத்த சத்தவ விருத்தியைச் சேர்ந்து இருப்பவனும், பாரபட்சம் இல்லாதவனுமாகிய இந்தப் பிரம்மன் சிருஷ்டி செய்வதற்காக ஏகனாகிய நாமே அநேகமாக ஆவோம் என்று அருளால் நோக்கினான்.*

பார்த்தபின் முன் ஆகாயம் வாயுவைப் படைத்துப் பின்பு
தீத்தனை அப்பைச் செய்தே அனம் எனச் சொல்லப்பட்ட
பூத்தனை உளதாய்ச் செய்து அகாரணம் ஆகா ஈசன்
வாய்த்த நுண் பூதம் ஐந்தாய் வகுத்தவாறு இயம்பக் கேண்மின் 37

**பொழிப்புரை:** *பார்த்த பின்பு, முன்னாக விண்ணையும் காற்றையும் சிருட்டித்து பிறகு தீயையும் சலத்தையும் உண்டாக்கி அன்னம் என்று சுருதியில் சொல்லப்பட்ட பூமியையும் சிருட்டித்து காரண வஸ்துவான ஈசுவரன் பொருந்திய அபஞ்சீகிருத பஞ்ச பூதத்தை பஞ்சீகிருதமாகப் பிரித்த தன்மையைக் கேளுங்கள்.*

தன் மாத்திரைகள் ஐந்தினையும் ஓரொன்று இரண்டாய்ப் பகுத்து ஒன்றை
நன் நாலாக்கித் தன் பாதி ஒழிந்த நாலின் உடன் கூட்டி
இன்னே அலாத ஐந் நான்கில் இயல்பில் கூட்ட வான் ஆதி
பின்னே தூல பூதம் எனப் பிறக்கும் எனவே பெயர்த்து உரைத்தான். 38

**பொழிப்புரை:** *தன்மாத்திரைகள் ஐந்தினையும் ஒவ்வொன்றை இரண்டாகப் பங்கிட்டு அவைகளில் ஐந்து அங்கிசங்களை எடுத்து ஒவ்வொன்றை நன்னான்காகச் செய்து, தனது பாதியாகிய ஐந்து நீக்கிய ஒரு பூதத்தினது நான்கு பாகத்தோடு மற்றை பூதங்களின் பதினாறு பாகத்தையும் சேர்த்து, இத்தன்மையவாய் ஒழிந்த இருபது அங்கிசங்களினால் அபஞ்சீகிர்த பூதங்களை இவ்வியல்பாகப் பஞ்சீகர்ணம் செய்ய அதன்பின்பு தூல பூதமாக உண்டாகும் என்று திரும்பவும் கூறினான்.*

அறியாமை வடிவாய் உள்ள புவனங்கள் அமைத்துப் பின்பு
பிறியாத கன்மம் தன்னின் வசத்தினால் உயிர்கட்க்கு எல்லாம்
செறிவாய கால பாகம் ஆன பின் ஈசன் தானே
பிறிவாகும் நான்கு யோனி பிறந்திடும் வகையே செய்ய 39

**பொழிப்புரை:** *அறியாமை வடிவமாய் உள்ள உலகங்களை உண்டாக்கி, பின்பு நீங்காத கன்மத்தின் வசத்தால் எல்லாப் பிராணிகளுக்கும் பொருந்திய கால பரிபக்குவம் வரும் காலத்து ஈஸ்வரன், வேறு வேறு நான்கு யோனிகளாக (அண்டஜம், ஜராயுஜம், சுவேதஜம், உற்பீஜம்) உண்டாகும்படி சிருட்டிப்பான்.*

ஈசனாம் இறைவன் ஒத்த அறிவினால் எங்கும் ஆகிப்
பேசிடும் நாம ரூபம் முன்பு போல் பிறக்கச் செய்தான்
மாசிலாச் சகத்துத் தானே உளது போல் இசைந்திட்டலும்
ஈசனை ஒழிய வேறு நிற்பது ஒன்றில்லை என்றும் 40

**பொழிப்புரை:** *பரமேசுவரனான இறைவன் ஒரே தன்மையுள்ள தனது அறிவினால் எல்லா இடத்தும் வேறுவேறாகக் கூறும் பெயர்களை உடைய முந்தைக் கற்பம் போல் உண்டாகச் செய்தான். மாசில்லாத உலகில் தானே சத்தியப் பொருளாய்ப் பொருந்தினாலும் ஈசனை ஒழிய எக்காலத்திலும் உலகானது வேறாக இல்லை.*

அனலினிற் சிவந்த மேனி ஆனது அவ்வொளியே ஆகும்
அனல்வயின் வெண்மை அப்பாம் கருமை பூமியின் தன் கூறாம்
எனும் இவை மூன்றும் அன்றி ஈண்டு அனல் என்பது இல்லை
அனல் எனும் விகாரம் வார்த்தை ஆவதே அன்றி இல்லை 41

**பொழிப்புரை:** *அனலில் தோன்றும் சிவந்த வடிவம் அந்தச் சூட்சுமத்தின் பிரகாசமே ஆகும். அனலில் தோன்றும் வெண்மை நிறம் நீரின் பாகமாம், கருமை நிறம் பூமியின் பாகமாம் எனும் இவை மூன்றும் அல்லாமல் இங்கு அனல் என்பது வேறில்லை. அக்கினி என்னும் வேற்றுமை வார்த்தை மாத்திரமே அன்றி உண்மையில் இல்லை.*

ஆதித்தன் இரத்த வன்னம் ஆனது அவ்வொளியதாகும்
ஆதித்தன் இடத்து வெண்மை அப்பினது ஆகும் நின்று
பேதித்த கருப்புப் பூமியுடையது இம் மூன்றும் அன்றி
ஆதித்தன் என்று வேறு இங்கு இல்லை என்று அறிமின் என்றும் 42

**பொழிப்புரை:** *சூரியனுடைய சிவந்த நிறமானதுவும் அந்த அக்கினியின் ஒளியே ஆகும். சூரியனிடத்து உள்ள வெண்ணிறமும் அந்த அக்கினியின் நீரே தான். அச்சூரியனிடத்துப் பேதமாகத் தோன்றுகின்ற கருமை நிறமும் பூமியுடையதே. இம்மூன்றும் இன்றி இவ்விடத்தில் சூரியன் என்று ஒருவனே அன்றி வேறுயாரும் இல்லை என்று உணருங்கள்.*

அறிவொடு விவேகம் இல்லார் ஆதலால் அவர்களாலே
பிரிதர இரவி என்று பேசிடப்பட்டது என்று
அறி கனல் ப்ருதிவி நீர் என்று ஆன இம் மூன்றும் அன்றிப்
பிரிது சந்திரனை மின்னைப் பேசிடல் பிழையே அன்றோ 43

**பொழிப்புரை:** *விவேக அறிவு இல்லாதவர்கள் ஆதலால் வேறாகச் சூரியன் இருக்கிறான் என்று கூறப்பட்டது. எக்காலத்திலும் காணப்படுகிற நெருப்பானது, மண் நீர் எனவாகிய இந்த மூன்றும் அன்றி வேறு சந்திரனையும் மின்னலையும் பேதமாகச் சொல்லுதல் குற்றமல்லவா!*

பூதம் புவனம் சுவர் வேறு குடம் போலும் பொருளாய் உளவாகும் எலாப்
பேதம் பிரமம் ஒழிய இலையாற் பேர்வற்றிட நின்றது தான் அதுவே
ஓதும் சனனம் பல வாதனையால் உடலம் முதலாகிய வெளியினிலே
பேதம்பட நான் எனவே அறியும் பெயரா மயலாயிடும் எங்கணுமே 44

**பொழிப்புரை:** *பூதங்களும் உலகங்களும் ஆகாயமும் வேறான குடமும் போலும் பொருளாக இருக்கின்ற சகல பேதங்களும் பிரமத்தைத் தவிர வேறு இல்லை. அப்பிரமமே நீக்கமுன்றி நிலைத்து நிற்கின்றது. சொல்லுகின்ற பலசென்ம வாதனையால் எவ்விடத்தும் பேதம் பொருந்திய நான் என்று அறிகின்ற, உடல் முதலாகிய வெளியினிலே வேறாக நான் என்று அறிகிற நீங்காத அறியாமை உண்டாகி விடும்.*

**ஊன் இந்திரிய ஆதிகளான எலாம் ஓருங்கணில் நான் எனல் ஆகியிடா**
**வானம் முதலாகிய பூதம் அதால் வரவின் படியே வளர்வு உற்றுளதால்**
**ஆனஅம் மணினால் அமையும் சுவர்தான்ஆகும் மணுநீர் கொடளித்திடல் போல்**
**ஊனும் கரணங்களும் உண்பவையால் உளதாய் வளரும் எனவே உணர்மின்**
**45**

**பொழிப்புரை:** *தேகம் இந்திரியங்கள் அனைத்தும் வானம் முதலிய பூதங்களால் உற்பத்தியானவாறே அதனின்று விருத்தி அடைந்துள்ளதால் ஆலோசிக்குமிடத்தில் நான் எனது என்பது ஆன்மா ஆகாது. நீரினாலும் மண்ணினாலும் அமைந்துள்ள சுவரை மண்ணினின்றும், நீரினின்றும் காப்பது போல் தேகமும் இந்திரியங்களும் புசிக்கின்ற அன்னம் முதலியவற்றால் விருத்தியாகும் என்றே உணருங்கள்.*

**ஊன் ஆதிகளாய திரட்சியிலே ஒளியாவணம் நான் எனது என்று கொடே**
**நானே நுகர்வேன் அவை என்று உணரும் நானா அறிவானவை விட்டு இவையில்**
**தானே முதல் கண்டு இவை இத்தனையில் சலியா அறிவாகிய தன்மையிலே**
**நானே அது என்றிடும் நல்லறிவோர் நாடார் பிறிது என்பது நாள்தொறுமே. 46**

**பொழிப்புரை:** *தேகாதிகளாகிய கூட்டங்களில் மறைவுபடாதபடி, நான் என்றும் எனது என்றும் அபிமானித்துக் கொண்டு விஷயங்களை நானே புசிக்கின்றேன் என்று எண்ணுகிற பலவிதமான பேத ஞான அறிவை விட்டு, இந்தத் தேகாதிகளின் காரணத்தைக் கருதிப்பார்த்து, இவைகளில் மனம் லயிக்காது அறிவு வடிவான சுபாவத் தன்மையினால் நானே அந்தப் பிரம்மம் என்கின்ற நல்ல ஞானிகள் எப்போதும் துவிதம் என்பதை விரும்பமாட்டார்கள்.*

**கடையப்படு தயிரில் திரள்நெய் போல் மன முதலாம்**
**இடையிற் செயும் இயல் வேறு இலை உள பூதம் அது இடையே**
**அடையத் திரள் உருவில் செலும் மதி விட்டு அறிவு உருவாம்**
**அடையப் பிறிதில மெய்ப்பொருள் அது நான் என அறிவீர். 47**

**பொழிப்புரை:** *கடையப்படுகின்ற தயிரில் உண்டாகும் நெய்போல, மனம் முதலானவைகள் உண்டாகும் இதுவன்றி நடுவில் செயல் ஏதுமில்லை. பொருந்திய பூதத்தினிடத்திலும் முற்கூறிய பூத காரணமான தேகாதி இந்திரியங்களின் மீதுள்ள அபிமானத்தைவிட்டு அடைய வேண்டியது நித்திய வஸ்துவான சொரூபமே அன்றி வேறு இல்லை. அந்த மெய்ப்பொருள் அதுவே தனது வடிவம் என அறியுங்கள்.*

அன்னத்தால் நிறைவிலானுக்கு அறிவு தோன்றாமையாலும்
அன்ன காரியமே புத்தி ஆதல் நிச்சயம் அதானால்
அன்னத்தால் உண்டாம் அந்தப் புத்தியைத் தவிர்த்து நாளும்
உன்னுவான் எங்கும் காணும் அறிவு நான் என்று எப்போதும். 48

**பொழிப்புரை:** *அன்னத்தினால் நிறைவில்லாதவனுக்கு நூலறிவு விளங்காததனாலும், அன்னத்தின காரியமே மனமாகுதல் உறுதியானால் அன்னத்தினால் உற்பத்தியாகிய அந்த மனத்தை எந்நாளும் நீக்கி, சர்வசாட்சியான ஞான சொரூபமே, நான் என்று எக்காலத்திலும் நினைக்கக்கடவன்.*

தேக இந்திரியாதிகள் ஆகும் திரட்சியினை நான் எனது என்றே
போக நின்ற புத்தியினை விட்டுத் தானாயிருந்து உளதாய்
ஆகாது எல்லாம் ஆகியிடும் அறிவாம் சித்தில் யாது ஒருகால்
ஆகா ஒன்றாய் அடங்கியிடும் அவன் தன் இயல்பை இயம்பிடுவாம் 49

**பொழிப்புரை:** *உடல் இந்திரியங்கள் முதலான கூட்டங்களை நான் எனது என்று சொல்லுகின்ற புத்தியை விடுத்து தான்மாத்திரம் இருப்பாய், ஞான சொரூபமான சித்தில் மறைவாய் இருந்த வஸ்துக்கள் எல்லாம் தடைவிலகி விளங்கும். யாதொரு காலத்தில் சென்று ஏகமாய் நிலைத்து இருப்பானோ அவனது சுபாவத்தைக் கூறுவாம்.*

அப்போது சுகதுக்கங்களாதியாச் சொல்லப்பட்ட
எய்ப்பாய விகாரம் எல்லாம் அறியாது தன்னைத்தானே
மெய்ப்பாடாய் நுகரா நின்றோன் விளங்க அவ்விடத்தே காணும்
தப்பாது தானாய் நின்ற சுகத்தினைத் தடைஒன்று இன்றி. 50

**பொழிப்புரை:** *நானே ஞான சொரூபம் என்று விளங்கிய காலத்து இன்ப துன்பங்கள் என்று கூறப்படுகிற துன்பத்திற்கு ஏதுவான மனோ வேறுபாடுகள் எல்லாவற்றையும் நினையாது தன்னைத் தானே சொரூபப் பொருளாய் அனுபவிப்போன் விளங்கும்படி அந்தச் சொரூபநிலை தவறாமல் அந்த ஆனந்த நிலையின் சுகத்தினைத் தடையின்றி அனுபவிப்பான்.*

ஆதலால் அறிவு உள்ளோர்கள் அழிந்திடும் உடலேயாதி
சேர் தரு புத்தி தன்னைச் செலவிட்டுத் தெளியும் வண்ணந்
தீதிலாது எவையுங் காணும் திகழ்தரு சித்தின் கண்ணே
ஏதிலா மதியை நான் என்றிடுமின்கள் இசைந்து எப்போதும். 51

**பொழிப்புரை:** *ஆகையால் பிரம்மத்தை உணர வேண்டும் என்று ஞானநாட்டம் உள்ளவர்கள் அழியும் இவ்வுடலுடன் சேர்ந்தே இருக்கின்ற புத்தியைப் போகவிடாது தெரிவித்து குற்றம் இல்லாமல் எல்லாவற்றையும் காண்கின்ற பிரகாசம் பொருந்திய சித்தின்கண்ணே இசைத்து எக்காலத்தும் குற்றமில்லாத மதியை நான் என்று சேர்த்து வையுங்கள்.*

காண்பவன் தானே ஆகும் காண்பவை என்ற யாவும்
காண்பவன் தன்னில் வேறு ஒன்று இன்மையில் தனையே காணும்
பூண்பது ஒன்று இன்றி நின்ற பூரணம் அது நீ என்ற
மாண்ட வார்த்தைக்கும் உள்ள பொருள் இதின் மற்றொன்று இல்லை 52

**பொழிப்புரை:** *காணப்படுகின்ற பொருள்கள் எல்லாம் காண்பவனே யாகும். காண்பவன் தன்னைத் தவிர வேறொரு பொருள் இல்லாததனால் தன்னையே காண்கிறான். அகண்டமான அந்தப் பிரமமே நீ என்ற அணியத்தக்க வேறொரு பொருள் நில்லாது நிற்கின்ற பூரணப் பொருளே அன்றி வேறு ஒன்றும் இல்லை.*

நீ என்கின்ற வார்த்தைக்கும் பொருளாய் என்றும் நிற்பதுவே
நான் என்கின்ற வாசகத்தின் பொருளாய் நின்று நாடுவது
நான் என்கின்ற வாசகத்தின் பொருளாய் நாடி நிற்பதுவே
நீ என்கின்ற வாசகத்தில் நிற்கும் பொருளும் நிலைபெறவே. 53

**பொழிப்புரை:** *அது நீ என்னும் வார்த்தைக்கும் இலக்கியப் பொருளாக எப்போதும் நிற்பது தானே அகமென்னும் சொல்லினது இலக்கியப் பொருளாக நின்று விளங்குகின்றது. அகம் என்னும் சொல்லின் அருத்தமாக விளங்கி நிற்பதுவே நீ என்னும் சொல்லில்திரமாக நிற்கின்ற பொருளுமாகும்.*

சொல்லிய இரண்டினாலும் சுட்டிடப்பட்டு மேலா
எல்லையில் பொருள்கள் ஆனது யாவுக்கும் முன்னே தோன்றி
நல்லதோர் அறிவாயுள்ளது யாது ஒன்று அது என்னும் வார்த்தைக்கு
எல்லையாம் பொருளும் தானே எனும் இதில் ஐயமில்லை 54

**பொழிப்புரை:** *முன்சொல்லிய நீ, நான் என்னும் இரண்டினாலும் மேன்மையாகக் குறிக்கப்பட்டு அளவற்ற பொருள்கள் அனைத்துக்கும் முன்னே தோன்றிய, அந்த அறிவாய் உள்ள சித்ரூபமாய் உள்ளது எதுவோ அந்த ஒரே வஸ்துவான 'அது' என்னும் வார்த்தைக்கு இலட்சியார்த்தம். இதற்கு ஐயம் இல்லை.*

உடம்பாதிகளில் வேறாகி நீ நான் என்னும் உரையாலே
திடம்பாடாகச் சொலும் இந்தச் சித்தாய் உள்ள பொருளிடையே
அடங்காது அதுஎன்றிடும் வார்த்தைக்கு அருத்தம் உடம்பது எனச்சுருதி
தொடர்ந்தே தத்தொமசி என்றே சொல்லுமாறு இன்று என உரைத்தான் 55

**பொழிப்புரை:** *தேக இந்திரியாதிகளில் வேறாகி நீ, நான் என்கின்ற வாக்கியங்களால் உறுதிப்பாடாகச் சொல்லுகிற இந்தச் சித்தாய் உள்ள பொருளினிடத்தே அடங்காமல், அது என்னும் பொருள் உடம்பென்று சுருதியானது தொடர்ந்து அது நீ ஆகின்றாய் என்று தற்பதத்தின் ஐக்கியத்தைச் சொல்லும் நெறியில்லை என்று சொன்னான்.*

தத்பதப் பொருளாய் உள்ள அறிவொடே கூடுதற்கு
நிற்பது ஒன்று இலையாய்ச் சொல்லப்பட்ட காயாதி விட்டு
மெய்ப்படத் துரியத்தோடே ஏகனாய் வேறிலாத
சிற்பொருள் தனையே தத்தொமசி எனச் செப்பும் அன்றே. 56

**பொழிப்புரை:** *தத்பதத்தின் அர்த்தமான ஞானத்துடன் பொருந்துவதற்கு, நிலையாய் நிற்பதற்கு ஒன்றும் இல்லாததாய்க் கூறப்பட்ட தேக ஆதிகளை விடுத்து, பிரமத்தாலே அபேதமாய்த்துரிய நிலையில் அத்துவிதனாய்த் தனக்கு வேறு இலாத இச்சுபாவத்தையே சுருதியானது தத்துவமசி என்று ஐக்கியம் கூறும்.*

**அதுஎன்று உரைசெய் பொருளாம் அதிலும் நீஎன்று உரைசெய் பொருளாமிதிலும்**
**மதிபண்ணிட வேறு அதுவாகியிடும் அறிவாதிய காரணம் அன்றியிலே**
**எதுஒன்றும் இலாது அவை யாவையுமாய் இது என்றிடு கேவல சித்தினையே**
**அதுநீ எனும் வாய்மொழியாம் அதனால் அறியும்படி சொன்னது இவ் ஆரணமே.**
57

**பொழிப்புரை:** *அது என்று சொல்லும் பதத்தினுடைய பொருளிலும், நீ என்று சொல்லும் பதப்பொருளினிடத்தும் கருதுங்கால், வேறாகி நின்ற சர்வக்கியத்துவம் முதலிய காரணத்தை அல்லாமல் யாதொரு திருசியப் பொருளும் இல்லாமல் அந்தப் பொருள் அனைத்துமாகிய இது என்றிடும் கேவல சித் சொரூபத்தையே அது நீ என்னும் வாக்கியத்தினால் இந்த வேதம் உணரும்படி சொன்னது.*

**தத்துவம் என்ற வார்த்தை இரண்டுக்கும் பொருளது ஆகிச்**
**சித்து மெய்யாகி நின்ற திகழ் பரம் ஒன்றாம் தன்மை**
**தற்பரம் தன்னிலே சித்திக்கும் என்பதே இங்கு**
**அப்படி வாக்கியத்தின் அருத்தமே ஆகும் அன்றே.** 58

**பொழிப்புரை:** *அது நீ என்னும் வார்த்தை இரண்டு சொற்களுக்கும் பொருளாயும் சித்து உருவாயும் நின்ற பிரகாசிக்கும் பரமான்மா ஒன்றாம் தன்மை தானான சுபாவத்தினால் நிலைக்கும் என்பதுவே இவ்விடத்தில் அவ்வண்ணம் வாக்கியத்தினது பொருளாகும்.*

**இப்படி அன்றி வேறாய் இருந்துள்ள பொருள் தான் யாது ஒன்று**
**அப்பொருள் வாக்கியத்தின் அருத்தம் அன்றாகும் ஒன்றாம்**
**மெய்ப்படு பொருளின் ஞானம் உளது ஆகா வாக்கியத்தாற்**
**செப்பிடும் வார்த்தை தன்னில் அறிவின்மை சிதைத்தல் செய்யும்** 59

**பொழிப்புரை:** *இப்படி அல்லாமல் வேறாய் இருக்கும் யாதொரு பொருளுண்டோ அந்தப் பொருளானது வாக்கியார்த்தம் ஆகாது. அந்த வாக்கியத்தால் ஏகமாகிய உண்மைப் பொருளுணர்வு இல்லை. அவ்வாக்கியமான வித்தையால் சொல்லும் வார்த்தையில இருக்கிற அறியாமையை நாசம் செய்யும்.*

**அறியாமையினை அழிவித்துக் கொண்டே இந்த வாக்கியந்தான்**
**பிறியாது ஒன்றாம் அறிவினை உண்டக்காது என்று பேசுங்காற்**
**செறிவாய் உண்மை உருவாகும் சித்தின் ஒளியைத் தவிர்த்து உண்டாம்**
**அறியாமை அது ஒன்று என இல்லையாகும் உண்மை அறியுங்கால்** 60

**பொழிப்புரை:** *இந்த வாக்கியமானது அறியாமையினை நாசம் செய்வித்துக் கொண்டு வேறுபாடு இல்லாமல் ஏகமாகிய ஞானத்தை உண்டாக்காது என்று பேசுங்கால். எங்கும் நிறைந்ததாகி உண்மை உருவாகிய சித்தன் ஒளியைத் தவிர்த்து உண்டாகிற அறியாமையானது ஒருபொருள் என்பதற்கு உண்மையை ஆலோசிக்கும் இடத்தில் இல்லையாகும்.*

நோக்கியகால் வாக்கியத்தால் நுண்ணிதாய பரத்து ஒளியை
நீக்கி நிற்கும் அறியாமை என்பது இல்லை ஆதலினால்
ஆக்கமில்லா அறிவின்மை அழிப்பது என்றுங் கூடாது
தாக்கது இன்றி ஒன்றாதல் தன்னால் கூடும் தன்மையதே 61

**பொழிப்புரை:** *வாக்கியத்தால் ஆலோசிக்கும் இடத்தில் நுண்ணிதான ஞானப் பிரகாசத்தினை ஒழித்து நிற்கின்ற அறியாமை என்பது இல்லை. ஆகையால், உண்டாகாத அறியாமையை நீக்குவது எக்காலத்தும் பொருந்தாது. விரோதம் இன்றி ஒன்றாதல் தானாகவே பொருந்தும் தன்மை உடையது.*

பிரமாணங்கள் ஆனவை தான் பேதமில்லாது ஒரு பொருளைத்
திரமாய் இது என்றிட மாட்டா செல்லாதாம் இங்கு ஆதலினால்
உரை மாத்திரமாய் யாவையினும் உள அஞ்ஞானம் அது தானும்
பரமாம் ஒளியே ஆகியிடும் பார்க்கில் உண்மைப் பரிசு இதுவே 62

**பொழிப்புரை:** *எல்லாப் பிரமாணங்களும் பேதம் இல்லாத ஒப்பற்ற பிரம்மத்தை இது என்று என்று குறிக்க மாட்டாவாம். ஏனெனில், இந்தச் சொரூபத்தினிடத்தில் செல்லாதாகும் ஆதலால் உரை மாத்திரமாய் அனைத்திலும் உள்ள அறியாமை என்பதும் பரமாகிய இந்தப் பொருள் மாத்திரமே ஆகும். நோக்குங்கால் உண்மையான தன்மை இதுவே.*

அறியாமை என்று வேறாம் அதுதானும் அறிவின் உண்மை
பிறியாது நுண்மை காணும் அளவினில் உளது சத்தே
அறியாமை சத்து அசத்தே ஆகிய இரண்டின் மேலாம்
அறிவான் அத்தோன்றல் தானும் அறிவினது ஒளியே ஆமால். 63

**பொழிப்புரை:** *நுட்பமாகப் பார்க்கும் காலத்தில் அறியாமை என்பது வேறாகப் பொருந்துகின்றதுவும் அறிவின் உண்மைக்கு வேறாக மாட்டாது சத்தே அழிவற்று இருக்கிறது. அறியாமையானது, சத்து, அசத்து ஆகிய இரண்டிற்கும் அப்புறப்பட்டது ஆகுமெனில் உணர்வினால் அந்த விளங்குதலும் பிரம்மத்தின் விளங்குதலே ஆகும்.*

தோன்று கூட்டரவினாலே தோற்றிடும் பொருள்கட்கு எல்லாம்
ஊன்றிடும் உண்மை உண்டேல் அது உள்ள பரமே ஆகும்
தோன்றுவது உளது பாராது ஒழியில் வேறு உண்மை என்னிற்
தோன்றிய உருவும் உண்டாய்த் தோன்றலால் பரமே அன்றோ 64

**பொழிப்புரை:** *விளங்குகின்ற கூடஸ்தனது சம்பந்தத்தினாலே தோன்றிடும் பொருள்களுக்கு எல்லாம் நிலைப்படுத்துகின்ற உண்மை உண்டானால், அந்த உண்மையும் சத்தாய் உள்ள பிரம்மமே ஆகும். விளங்குகின்றதே இருக்கின்றது ஆதலால், விசாரித்துப் பாராவிடில் வேறு உண்மையென்னில் அப்படித் தோன்றிய உருவும் உண்டாகி விளங்குவதால் பிரம்மமே.*

உருவமாய் ஒளிர்வது உள்ள பிரமமே வேறு ஒன்றில்லை
உருவமாய் உண்மை இன்மை ஆதலின் வேறினுக்கும்
உருவம் உண்டு என்று சொல்லப் பார்த்திடில் வேறு ஒன்றாய
உருவத்தாற் தோன்று ரூபம் உண்மையில் பரமே ஆகும் 65

**பொழிப்புரை:** *உருவமாகி ஒளிர்வது சத்தாய் உள்ள பிரம்ம சொருபமே ஆகும். மற்றொன்று இல்லை. உருவமாகும் தன்மை இல்லாமையால் இதரப் பொருள்களுக்கும் உருவம் உண்டு என்று சொல்ல ஆலோசித்தால் இதரமாகிய உருவத்தினால் தோன்றுகின்ற ரூபமானது உண்மையில் பிரம்மமே ஆகும்.*

அன்னியத்தினுக்குச் சொன்ன உருவு வேறு உருவினாலாம்
என்னில் அப் பரந்தான் அன்றாம் எனும் உருவம் தான் தானே
உன்னிய பரத்தினோடு பின்னமோ அபின்னமாயோ
சொன்ன இவ் விரண்டுங் கூடி உள்ளதோ சொல்லும் என்றான் 66

**பொழிப்புரை:** *இதரப் பொருளுக்குச் சொன்ன உருவமானது வேறு உருவத்தால் ஆகும் எனில் அந்தப் பிரம்மரூபம் அல்ல என்னும் உருவமானது, தான் மாத்திரமாய்க் கருதிய பிரம்மத்தின் வேறாகவோ ஒன்றாகவோ சொல்லிய இந்த இரண்டும் கூடியுள்ளதோ சொல்லுங்கள் என்றான்.*

பின்னம் என்று உரைக்கில் அந்த உருவின் வேறாகையாலே
சொன்னதும் அருவேயாகும் தற்பதம் சொல்லும் காலை
பின்னம் அன்று என்னில் தானே ஆயிடும் பின்னா அபின்னம்
என்னின் முன் சொன்ன குற்றம் இரண்டும் வந்து இசையும் என்க 67

**பொழிப்புரை:** *பின்னம் என்று உரைக்கில் அந்த உருவத்தைக் காட்டிலும் வேறாதலாலே இவ்வாறு சொல்லியதும் உருவமில்லாததாகும். சொல்லும் காலத்தில் அபின்னம் எனில் தற்பதமாகிய அந்த ரூபமாகவே ஆகிவிடும். பின்னமும் அபின்னமும் என்று சொல்லில் முன்கூறிய இரண்டு குற்றமும் வந்து பொருந்தும் என்று அறிக.*

பாராத படியினாலே பரத்தினில் வேறு அதாக
நேராய் ஒன்றாகித் தோன்று நெறி சொலில் வார்த்தையே ஆம்
ஏராய் ஓர் பயனும் இல் அஞ்ஞானமும் எக்காலத்தும்
பேராது விளங்குகின்ற பிரமமே பிறிது ஒன்றில்லை 68

**பொழிப்புரை:** *சிந்தித்துப் பாராத தன்மையாலே பிரமத்தினின்றும் வேற்றுமையாக நேர்மையான ஒரு பொருளாகி விளங்குகின்ற நெறியைச் சொல்லுங்கால், சொல்லளவே*

*ஆகும். அழகாக ஒரு பயனும் இல்லாத அறியாமையும் எப்பொழுதும் நீங்காமல் விளங்குகின்ற பிரம்மமே ஆகும். அதைத் தவிர அறியாமை என்ற ஒரு பொருள் இல்லை.*

எல்லாம் அஞ்ஞானத்தாலே தோன்றிடும் என்றல் தானும்
இல்லாதோ என்னில் வேறாய் அறிவின்மை இலாமையாலே
இல்லா அஞ்ஞானம் அத்தின் காரியம் இரண்டும் ஊனம்
இல்லாத பிரமம் தானே எனும் இது என் அறிவே என்றான். 69

**பொழிப்புரை:** *யாவும் அறியாமையால் தோன்றிடும் என்று சொல்லுதலும் இல்லையோ என்றால் வேறாக அஞ்ஞானமானது இல்லாததனால், இல்லாத அஞ்ஞானம் அந்த அஞ்ஞானத்தின் காரியமான உலகம் இவ்விரண்டும் அழிவில்லாத பிரம்மமே என்னும் இந்தத் தாற்பரியமே என் கருத்து என்றான்.*

இப்படி எல்லாம் ஆகி இருந்ததே பரமாம் என்ன
மெய்ப்படியே ஆய் உள்ள சுருதி தான் விளங்கச் சொன்ன
அப்பொருள் தற்பாவத்தால் ஆவதே என்று கொண்டு
செப்பிடும் சுரர்கட்கு எல்லாம் திகழ் ஒளி மலரின் மேலோன் 70

**பொழிப்புரை:** *இவ்வண்ணம் அனைத்துமாகி இருந்ததுவே பிரம்ம சொரூபம் என்று யாரும் சொல்ல, உண்மை நிலையாகவே இருக்கிற வேதங்களே தெளிய உரைத்த அந்தப் பொருள் தன் சுபாவத்தினால் ஆவதே என்று கொண்டு தேவர்கட் கெல்லாம் தாமரைப் பூவில் எழுந்தருளி இருக்கும் பிரம்ம தேவன் சொல்வான்.*

கேட்பவன் உடைய சித்தம் பரிபாகம் இலாதே கொண்டு
மீட்சியாய் வசம் அது இன்றி வேதம் ஓரிடத்தில் ஓர்கால்
காட்சியது உளது போலப் பரத்தினை ஒழிந்து வேறு
மாட்சியில் ஒன்று உண்டாக வகுத்து உரை செய்தது அன்றே 71

**பொழிப்புரை:** *கேட்பவனுடைய சித்தம் பரிபாகம் இல்லாதது கொண்டு வேதமானது தன்வசம் இல்லாமல் திரும்பி ஒரு இடத்தில் ஒரு காலத்தில் அந்தப் பிரம்மத்தைத் தவிர்த்து காட்சியான சகம் இருக்கின்றது போல வேறான பெருமையில்லாத ஒரெண்ணம் உண்டாக பகுத்துச் சொல்லியது.*

இத்தால் இத்தைச் சாதிப்பது என்றல் தீர்த்தம் ஆடல் என்ற
ஒத்து ஒவ்வாது வேறுபடத் தோன்றும் உலகம் என்று உரைத்தல்
வைத்தே பாவ புண்ணியமும் வன்னாச்சிரமங்களும் இவற்றோடு
ஒத்தே நின்றோர் சரிதைகளும் உரைக்கும் வேறும் உள்ளனவும் 72

**பொழிப்புரை:** *இந்தச் சாதனத்தினால் இதனைச் சாதிப்பது என்பதும் தீர்த்தங்களில் முழுகு என்பதும் ஒரு தன்மையாகப் பொருந்தாமல் உலகங்கள் பல விசித்திரங்களாகத் தோன்றும் என்று உரைப்பதும், நிலைபெறவைத்த பாவ புண்ணியங்களும் வருணாச்சிரமங்களும் இவைகளோடு பொருந்தி நின்றவர்களது வரலாறுகளும் கூறுகின்ற மற்றும் உள்ளவை அனைத்தும்.*

சுகமொடு துக்கம் பூதம் பௌதிகம் இதுவே என்றல்
சகம் உடைத்தாய சத்தை வேறென்ற தகைமை தானும்
அகம் அறிவு என்று நின்ற அறிவினில் வேறு யாவும்
தகவுள உண்மை என்றெ சாற்றிடும் தன்மை தானும் 73

**பொழிப்புரை:** *இன்பத்தோடு துன்பம் பூதங்கள் பௌதிகங்கள் இதுவே என்பதும் உலகத்தை உடையதாகிய சத்தையை வேறு எனக் கூறுகின்ற பண்பும், அகம் அறிவென்று நிற்கின்ற கூடஸ்தனிடத்தில் வேறாகத் தோன்றப்பட்ட அனைத்தும் பெருமையை உடைய உண்மைப் பொருள் என்று சொல்லுகின்ற தன்மையும்.*

எல்லாம் பொய்யே என்பதுவும் மாயைக்கு உண்மை இயம்புவதும்
இல்லா மாயை இதனாலே இயலும் பந்தம் வீடுகளும்
எல்லாம் ஆகும் குரு மதமும் இவனை அடைவோன் தன் மதமும்
சொல்லால் அளப்பிலா இச்சை இருக்கும்படி சொல்லுகை தானும். 74

**பொழிப்புரை:** *எல்லாம் பொய்யே என்பதுவும் மாயைக்கு உண்மைத்தன்மை கூறுவதும் சொரூபம் இல்லாத இந்த மாயையால் பொருந்துகின்ற பந்தமும் மோட்சங்களும் அனைத்துமாகிய குரு என்னும் அபிப்ராயமும் இவனை அடைவோன்தன் மதமும், சொல்லால் அளப்பிலா பிரம்ம வித்தையும் இருக்கும் படியாகச் சொல்கின்றதுவும்.*

ஓதுகின்ற நூல் பலவும் உரைக்கும் தர்க்கம் உள்ளனவும்
பேதித்து உளதாம் மிகவும் எனப் பேணிச் சுருங்கச் சொல்லுகையும்
பேதம் இன்றி இத்தனையும் பரத்தின் வேறு என்று இயம்புவதும்
நீதியாகவுள எவையும் நின்றே நிகழ்த்தும் மாமறை தான் 75

**பொழிப்புரை:** *ஓதுகின்ற நூல்கள் அனைத்தும் உரைக்கும் தர்க்கங்களாய் உள்ள நூல்கள் அனைத்தும் மிகவும் பேதித்திருக்கின்றன என்று கருதி, சுருங்க உரைக்கும் தன்மையுடன் குற்றமில்லாத இவ்வளவும் பிரம்மத்தின் இடத்தில் வேறென்று சொல்லுவதும், இந்த நீதியாக உள்ள அனைத்தையும் பெருமை பொருந்திய வேதமானது நின்று சொல்லுகின்றது.*

பரமாய் உள்ள மறைதானே பாகம் ஆனோர் அறிவுக்குத்
தரமாய் அடையும் பரிசாகச் சாற்றி அவர்கட்கு இதமாகத்
திரமாய் உள்ளம் அழுங்குறினும் சிறிதே எல்லா விரதம் போல்
உரமாய்த் தான் இப்படி என்றே உபதேசித்தது உண்மையினால் 76

**பொழிப்புரை:** *உயர்வாய் இருக்கின்ற வேதமே சித்த பரிபாகமான அதிகாரிகளுக்குத் தகுதியாக அடையும் தன்மையாக உபதேசித்து, அவர்களுக்கு இதமாகும்படி திரமாக உள்ளத்தின்கண் வருத்தம் உறினும், கொஞ்சம் கொஞ்சமாக சகல விரதங்களையும் திண்ணமாக இந்தப் பிரகாரம் என்றே உண்மையினால் உபதேசம் செய்தது.*

சாதனமாம் சதுட்டயங்கள் சமைந்த அந்தத் தன்மையர்க்கு
நீதியாக அருமறை தான் நின்றே இவர்கள் அறியும் வணம்
பூதமாயும் புவனங்கள் பிறவுமாகி இருந்ததுவும்
ஏதம் இல்லாது ஒன்றாய பரமே என்றே இயம்பினதால் 77

**பொழிப்புரை:** *நான்கு சாதனங்களும் அமைந்த அந்தத் தன்மையுடைய அதிகாரிகளுக்கு ஒழுங்காக அரிய வேதமானது நின்று இவர்கள் அறியும்படி பூதங்களாயும் புவனங்களாயும் பிறவாகவும் இருக்கின்ற அனைத்தையும் குற்றமில்லாமல் ஏகமாகிய பிரம்ம சொரூபம் என்றே சொல்லியது.*

சகமொடு சீவன் ஈசன் சார்ந்துள விகாரம் இன்றிச்
சுகமுடைச் சத்தாய்ச் சித்தாய்த் துகளின்றி நுண்ணிதாகி
அகமெனும் உரைகட்கு உள்ளாய் அறிவு அரிதாகி ஒன்றாம்
தகவுடைப் பிரமந் தன்னின் ஒருமையை மறைகள் சாற்றும். 78

**பொழிப்புரை:** *உலகத்தோடு சீவன் என்றும் ஈசன் என்றும் பொருந்தி இருக்கின்ற விகாரம் இன்றி சுகமுடைய சத்தாயும் சித்தாயும் குற்றமின்றி சூட்சுமம் ஆகியும் அகன் என்னும் வார்த்தைகளுக்கு ஆந்தரப் பொருள் ஆயும் அரிதற்கு அரிதாகியும் ஒரு பொருளாகும் தகுதி உடைய பிரமத்தினது ஒருமையை வேதங்கள் சொல்லும்.*

ஈசன் சகமோடு உள சீவனதாம் யாவும் பரரூபம் அது என்று கொடே
நேசம் அதனால் உளதாகிய தன் நிறையும் அறிவானது யாது அதுதான்
மாசு ஒன்றது இலாத பரம்பொருளும் மயல் ஒன்று அறியாத அபேதமதும்
ஏதம் ஒழி வேதனம் ஆவதுவும் என்று அம்மலரோனும் இயம்பினனால் 79

**பொழிப்புரை:** *ஈசன் உலகத்தோடு உள்ள சீவன் உடையதாய மாயை அறியாமை முதலிய யாவும் பிரம்ம சொரூபமே என்று கொண்டு அன்பினால் இருக்கின்றதாகிய தனது பூரணமான ஞானமானது எது அந்த ஞானமே ஒரு குற்றமில்லாத பிரமப் பொருளும் ஒரு மயக்கமும் அறியாத அபேதமும் குற்றம் நீங்கிய ஞானம் ஆவதும் என்று அந்தப் பிரம்மாவும் சொன்னான்.*

இத்தன்மை ஒழிந்து உளதாம் அறிவே யாது ஒன்று அறியாமையை எய்தியதே
மெய்த்தன்மை அதாய் அறிபோதினுமே வேறாய் அறிகின்ற இடந்தனிலும்
அத்தன்மையில் வேறுபடாது அதில் ஓர் ஐயம் இலை ஆசற நின்றதுதான்
சித்து ஒன்றி அறிந்திடும் அவ்வறிவே சேர்தற்கு அரிதாயிடும் எங்கணுமே 80

**பொழிப்புரை:** *இவ்விதமான ஞானத்தை நீங்கி இருக்கின்றதான ஞானம் யாதொன்று உண்டோ அது அஞ்ஞானத்தைப் பற்றியதே ஆகும். உண்மைத் தன்மையதாய் விசாரித்து அறியும் காலத்திலும் மாறுபாடாக உணர்கின்ற இடத்திலும் அத்தன்மையில் மாறுபடமாட்டாது அதிலொரு ஐயமும் இல்லை குற்றமற நிற்கின்றதாகும். சித்தைச் சார்ந்து அறியப்பட்ட அந்த ஞானமே எவ்விடத்தும் அடைவதற்கு அரியதாகும்.*

எப்படிப் பொருள்கள் எல்லாம் இது இது என்றே என்றும்
செப்பிட உண்மையாகத் திகழ்தரும் வேறுபாட்டால்
அப்படிச் சிவனே அந்தப் பொருள்களின் உண்மையாகி
மெய்ப்பட விளங்குகின்றான் வேறு ஒரு பொருள் அன்றாமால் 81

**பொழிப்புரை:** *எவ்வாறு பொருள்கள் அனைத்தும் எக்காலத்தும் இது இது என்று சொல்லும்படி வித்தியாசத்தால் சுபாவமாக விளங்கும். அவ்வாறு பரமசிவனே அந்தப் பொருள்களின் உண்மையாகி உண்மையாகப் பிரகாசிக்கின்றான். மற்றொரு பொருள் அன்றாகும்.*

யாதொருபடி இப்போதம் பொருள்தொறும் விளங்கும் அந்நேர்
தீதிலாச் சிவன் தன் சத்தியாயதே பிறிது ஒன்று அன்றால்
ஏதமில் சத்தி இன்னே இசைந்திட அறிதலேயாம்
போதமும் இறந்து தோன்றும் பொருள் ஒன்றாய் அறியும் வண்ணம் 82

**பொழிப்புரை:** *எந்த ஒரு தன்மையாக இந்த அறிவு பொருள்கள் தோறும் விளங்குகிறதோ அப்படியே தீங்கில்லாத சிவனுடைய சத்தை என்னும் சத்தியே ஆகியதுதான் வேறொன்றல்ல. குற்றமற்ற சத்தையை இத்தன்மையாக பொருந்த அறிவதே சீவபோதமும் நசித்து விளங்குகின்ற பொருளை ஒன்றாக உணரும் தன்மை ஆகும்.*

யாதொருபடியினாலே யாவையும் தோன்றும் அத்தை
ஓதிய பரமேயாக உண்மையா அறிந்தான் யாவன்
ஏதமில் ஈசன் தன்னை இயல்பினால் எளிதாம் வண்ணம்
பூதனாம் அவனே மிக்க பூசனை செய்யா நின்றான் 83

**பொழிப்புரை:** *எந்தத் தன்மையினாலே அனைத்தும் விளங்குகின்றதோ அதனைச் சொல்லிய பிரம்மமேயாக உண்மையாகவே அறிந்தவன் எவனோ, பரிசுத்தனாகிய அவனே குற்றம் இல்லாத மகாதேவனை சுபாவத்தினால் சுலபம் ஆகும்படி மிகுந்த பூசனை செய்கின்றவன்.*

எப்படிப் புத்தி நானா உருவமாய் இலங்கும் தன்னுள்
அப்படி அறிவேயாக அனுபவத்திடுதலேயாம்
செப்பிட அரிதாயுள்ள திகழொளி ஆகும் தன்னை
மெய்ப்பட வேறு ஒன்று இன்றி விளைத்திடும் பூசை தானே 84

**பொழிப்புரை:** *எவ்வண்ணம் மதி பலவடிவமாக விளங்குகின்றதோ தன்னுள் அவ்வண்ணம் அறிவேயாக அனுபவித்திடுதலே சொல்ல அரியதாய் இருக்கின்ற தானாய் இருக்கின்ற சிவ சொரூபத்தை உண்மையாக வேறொன்று இன்றி செய்யும் பூசனையே ஆகும்.*

போதமதாகித் தோன்றும் பொருள் எலாம் சிவனேயாக
ஏதமில் அறிவால் காண்பான் எவன் அவன் உண்மை கண்டான்
தீதிலாச் சிவன் அன்று என்று சிறிது ஒன்றைச் சிந்தை செய்வோன்
பேதமாம் மருளின் மேய பித்தன் என்று அறியல் ஆவான் 85

**பொழிப்புரை:** *அறிவுருவமாய் விளங்கும் பொருள்கள் அனைத்தையும் சிவசொரூபமேயாக குற்றமற்ற அறிவினால் காண்பவன் எவனோ, அவனே எதார்த்த சொரூபத்தைக் கண்டவன் ஆவான். தீங்கு இல்லாத சிவசொரூபம் அல்ல என்று கிஞ் சித்தாயினும் ஒரு பொருளைக் கருதுகின்றவன் பேதமாகிய மயக்கத்தில் பொருந்திய பித்தன் என்று எல்லாராலும் அறியப்படுவான்.*

சிவன் இது அன்றே என்று சிறிது ஒன்றைச் சிந்தை செய்யும்
அவன் அறிவுடையோர் தம்பால் அதமன் என்று அறியப்பட்டான்
உவமை ஒன்று இல்லா ஈசன் தனைஇகழ்ந்து ஒழுகுவானும்
பவமதில் என்றும் மேவும் பசு எனப்படுகின்றானும் 86

**பொழிப்புரை:** *இந்தப்பொருள் பரமசிவன் அல்ல என்று சிறிதாயினும் ஒருபொருளைக் குறிக்கின்றவன் ஞானவான்களிடத்தில், இழிந்தவன் என்று அறியப்பட்டவன் தனக்கு உவமை இல்லாத ஈசனை நிந்தித்து நடப்பவனும் ஜனனத்தில் எக்காலத்தும் பொருந்தும் சீவன் எனப்படுகின்றவனும் அவனே.*

எல்லாமும் சிவரூபமாகித் தோன்றும் யாவனுக்குத்
தன்னியல்பால் அவனே மிக்க
சொல்லாலும் அளப்பரியான் அவன்தன் இச்சை சுருதியினால்
துணிந்து உரைத்த சரிதை தானும்
பல்லோரும் அவனை அருச்சனை செய்து ஏத்தப் பரரூபம்
தனக்கே நற் பூசையாகும்.
நில்லாத அவிச்சையினை நீங்கியுள்ள நிர்க்குணனும்
இவனாகும் நினையுங்காலே 87

**பொழிப்புரை:** *எவனுக்குத் தனது இயல்பால் சகலமும் சிவசொரூபமாகி விளங்குகின்றதோ, அவனே மிகுந்த வசனத்தினாலும் அளத்தற்கரியவன் அவனுடைய விச்சையே வேதத்தால் நிச்சயமாய்ச் சொன்ன நடத்தையும் பலரும் அவனை பூசித்துத் துதிக்க அப்பூசை பிரம்ம சொரூபத்திற்கே நல்ல பூசனை செய்ததாகும். நிலையில்லாத அவித்தையை நீங்கி இருக்கின்ற நிர்க்குணனும் கருதுங்கால் இவனே ஆகும்.*

எப்பொருள்களும் தானாகி இலங்கிடும் அறிவாம் ஈசன்
அப்படி விளங்குகின்றது அறிதலே அவன் தனக்கு
மெய்ப்படு பூசை வேறோர் செயலினால் அன்று மெய்யே
இப்படி ஞானம் தன்னால் இறைஞ்சிடப் படுவான் ஈசன். 88

**பொழிப்புரை:** *எப்பொருள்களும் தானாகவே விளங்குகின்ற அறிவாகிய ஈசன் அவ்வண்ணம் விளங்குகின்ற தன்மையை அறிவதுவே அவ்வீசனுக்கு உண்மையான பூசனையாம் மெய்யாகவே மற்றொரு செயலினால் அல்ல. இவ்விதம் ஞானத்தினால் பரமசிவன் பூசிக்கப்படுவான்.*

சகரூபமாய அதில் வேறிலாது விளையாடு தெய்வம் அதுதான்
சுகருபமாய தனையே பகுத்து விளையாடி உண்டல் அதனை
அகமாயை இன்றி அறிகின்ற போதம் உளதாகி நிற்கும் அதுவே
தகநாளும் ஓதும் அறிவாவது என்று சதுரானன் சொல் தருமால். 89

**பொழிப்புரை:** *செகரூபமாய் அதில் நின்றும் வேறில்லாமல் விளையாடுகின்ற ஆன்ம தேவதையானது அந்தப் பிரமந்தான். ஆனந்த ரூபமாகிய தன்னைத்தானே பிரித்து விளையாடி புசித்தலும் சகதாகாரமான அதனையே ஆகும். மனத்தின்கண் மாயை இல்லாமல் உணருகின்ற ஞானம் இருக்கின்றதாகி நிற்கின்ற அதுவே பொருந்தும்படி எக்காலத்தும் கூறப்பட்ட ஞானமே ஆகின்றதென்று நான்முகன் சொல்கிறான்.*

ஆனதாகாத் தெய்வமதே அடையும் விடையம் இந்தியமாய்த்
தானுமாகித் தனைத் தன்னால் தானே நுகரும் தன்மையது
ஊனமாகும் ஞாதாதி ஒழிந்தே உள்ள அறிவதனால்
தானேயாகக் கண்டிடுதல் சத்தாய் உள்ள பூசையதே 90

**பொழிப்புரை:** *உற்பத்தி ஆகாத ஆன்ம தேவதையே அடையப்பட்ட விடயமாகவும் இந்திரியமாயும் தானே ஆகி, விஷயமாகிய தன்னை பொறிவடிவாகிய தன்னால் பூசிக்கின்ற தன்மை உடையதாகும். ஈனமாகும் ஞாதுரு, ஞேயம் ஞானம் இல்லாததாய் உள்ள சுய உணர்வினால் தன் சொரூபமாய்ப் பார்த்தால் உண்மையான பூசை ஆகும்*

பிறப்பு இறப்பாய துக்கம் பிறித்திடல் உளதாய் என்றும்
இறப்பிலா ஈசன் செய்யும் அருளினால் இசைவதாகி
மறப்புடைப் பாவகத்தின் வரும் பொருள் அன்றாய் மேலாய்
இறப்பதாம் பேதம் ஓர்கால் இயைந்திடாப் பொருள் இதன்றே 91

**பொழிப்புரை:** *பிறப்பு இறப்பாகிய துக்கத்தை நீக்கும் தன்மை உள்ளதாய் எக்காலத்தும் ஈசன் செய்யும் அருளினால் பொருந்துவது ஆகி மறதியையுடைய பாவனையில் எய்தும் பொருளன்றாகி, உயர்வாகி அழிவதாகிய பேதம் ஒருகாலத்தும் பொருந்தாத பொருளாய் உள்ளது இதுவாகும்.*

ஆதித்தன் ஒளியைக் கூகை அறிந்து கண்டிடாமை போலும்
நீதிக்கண் அறியும் நாட்டம் அவிச்சையான் மறைந்துளோர்க்கும்
ஏதக்கட்கு இசையாது எங்கும் யாவையுமாகி நின்ற
சோதிக்கண் ஒளியும் ஆங்கே தோன்றிடாதாகும் அன்றே. 92

**பொழிப்புரை:** *சூரியனது ஒளியைக் கோட்டான் அறிந்து கண்டிடாமை போலவும், நீதியின் இடத்தில் உணரும் கண் அறியாமையால் மறைந்தவர்களுக்கும் அவர்களது குற்றம் உடைய கண்ணுக்குப் பிரகாசிக்காமல் எவ்விடத்திலும் எல்லாம் ஆகிநின்ற சோதியாகிய திருக் ஆகிய பிரமத்தினுடைய பிரகாசமும் அவ்வாறே தோன்றிடாதாகும்.*

ஈசன் தன் அருளினாலும் இசைந்த ஆதரத்தினாலும்
ஆசது தீர்தலாலும் அருள்பவன் பார்வையாலும்
பேசிடும் பாவ கன்ம புண்ணியம் இரண்டும் ஒத்தால்
பாசமாம் படலம் போக்கும் பரம்பொருள் திகழும் அன்றே. 93

**பொழிப்புரை:** *ஈசனின் அருளினாலும், பொருந்திய பக்தியினாலும், குற்றமானது நீங்குதலாலும், அருள்பவன் பார்வையாலும், சொல்லுகின்ற பாவ புண்ணியங்கள் என்னும் கன்மங்கள் இரண்டும் சமமாயின், பாசமாகிய கூட்டங்களை நீக்குகின்ற பிரம ஞானமானது பிராகசிக்கும்.*

சுத்தமாய் என்றும் உள்ள சுருதிதான் அருளினாலே
இத்தன்மைத்து ஆகும் ஞானம் என்று கொண்டு இசையும் வண்ணம்
பத்தராய் உள்ளார்க்கு ஏயப் பலபடியாகப் பல்கால்
உய்த்து நோய் கழியும் வண்ணம் உள்ளவாறு உரைத்தது அன்றே 94

**பொழிப்புரை:** *பரிசுத்தமாய் எக்காலத்திலும் உள்ள வேதமானது கருணையினால், ஞானமானது இத்தன்மையானது என்று கொண்டு பொருந்தும் தன்மை பக்தி மான்களாய் உள்ளவர்களுக்கு இயைந்திட பலவிதமாக பல்காலும் உணரும்படி செலுத்தி, பிறப்பாகிய நோய் நீங்கும்படி உள்ளபடி சொல்லியது.*

சிவனே உள்ளான் பிறிதில்லை என்று திரமாய் அறிவதுவே
பவமே ஒழிக்கும் பரமார்த்தம் பகரும் நெறிதான் அதுவாகும்
அவமே இதனை ஒழிந்துளதாம் அவைதான் இதனை அடைதற்குத்
தவமே முதலாம் சரிதைகளைச் சாற்றுகின்ற தன்மையவே 95

**பொழிப்புரை:** *எப்போதும் சிவன் ஒருவனே உள்ளவன் வேறு இல்லை என்று உறுதியாய் அறிவதே பிறப்பு இறப்பைக் கெடுக்கின்ற பாரமார்த்திக மாகிய சித்தாந்தம் ஆகும். சொல்லும் மார்க்கமும் அதுவே ஆகும். இதனை ஒழிந்துள்ள மற்ற நூல்கள் ஆனவைகள் வீணே ஆகும். ஆனால் இவை இப்பரம் பொருளை அடைவதற்குத் தவம் முதலான சரிதைகளைச் சொல்லுகின்ற தன்மை உடையனவாம்.*

ஆதரவு உடையீர் கேண்மின் அருமறைப் பொருள் ஈதென்றே
ஓதலால் உவமை இல்லாப் பொருள் இதில் ஐயம் உண்டேல்
தீதற மழுவைக் காய்ச்சிச் செங்கையில் இடுவேன் என்றான்
நாதனாய் உலகம் எல்லாம் படைக்கும் நான்முகனாய் உள்ளோன் 96

**பொழிப்புரை:** *நாயகனாகி உலகம் அனைத்தையும் படைக்கும் நான்முகனாய் உள்ளோன், அன்புடைய தேவர்களே கேளுங்கள். அரிய வேதாந்தம் இந்தப் பொருளென்றே நான் இப்பொழுது கூறுதலினாலே, உவமையற்ற பொருளாகிய இதில் இன்னும் உங்களுக்குச் சந்தேகம் இருக்குமாகில் குற்றமற்ற மழுவை அக்கினியில் காயச் செய்து எனது செவ்விய கையில் தாங்குவேன் என்று சொன்னான்.*

பத்தராயுள்ளீர் கேண்மின் பகர்ந்த வேதத்ததின் அர்த்தம்
இத்தகைத்து ஆகும் வேறு ஒன்று இல்லையாம் இதனில் உங்கள்
சித்தம் நம்புதல் உண்டாகச் செப்பினோம் ஆணை மூன்றோடு
அத்தனார் பாதந் தொட்டே என்றனன் அலரின் மேலோன். 97

**பொழிப்புரை:** *சிவபெருமானுக்கு அன்புடையவராய் இருக்கின்ற தேவர்களே கேளுங்கள் இப்போது கூறிய வேதத்தின் அர்த்தம் இத்தகுதியை உடையதே ஆகும். வேறு ஒருபொருள் இன்றாம். இந்த அர்த்தத்தில் உங்களுடைய சித்தத்திற்கு நம்பிக்கை உண்டாகும் படி சிவபெருமானது திருவடிகளைப் பற்றிக் கொண்டே மூன்றுதரம் சத்தியத்தோடு சொன்னோம் என்று கூறினான் மலரின்மேல் வீற்றிருக்கின்ற பிரம்மதேவன்.*

அன்பராயுள்ளீர் கேண்மின் அறிவித்த பொருள் மெய் அன்றேல்
என் சிரம் இற்று வீழ்வது என்றனன் இதுவும் அன்றி
இன்பமே அளிக்கும் ஈசன் இவ்விடம் தன்னில் வந்து
தன் பெருங் கருணையாலும் தளர்வறப் பண்ணுகின்றான் 98

**பொழிப்புரை:** *அன்பராய் உள்ள தேவர்களே கேளுங்கள், நான் இப்போது உங்களுக்கு அறிவித்த உண்மைப் பொருளானது உண்மை இல்லாவிடில் எனது தலை அற்று வீழக்கடவது என்று சொன்னான். இதுவும் அல்லாமல், சகல உயிர்களுக்கும் சிவபெருமான் இந்த இடத்தில் எழுந்தருளி தனது அளவற்ற திருவருளினாலும் சந்தேகமாகிய தளர்ச்சி நீங்கும்படி செய்து அருள்கின்றார்.*

இவ்வணம் உரைத்துப் பின்னை யாவர்க்கும் அன்பாயுள்ளோன்
செய்வணம் ஒழிந்து ஈசன் திருவடி சிந்தை செய்து
மெய்வணம் இழந்து தாழ்ந்து பணிந்து மெய்ப் பத்தியாலே
அவ்வணம் ஆகித் தன்னை அழிந்தனன் அயனாம் ஐயன் 99

**பொழிப்புரை:** *இந்த விதமாகச் சொல்லி பின்பு சகலருக்கும் பிரியமாய் இருக்கின்றவன் செய்யும் வண்ணம் நீங்கி, சிவபெருமான் திருவடிகளைச் சிந்தித்து, உடலின் தன்மை மறந்து தாழ்ந்து வணங்கி உண்மையான பக்தியினால் அவ்வாறே ஆகிபிரம்ம தேவனாகிய தேசிகன் தன்னை மறந்தவன் ஆயினான்.*

அப்பொழுது அளவிலாத அருள் உருவாய ஈசன்
செப்பிடும் மூவர் ஏத்தும் திருவுடைய சோதி
ஒப்பிலா மதியம் சூடி உமை ஒரு கூறனாகி
இப்படி வானோர் காணும்படி உள இயல்பின் வந்தான் 100

**பொழிப்புரை:** *அந்தச் சமயத்தில் அளப்பதற்கு அரிதாகிய கருணை வடிவாகிய மகாதேவரும், கூறப்பட்ட திரிமூர்த்திகளாலே வணங்கப்படத்தக்க திருவுடைய சோதியானவரும், நிகரற்ற சந்திரனைத் தரித்தவருமாகிய சிவபெருமான். ஒருபாகத்தில் பார்வதியை உடையவராகி இவ்வாறு தேவர்கள் தரிசிக்கும்படி உள்ள சுபாவமாக வந்தார்.*

நீடுஒளி மணிகள் சேர்த்தி நிமலமாய் ஓங்கி எங்கும்
பீடுடைத் தாமநாற்றிப் பிறங்கு அரி மிசையதாக
ஆடகம் அதனினாலே அமரரால் அமைக்கப்பட்ட
பீடம் வந்திட்டது ஆங்கே இருந்தனன் பெயராது ஈசன். 101

**பொழிப்புரை:** *நீண்ட ஒளியை உடைய மணிகளைப்பதித்து எவ்விடத்தும் களங்கமின்றி ஒளிர்கின்ற பெருமை பொருந்திய, மாலைகள் தூக்கி உயர்ந்த சிங்கத்தின் மேலாக பொன்னாலே தேவர்களால் அமைக்கப்பட்ட அவ்விடத்தில் ஆசனமானது வந்து சேர்ந்தது பரசிவ மூர்த்தியானவர் அகலாமல் எழுந்து அருளினார்.*

அளவிலா ஒளியதாய அரன் எழுந்து அருளல் உன்னித்
துளபமால் உலகம் யாவும் அளிப்பவன் உவகையோடுங்
களமதார் கறைசேர் நாதன் கழலடி நினைந்தப் போதே
உளநெகிழ்ந்து உருகி ஒல்லை வந்தனன் உணர்வின் மிக்கோன். 102

**பொழிப்புரை:** *எல்லை இல்லாத பிரகாசமாகிய சிவபெருமான் எழுந்தருளுதலைக் கருதி சகல உலகங்களையும் காப்பவனும் அறிவின் மேம்பட்டவனுமாகிய துளசி மாலையை உடைய மாயவன் மகிழ்ச்சியோடும், விடம் பொருந்திய கறுத்த கழுத்தை உடைய நாயகனது திருவடியை நினைத்த அக்கலத்தே உள்ளம் நெகிழ்ந்து உருகி விரைவில் வந்தான்.*

நித்தராயுள்ள வானோர் நிறைமலர் மாரி மேன்மேல்
உய்த்தனர் மிக்க அன்பால் உரைத்தனர் துதிகள் எல்லாம்
பத்தர் வேதங்கள் சொன்னபடியிலே பணிந்து வாழ்த்தி
இத்தன்மைத்தாய வேறும் செய்தனர் இறைவன் காண 103

**பொழிப்புரை:** *அழிவற்றவர்களாய் இருக்கின்ற தேவர்கள் நிறைந்த பூக்களை மழையெனப் பொழிந்தார்கள். மிகுந்த அன்பினால் துதிகளை எல்லாம் சொன்னார்கள். அடியவர்களாகிய இவர்கள் சுருதிகள் கூறியபடியே வணங்கித் துதித்து இதைப் போன்ற பிறவும் அதிபராகிய சிவபெருமான் காணும்படி செய்தார்கள்.*

கடுகியும் உயர்ந்தும் தாழ்ந்தும் காளங்கள் பல முன் ஊதப்
படகமோடு இடக்கை சல்லி மத்தளம் பலவாசிப்பத்
துடிகுழல் வீணை தாளம் வலம்புரி தொடர்ந்தே ஆர்ப்பக்
குடமுழா முரசு பேரி குசலராயினர் கொண்டு ஆர்த்தார் 104

**பொழிப்புரை:** *விரைவாகவும் உயர்ந்தும் தாழ்ந்தும் திருச்சின்னங்கள் அனேகம் தருமுன்பு ஊத, மேளத்தோடு தம்பட்டம் சல்லரி மத்தளம் பல வாசிக்க உடுக்கையும் புல்லங்குழலும் வீணையும், கைத்தாளங்களும் வலம்புரிச் சங்கமும் ஒன்றோடொன்று கலந்து முழங்க, குடமுழாவும் முரசும் பேரிகையும் அததில் மிகுந்த வல்லமை உடையவர்கள் கொண்டு முழக்கினார்கள்.*

வானவர் பாட ஆட மங்கையர் மரைகள் வீச
ஆனவா கவிகளானார் ஆசி தோத்திரங்கள் சொல்ல
ஈனமில் ஈசன் பாத பங்கய நினைந்து நோக்கும்
மோனமாய் இருந்தார் வேறு முனிகள் ஓர் செயலது இன்றி. 105

**பொழிப்புரை:** *தேவர்கள் பாடவும் மங்கையர் நடனம் செய்யவும், கவரிகள் வீசவும் தங்களால் ஆனவாறு கவிகள் ஆனவர்கள் ஆசிர்வாதங்களும் துதிகளும் சொல்லவும் அழிவில்லாத உமைபாகரது திருவடித் தாமரையை நினைந்து பார்க்கின்ற முனிவர்கள் யாதொரு செயலும் இன்றி தனிமையாக மௌனமாய் இருந்தார்கள்.*

அன்பில் அம்முனிகள் எல்லாம் அதிசயமாகி நின்றார்
பின்புளோர் தலையாலாடும் பெருமையை உடையரானார்
என்பு நைந்து உருகி நெக்கு அங்கு யாவரும் தாமே தம்மில்
வன் பெருங்கைகளாலுங் குத்தினர் வானோர் எல்லாம் 106

**பொழிப்புரை:** *அன்பினால் அந்த முனிவர்கள் எல்லாரும் அதிசயமடைந்து நின்றார்கள் பின்பு நிற்கின்றவர்கள் தலையால் ஆடும் பெருமையை உடையவரானார்கள். எலும்பு நைந்து உருகிக் குழைந்து அவ்விடத்தில் முனிவர்கள் எல்லாரும் சகல தேவர்களும் தாங்களே தங்களுக்காக வலிமையுடைய பெரிய கைகளாலும் குத்திக் கொண்டார்கள்.*

தலையினால் முட்டி மேலும் தாள்களால் உதைத்துக் கைகள்
பலவினால் அடித்துத் தண்டில் கயிறது பூட்டி வானோர்
சிலவர்தாம் சிலவர் தம்மைச் சிவிகையில் பொறுத்தார் வேறு
குலவியோர் குதிரை தன்னில் கொடுசென்று சிலர்மேல் வைத்தார். 107

**பொழிப்புரை:** *தலையினாலே ஒருவருக்கொருவர் முட்டியும் பின்னும் கால்களினாலே உதைத்தும் பல கைகளால் அடித்தும் தடிகளில் கயிறுகளைப் பூட்டி சில தேவர்கள் சிலர்களை பல்லக்குகளைப் போல் தாங்கினார்கள். வேறாகச் சிலர்களைக் கொண்டாடி ஓர் குதிரையைப் போலத் தங்கள் மேல்வைத்துக் கொண்டு சென்று சிலதேவர்கள் மேல் வைத்தார்கள்.*

ஓடினார் சிலவர் ஒக்க நின்றவர்கள் ஒருவரோடு ஒருவர் தழுவினார்
கூடி ஒண்புடவை மேலெறிந்து சிலர் கொண்டு கொண்டு விளையாடினார்
ஓடி வந்து பிரியத்தினோடு ஒருவ்ர் ஒருவர் உச்சியை முகந்தனர்
ஆடினார்கள் சிலர் அன்பினால் அறிவது ஒன்று இலாதபடியாகவே 108

**பொழிப்புரை:** *சிலர்கள் ஓடினார்கள், கூட நின்றவர்கள் ஒருவர்களோடு ஒருவர்கள் தழுவிக் கொண்டார்கள். ஒன்றுகூடி அழகாகிய வஸ்திரங்களை சிலர்கள் பலதரம் உயர எறிந்து கொண்டு விளையாடினார்கள். ஓடிவந்து அன்பினோடு ஒருவருக்கொருவர் சிரசை முகந்து கொண்டார்கள். சிலர்கள் பத்தியினாலே அறியத்தக்கது ஒன்றும் இல்லாதபடியாகவே கூத்தாடினார்கள்.*

**உமையோடு கூடி உளனாய ஈசன் ஒழியாத தேவர் செயல்கண்டு**
**அமையாத அன்பு மிகவாகி அங்கை அருளோடு அமைக்க அயன் மால்**
**இமையோர்களோடு முனியாயினோர்கள் இடர் தீரும் வண்ணம் அருளால்**
**அமையாத அங்கணது வைத்தல் கண்டனர்கள் பெற்று நின்ற அனைவோர்**
**109**

**பொழிப்புரை:** *உமையம்மையோடு கூடி இருக்கின்ற சிவபெருமான் நீங்காத தேவர்களது செயலைக் கண்டு, ஒருநாளும் அமையாத அன்பு மிகுந்து கருணையினால் அழகிய திருக்கை அமைத்து அருளலும், பிரம்ம தேவனும் திருமாலும் தேவர்களோடு முனிவரானவர்களும் துன்பம் நீங்கும்படி திருவருளால் அடங்காத அழகிய திருநோக்கம் வைத்தலை பெற்றுநின்ற அனைவரும் கண்டனர்.*

**சத்தியமாகி வேதம் ஒன்றுமே அளவையாகும்**
**இத்தன்மைப் பொருளை எல்லா உலகரும் அறியும் வண்ணம்**
**நித்தராம் அன்பர் ஏத்தும் நிறைந்த மெய்க் கருணை ஈசன்**
**மெய்த்தகு பொருள் ஈதென்றே விளம்பிடல் செய்யல் உற்றான். 110**

**பொழிப்புரை:** *உண்மையாகி வேதம் ஒன்று மாத்திரமே அளவையாகும். இத்தன்மையுடைய பொருளை சகல உலகத்தவர்களும் அறியும்படி அழிவில்லாத பக்திமான்கள் துதிக்கும் நிறைவுற்ற உண்மையாகிய கருணையுடைய சிவபெருமான், உண்மையுடைய வேத அர்த்தமானது இதுதான் என்றே உரைசெய்யத் திருவாய மலர்ந்து அருளினார்.*

**உலகம் யாவும் உயிர் பலவும் நானே சிறிதும் வேறில்லை**
**அலகில் அறிவால் ஆய்ந்திடினும் ஆயாவிடத்தும் அருத்தம் இதே**
**திலகமாய மறை துணிந்து திகழ்த்தும் பொருளும் இது என்றன்**
**இலகுந் தன்மை அனுபவமும் இதில் ஓர் ஐயம் உளதன்று ஆல். 111**

**பொழிப்புரை:** *எல்லா உலகங்களும் எல்லா உயிர்களும் நானே என்னைத்தவிர சிறிதும் வேறில்லை. அளவில்லாத மகிமையுடைய அறிவினால் ஆராய்ந்திடினும் ஆராய்ச்சி செய்யா இடத்தும் இதுவே அருத்தமாகும். மேன்மையான வேதம் நிச்சயித்து விளக்கும் அருத்தமும் இதுவே. என்னுடைய விளங்கும் தன்மையுடைய அனுபவமும் இதுவே. இதில் ஒரு சந்தேகம் உளதன்றாம்.*

**அப்பாலாகி எவர்கட்கும் அதுவே என நிற்கின்றேன் நான்**
**இப்பாலாகிக் காண்பொருள்கள் எல்லாமாகி உள்ளேன் நான்**
**மெய்ப்பால் உயிர்கள் யாவையுமாய் விளங்கி மிகவும் நின்றேன் நான்**
**ஒப்பே இலையாம் உபாதி பலவாகி எங்கும் உள்ளோன் நான். 112**

**பொழிப்புரை:** *அப்பாலாகி எத்தன்மையானவர்களுக்கும் அதுவே என்னும்படி நிற்கின்றவனும் நானே, இப்பாலாகிக் காண்பொருள்கள் அனைத்துமாகி இருக்கின்றவனும் நானே. உடலினிடத்துள்ள உயிர்கள் சகலமும் ஆகி மிகவும் விளக்கமுற்று நின்றவனும் நானே. ஒப்பே இல்லாததாகிய பலவித உபாதிகளாகி எவ்விடத்தும் உள்ளவனும் நானே.*

பூதமாகிப் பொருள் பலவாய்ப் புணர்ந்து நின்றும் காப்பவன் நான்
பேதமாகிப் பேதித்தும் பேதமில்லாப் பெற்றியன் நான்
சோதியாகும் இரவி மதி ஆகித் தோன்றுகின்றேன் நான்
வேதமாகி உள்ளேன் நான் விளங்கும் புராணமாவேன் நான். 113

**பொழிப்புரை:** *பூதங்கள் ஆகிப் பலவகைப் பொருள்கள் ஆகிக் கலந்து நின்றும் காப்பவன் நான். பற்பல பேதங்களாகிப் பேதித்தும் பேதம் இல்லாத தகுதி உடையவனும் நானே ஒளிமிகுந்த சூரிய சந்திரராகித் தோன்றுகின்றவனும் நானே. வேதங்களாய் உள்ளவனும் நானே. விளங்குகின்ற புராணங்களாக ஆனவனும் நானே ஆவேன்.*

கூறும் ஓசை பலவகை நான் அவற்றில் குலவும் பொருளவை நான்
ஆறு சமயமாய் அவற்றின் அருத்தமாகி நிற்பேன் நான்
வேறு என்று அறியும் பொருள்களுமாய் வேறாய் விளங்குகின்றேன் நான்
ஆறும் சிந்தை அழிந்து ஒன்றாம் அறிவால் அறியும் அறிவு நான் 114

**பொழிப்புரை:** *கூறும் ஓசைகள் பலவகைகளாகும். அவையனைத்தும் நானே அந்த ஓசைகளில் விளங்கும் பொருள்களும் நானே. அறுவகைச் சமயமுமாகி அவற்றின் பொருள்களுமாகி நிற்பவனும் நானே. தனிந்த சிந்தை நசித்து ஏகமாகிய ஞானத்தினால் அறியும் ஞானமும் நானே.*

தோன்றுகின்ற ஒளியவை நான் தொடர்ந்தே செறியும் இருளது நான்
ஆன்றங்கு அமைந்தோர் உளமேவி அறிவாய் நின்றே அறிபவன் நான்
ஊன்றும் பொருள்கள் மேலோடும் உணர்வாவதும் நான் உணர்பவன் நான்
சான்று அங்காகி எப்பொருட்கும் சலியாது என்றும் நிற்பவன் நான் 115

**பொழிப்புரை:** *தோற்றுகின்ற பிரகாசங்களும் நானே. தொடர்ந்து நெருங்குகின்ற இருளும் நானே. உணர்வு பொருந்தியவர்கள் மனத்தை அடைந்து அவ்விடத்தில் ஞானமாக நின்றே அறிபவனும் நானே. நிலை பெற்ற பொருள்கள் மேல் செல்கின்ற அறிவாவதும் நானே. சகல பொருள்களுக்கும் அவ்விடத்தில் சாட்சியாக அசையாமல் எக்காலத்தும் நிற்கின்றவனும் நானே.*

பாடும் இசையாய் அவ் இசையின் பயனாய் அறிந்து நிற்பவன் நான்
கூடும் கந்தம் பலவாயுங் கொள்வானாயும் உள்ளேன் நான்
காடும் கல்லும் மலை பலவும் கடமும் படமும் ஆவேன் நான்
நீடும் பொருளாம் எவ்விடத்தும் நிறைந்த ஒளியாய் நிகழ்பவன் நான் 116

**பொழிப்புரை:** *பாடுகின்ற இசையாகவும், அந்த இசையின் பயனாகவும் அறிந்து நிற்கின்றவனும் நானே. கூடும் பல ரசனைகளாயும் கொள்வானாயும் இருக்கின்றவனும் நானே. வனம், மலை, கற்கள்,குடம்,படம் ஆகிய அனைத்தும் ஆகின்றவனும் நானே. பல பொருட்களாய் எல்லா இடங்களிலும் நிறைந்த ஒளியாய் விளங்குகின்றவனும் நானே.*

அளவையோடு அங்கு அறிவானும் அறியும் பொருளும் ஆவேன் நான்
உள அஞ்ஞான ஞானம் என உரைக்கும் உண்மைப் பொருளவை நான்
விளையுங் கன்ம சுகதுக்கம் மேவுங் காலம் ஆவேன் நான்
உளமதார உணர்கின்ற சுவை ஆறாகி உள்ளேன் நான் 117

**பொழிப்புரை:** *அவைகளோடு அவ்விடத்தில் அறிவானும், அறியும் பொருளும் நானே ஆவேன். பொருந்திய அறியாமையும் அறிவும் என்று சொல்லப்படும் உண்மையாகிய பொருள்களும் நானே. உண்டாகும் சுகதுக்கக் கருமங்கள் அனுபவிக்கப் பொருந்தும் காலமும் ஆகின்றவனும் நானே. உள்ளத்தில் பொருந்த அறிகின்ற அறுசுவைகளாகி இருக்கின்றவனும் நானே.*

தேவர் எல்லாம் ஆவேன் நான் திகழும் நரராயுள்ளேன் நான்
யாவரேனுங் கருவாகியிடுதற்கு இசைந்தே இருப்பவன் நான்
பாவ பேத புண்ணியங்கள் பலன்கள் சுவர்க்கம் ஆவேன் நான்
மேவி அடையும் புத்தியும் நான் வீழும் நிரயம் ஆவேன் நான். 118

**பொழிப்புரை:** *சகல தேவர்களாய் ஆகின்றவனும் நானே. விளங்குகின்ற மனிதராக வருபவனும் நானே. யாவர் ஆனாலும் கரு உருவாவதற்கு அவர்களின் மன எண்ணத்தின்படி இயைவுற்று இருப்பவனும் நானே. பாவ, புண்ணிய பேதங்களும் அவற்றின் பலன்களும், சுவர்க்கமும் நானே ஆவேன். விரும்பி அடையும் புத்தியும் வீழ்கின்ற நரகமும் நானே ஆவேன்.*

கரணம் பன்னான்கு ஆவேன் நான் கரணியாய காரணன் நான்
சரணந்தரும் தேசிகனாகித் தன்னுள் அடங்கும் தன்மையன் நான்
புரணந்திகழ் பேரொளி ஓவாப் போதமாய பூரணன் நான்
கரணங் கடந்த எனை என்றுங் காண்பார் காணப்படுவேன் நான். 119

**பொழிப்புரை:** *பதினான்கு கரணங்களும் நானே. அக்கரணங்களின் காரணனான சீவனும் நானே. திருவடி சூட்டும் குருவாயும், தன்னிடத்து அடங்குகின்ற இயல்பையுடைய சீடனாய் இருப்பவனும் நானே. பூரணமாய் விளங்கும் உயர்ந்த பிரகாசம் மாறுபடாத ஞானமாகிய பரிபூரணனும் நானே. அந்தக் கரண பாவனையைக் கடந்து நின்ற என்னை எக்காலத்தும் காண்பவர்களுக்குக் காணப்படுகின்றவனும் நானே.*

நாதமாகி மந்திரங்கள் நானாவாகி உள்ளேன் நான்
பேதமாகி நினைந்திருந்து பேணுந் தியானம் ஆவேன் நான்
ஓதலாகும் அவத்தை பல ஒன்றாய் அறிவாய் உள்ளேன் நான்
ஏதம் இல்லா எப்பொருட்கும் உள்ளே இலங்கியிடுபவன் நான் 120

**பொழிப்புரை:** *ஒலியாகிப் பலவித மந்திரங்களாகி உள்ளவனும் நானே. பற்பல பேதங்களாகிக் கருதி இருந்து விரும்புகின்ற தியானமும் நானே. சொல்லப்படும் அவத்தைகள் பலவாயும் ஒன்றாயும் அறிவாயும் உள்ளவனும் நானே. குற்றமில்லாத எவ்வகைப் பொருள்களுக்கும் உள்ளாக விளங்குபவனும் நானே.*

யாதொன்று அருத்தம் உண்டில்லை என்னும் உரைகள் இரண்டினுக்கும்
யாதொன்று அருத்தந் தோன்றும் என்றுந் தோன்றாது என்றுஞ் சொல்லுதற்குந்
தீதொன்று இன்றி இவை அனைத்துந் திகழும் என்றன் உருவென்றே
ஓதும் ஐயம் ஓரிடத்தும் உளதன்று உண்மை உரைக்குங்கால். 121

**பொழிப்புரை:** *இருக்கின்றது எனவும் இல்லை எனவும் சொல்லுகின்ற இருவகை உரைகளுக்கும். யாதொன்று பொருளோ அதுவும் தோற்றம் என்றும் தோற்றாது என்றும், உரைப்பதற்கு யாதொன்று பொருளோ அதுவும் ஒரு தீங்குமின்றி, இவைகள் அனைத்தும் விளங்குகின்ற எனது வடிவம் என்றே வேதங்கள் எல்லாம் சொல்லும் சத்தியமாய்ச் சொல்லுங்கால் சந்தேகமானது ஒரு இடத்தும் உளதன்றாகும்.*

யாதினை நித்தமுள்ள புத்தமுஞ் சுத்தம் என்று இங்கு
ஓதிடும் மறைதான் என்றன் உண்மையே திகழும் வண்ணந்
தீதினை ஒழிந்த அந்தப் பூரணம் அதுவே யாம் என்று
ஓதிடும் மெய்யே இங்கு ஓர் ஐயமும் உள்ளது அன்றே. 122

**பொழிப்புரை:** *எந்தப் பொருளை நித்தியமாய் உள்ள பரிபூரண ஞானம் என்றும் பரிசுத்தம் என்றும், இவ்விடத்தில் என்னுடைய உண்மை ஒன்றே விளங்கும்படி வேதம் சொல்லுகின்றது. தீங்கில்லாத அந்தப் பூரணப்பொருளே நாம் என்று சொல்லுங்கள். இங்ஙனமே இது சத்தியம் ஒரு சந்தேகமும் இல்லை.*

அகம் என அறியப்பட்டு நிற்கின்ற பொருளும் ஆகித்
தகைமையில் இதம் என்று உன்னத்தக்க இப் பொருளும் ஆகி
சுகமுடைச் சற்சித்தாம் என்னுருவமே தோன்றும் என்று
மிக உரை செய்யல் உற்றான் வேறு உருவிலாத வண்ணம். 123

**பொழிப்புரை:** *நான் என்று உணரப்பட்டு இருக்கின்ற புசிப்பவனாகியும், பெருமையாக நன்மை என்று கருதத்தக்க இந்தப் போக்கியப் பொருளாகியும். பிரம்ம ஆனந்தமாகிய சத்து, சித்தாகிய என்னுடைய சொரூபமே விளங்கும் என்று அன்னியப் பொருள் ஒன்றும் இல்லாத வண்ணம் சிவ பெருமானார் மிகவும் திருவாய் மலர்ந்து அருள் செய்கின்றார்.*

நானே முழுதும் எனை ஒழிய நாடில் சிறிதும் வேறில்லை
ஆன பொருளை அருமறைதான் அறையும்படி ஆனதனாலும்
யானும் இசைத்தபடியாலும் இதுவே திடமாய் உள பொருள்தான்
ஊனமின்றி நான்முகனும் உரைத்தது உங்கட்கு உண்மையதே. 124

**பொழிப்புரை:** *ஆராய்ந்து பார்த்தால் நானே அனைத்தும். என்னைத் தவிர சிறிதும் வேறில்லை. அருமையான வேதங்களும் அப்படியான பொருளையே சொல்லுகின்ற தன்மை உடையன ஆதலாலும் நாமும் அருள்செய்த தன்மையினாலும் இதுவே நிச்சயமாய் உள்ள பொருளே ஆகும். குறைபாடு இல்லாமல் பிரம்மாவும் உங்களுக்கு உபதேசித்ததுவும் உண்மைதான்.*

இப்பொருளை ஐயப்பட்டோர் இறப்பர்கள் கணத்தில் மெய்யே
மெய்ப்படு பொருளை என்றும் விடுதல் நிச்சயம் அதாகும்
இப்பொருளை ஐயம் இன்றி அறிந்தவன் பவ பாசத்தை
மெய்ப்பட ஒழிந்து மேலாம் ஒளியினை அடையும் அன்றே. 125

**பொழிப்புரை:** *இந்தப் பொருளில் ஐயம் கொண்டவர்கள் ஒரு கணத்தில் அழிவார்கள். இது சத்தியமே மெய்ப்படு பொருளை எக்காலத்தும் விட்டு விடுதலும் உண்மை ஆகும். இந்தப் பொருள் நிச்சயத்தை சந்தேகம் இல்லாமல் உணர்ந்தவன் பிறப்பு இறப்பாகிய பாசத்தை உண்மையாக நீக்கி மேலாம் ஒளியினை அடைவான்.*

பாச மோசகனாம் ஈசன் பகர்ந்து அருள் செய்து தன்னை
நேசமோடு அயன் மால் தம்மை நீடுறத் தழுவிக் கொண்டு
ஆசிலா அமரர் தம்மை அருட் கண்ணால் அமைத்து நோக்கிச்
சோதி ஆனந்த வெள்ளச் சுக ரூபராமின் என்றான். 126

**பொழிப்புரை:** *இவ்வாறாகப் பிறவிப் பிணியைப் போக்குபவனாகிய சிவபெருமான், தனது மகிமையைத் திருவாய் மலர்ந்தருளிச் செய்து, பிரியத்தோடு பிரம்மாவையும் திருமாலையும் நன்றாகத் தழுவிக்கொண்டு, குற்றமற்ற தேவர்களை அருட்கண்ணால் பார்த்து, விளங்கும் பிரம்ம ஆனந்த வெள்ளமாகிய சுக ரூபம் உடையவர் ஆவீர்கள் என்று அருள் செய்தார்.*

சாந்த மெய்க் கருணை மேனிச் சம்புவை அமரர் எல்லாம்
ஆய்ந்த பேரன்பினாலே அடியிணை மலர்கள் தம்மேல்
ஏய்ந்த மாமலரும் நீரும் இலையொடு பலமுங் கைக் கொண்டு
ஆந்தனை இறைஞ்சி ஏத்தி அருச்சனை செய்து நின்றார். 127

**பொழிப்புரை:** *இவ்வாறு திருவருள் செய்த சாந்தமும் கருணையும் மேனியாக உடைய மகா தேவரை தேவர்கள் எல்லாரும் ஆராய்ந்து அறிந்த மேன்மையாகிய பத்தியினாலே, அடிஇணை மலர்கள் தம்மேல் இயைவதாகிய உயர்ந்த மலர்களும் தீர்த்தங்களோடும், பாத்திரங்களோடும், கனிவர்க்கங்களும் கையில் கொண்டு தங்களால் ஆனமட்டும் வணங்கித் துதித்து அருச்சித்து நின்றார்கள்.*

உலகம் யாவும் அளந்தருளும் உலப்பில் கீர்த்தி நாரணனும்
இலகும் தனது காரணமாம் ஈசன் பாத பங்கயத்தைத்
தலையின் மிசையே வைத்துஅருளித் தரியா அன்பால் தானழிந்தான்
மலரின் மிசையோன் அவ்வடிகள் மறந்தே தன்னை வைத்திருந்தான். 128

**பொழிப்புரை:** *சகல உலகங்களையும் அளந்து அருளிய கெடுதல் இல்லாத புகழை உடைய திருமாலும், தனக்குக் காரணமாக விளங்கும் சிவபெருமானது திருவடித் தாமரைகளைச் சிரசின்மீது வைத்துக் கொண்டு, தாங்குதற்கு அரிய அன்பினால் தன்னைத் தானே மறந்தான். மலர்மிசையோனாகிய பிரம்மாவும் திருமாலைப் போலச் சிவபெருமானது திருவடிகளைத் தலைகளில் வைத்துக் கொண்டு தன்னை மறந்து இருந்தான்.*

தேவர்க்கும் தேவனாய பெருமான் தன் கழல் செறிந்த
யாவர்க்கும் பாசம் நீக்கி எடுத்திடல் இயல்பாய் உள்ளான்
மூவர்க்கும் தெரியா உண்மைப் பொருளான தற்பாவந்தான்
யாவர்க்கும் தெரியும் வண்ணம் இன்பக் கூத்து ஆடலுற்றான் 129

**பொழிப்புரை:** *தேவர்களுக்கும் தேவராகிய மகாதேவரும், தமது திருவடிமுன் நெருங்கி நின்ற சகலருக்கும் பிறவித் தளையை நீக்கிக் கரையேற்றும் தன்மையை இயற்கையாக உடையவராகிய எம்பிரானார், மூவர்க்கும் தெரியாத உண்மைப் பொருளான தனது சுயசொரூபம் சகலருக்கும் தெரியும்படி ஆனந்த நடனம் செய்து அருளத் தொடங்கினார்.*

மேலாய் அருள் சேராகரமாய் வேறென்று இடுதற்கு அரியவளும்
கோலா அளவில் பேரன்பாற் கூத்தன் தனையே பார்த்தருளிக்
காலால் ஆடல் தனக்கு இயையக் கையாற் தாளக் கதி செய்ய
மாலே முதலாம் வானோர்கள் வலவர் மகிழ்வால் ஆடினரால். 130

**பொழிப்புரை:** *மேன்மையாயும், கருணையெல்லாம் சேருதற்கு உறைவிடமாயும் சங்கரருக்கு வேறு என்று சொல்வதற்கு அருமையானவளாயும் விளங்குகின்ற சங்கரியும் சூழ்ந்து அளவில்லாத பேரன்பினால் ஆனந்தக் கூத்தனாகிய தனது பதியையே பார்த்துக் கொண்டு அவரது திருப்பாதத்தால் செய்யும் நடனத்துக்கு ஏற்ப திருக்கைகளால் தாளம்போட திருமால் முதலாகிய தேவர்கள் இன்னுமுள்ள சமர்த்தர்கள் அனைவரும் ஆனந்தத்தால் நடனம் செய்தார்கள்.*

பேர் ஆனந்தக் கடலாய பெருமான் வணங்குந் தேவர் பிரான்
பாரா எல்லா அமரரையும் பரிந்து உள் உவகை கூர்ந்து எவர்க்கும்
தீரா இன்பம் அளித்து அருளித் தெரிவை ஒருபால் உடனாகி
ஆரால் அறியா அறிவு உருவோன் ஆங்கே அறிவில் கரந்தனன் ஆல். 131

**பொழிப்புரை:** *பேரானந்தக் கடலாகிய பெருமானாகியும், வணங்குகின்ற தேவர்களுக்கெல்லாம் அதிபராயும் எழுந்தருளிய மகாதேவர், சகல தேவர்களையும் பரிவாகி திருவுள்ளத்தில் உவகை கூர்ந்து, அத்தேவர் அனைவருக்கும் நீங்காத பேரின்பத்தைக் கொடுத்தருளி, உமையொடு பாகனாகிய யாராலும் அறியாத ஞானசொரூபர் ஆனவர் அவ்விடத்தில் சிதாகாயத்தில் மறைந்து அருளினார்.*

அரியும் அயனை அணைத்துக் கொண்டு அமரர் முனிவர் தமையெல்லாந்
தெரிய அன்பால் மிக நோக்கிச் சித்தங் களிகூர்ந்து உளமகிழ்வால்
உரிய உலகந் தணியிலும் மாவுலப்பில் பெருஞ்சீர் வைகுண்டத்து
அரிவை மலர் மேல் அவளோடும் அரவின் மேல் அமர்ந்தனன் ஆல் 132

**பொழிப்புரை:** *திருமாலும் பிரம்மாவை அனைத்துக் கொண்டு, தேவர்களையும் முனிவர்கள் எல்லாரையும் தெரியும்படி அன்பால் மிகவும் நோக்கி உள்ளத்தில் மிகுந்துள்ள மகிழ்வால், இந்திராதி தேவர்களுக்குரிய உலகம் அழிந்தாலும் கெடுதல்*

*இல்லாத அழகிய பெருஞ்செல்வத்தை உடைய வைகுண்டத்தில் தேவியாகிய திருமகளோடும் அரவு அணையின்மேல் அமர்ந்தனன்.*

அயனும் மீண்டு அதிசயத்தால் அவசமாய் அழிந்து பின்னும்
பயனுறும் அமரர் தம்மைப் பார்த்து முன் பரிவினாலே
வயம் எலாம் உளதாய்ச் செய்யும் மலர்மிசை மறையினோனுந்
தயவின் வாய் திறந்து வார்த்தை உரைத்தனன் தழைக்கும் வண்ணம். 133

**பொழிப்புரை:** *பிரம்மாவும் திரும்பவும் பெருமகிழ்வில் பரவசமாய்த் தன்னை மறந்து, திரும்பவும் ஆன்மப் பயன் அடைந்த தேவர்களை நோக்கி, முன் இருந்த அன்பினால் அனைத்தும் தன்வயம் உள்ளனவாகப் படைக்கும் பங்கயாசனத்தில் அமர்ந்த பிரம்மனும் கருணையோடு திருவாய் மலர்ந்து தேவர்கள் வாழும்படியாக இவ்வாறு உரைத்தான்.*

மானிடர் ஆனோர் என்றும் ஓதிடும் விச்சை எல்லாம்
ஊனமாய்ப் பாச பெத்தமாக்கிடும் உண்மையாகத்
தானதாம் அறிவாம் விச்சை ஒன்றுமே பாசமான
ஈனமாம் இருளை நீக்கும் இன்ப நற்சோதி ஒன்றும். 134

**பொழிப்புரை:** *மனிதரானவர்கள் எக்காலத்தும் சொல்லுகின்ற பரவித்தைக்கு வேறாகிய சகல வித்தைகளும் ஊனமாய் பிறவித்தளையில் கட்டுண்ணச் செய்யும். உண்மையாக இன்ப நற்சோதியொன்றும் தான் அதாம் அறிவான ஆன்ம வித்தை ஒன்று மாத்திரமே பிறவித்தளையான இருளை நீக்கிவிடும்.*

தானாகும் அறிவு ஒன்றில்லாத அவனுக்குத் துன்ப ஆழி
தானே உண்டாவது என்றும் தான்தனில் தழைத்து உள்ளோர்கட்கு
ஆனாது எவ்வுருமாகி அல்லவாம் அறிவாஞ் சோதி
தானாகும் வீடேயாதல் சங்கை ஒன்றில்லை அன்றே. 135

**பொழிப்புரை:** *தானாகின்ற ஆன்மவித்தை ஒன்று இல்லாத அவனுக்குச் சோகக் கடலானது எக்காலத்தும் இயல்பாகவே உண்டாகின்றது. தன்னிடத்திலே தானாகவே வாழ்ந்திருக்கின்றவர்களுக்கு நீங்காமல் சகல உருவமுமாகி தன்னில் வேறில்லாமலும் இருக்கின்ற அறிவாகிய ஒளியே தானாகிய வீடே ஆதலில் ஒரு சந்தேகமும் இல்லை.*

யாவன் ஒருவன் தனை இகழ்ந்தே அளவில் வேறுபடக்கண்டும்
யாவன் ஒரு சொல் வேறுபடக் கேட்டும் அறிந்தும் வருகின்றான்
யாவன் ஒருவன் தனக்கு என்றுஞ் சிறுமை அதுவே பிறப்பு இறப்புப்
போவது இல்லாக் காரணமும் அதுவே என்று புகன்றனன் ஆல். 136

**பொழிப்புரை:** *எவன் ஒருவன் தானாகிய பிரம்மத்தை இகழ்ந்து அளவில்லாத வேறுபாடுகளைக் கண்டும், எவன் ஒரு சொல்லாயினும் வேறுபடக் கேட்டும், அப்படியே அறிந்தும் வருகின்றவன் எவனோ, அந்த ஒருவனுக்கு எக்காலத்தும் அதுவே சிறுமையாகும் பிறப்பு இறப்பு நீங்காத காரணமும் அதுவேதான் என்று சொன்னான்.*

அருளினால் யாவன் தன்கண் இவையில் வேறு ஒன்று காணாது
அருளினால் வேறு கேளாது அறிந்திடாது இருக்கில் அஃதே
அருளதாம் பெருமைதானும் அழிந்திடாச் சுகமும் எல்லா
இருளிலா வீடுதானும் என்றனன் இமையோர்க்கு எல்லாம். 137

**பொழிப்புரை:** *அருளினால் எவன் ஆன்மாவினிடத்தில் இவைகளில் வேறு ஒன்றையும் காணாமலும், வேறு ஒன்றையும் கேளாமலும் அறிந்திடாமலும் இருந்தால் அதுவே அருளதாகும் பெருமையும் நாசமில்லாத இன்பமும் ஓர் இருளும் இல்லாத மோட்சமும் என்று தேவர்களுக்கு எல்லாம் கூறினான்.*

யாவர் ஒருவர் தமக்கு என்றுஞ் சிறுமை உண்டேல் சுகமிலையாம்
ஓவலில்லாது அளவுபடாது ஒன்றாம் அறிவாய் நின்றோர்கட்கு
ஆவதில்லை பிறப்பு இறப்பும் அழுந்து போக்கு வரவும் இலை
மேவு பந்தம் வீடும் இலை என்றே விரிஞ்சன் விளம்பினன் ஆல். 138

**பொழிப்புரை:** *எவர்களுக்கும் எந்தக் காலத்தும் பேதம் என்னும் சிறுமை உண்டாகில் சுகம் இல்லவே இல்லையாம். நீங்குதல் இல்லாமல் மூவிதப் பிரிவுகள் இல்லாமல் ஏகமாகிய ஞான சொரூபமாய் நின்றவர்களுக்கு பிறப்பும் இறப்பும் ஆவதில்லை. துன்பத்துள் அழுந்தத்தக்க போக்கு வரவும் இல்லை. பொருந்துகின்ற பந்தமும் வீடும் இல்லை என்றே பிரம்ம தேவன் கூறினான்.*

தன்னிலே ஆக்கப்பட்ட கனவினில் உலகம் எல்லாந்
தன் உணர் நனவதாகத் தனில் அவை அடங்குமா போல்
தன்னிலே தோன்றும் எல்லாப் பொருள்களும் தானே ஆனால்
தன்னிலே தன்னில் தானேயாமதே தனில் வேறின்றே. 139

**பொழிப்புரை:** *தன்னிலே உண்டாக்கப்பட்ட கனவினில் சகமனைத்தும் தன்னுடைய உணர்வாகிய விழிப்பில் தன்னிடத்தில் அவை அனைத்தும் அடங்கும் தன்மைபோல தன்னிடத்திலே உண்டாகும் எல்லாப் பொருள்களும் தானேயானால் தன்னிடத்தில் இயல்பாகத் தானாகவே ஆகும் தனக்கு அன்னியமாக யாதொன்றும் இல்லை.*

எல்லாப் பொருட்கும் மேற்சுகமாம் இதனை உங்கட்கு ஏயும்வணம்
நல்லார் உளங்கொள் நடராச நாதன் பாதத்து அருளாலே
எல்லாம் என்றன் கருணையினால் உரைத்தேன் இதன்தன் மேல்கேட்பது
இல்லா வண்ணம் இனியானும் இயம்ப வேண்டுவதும் இலதே. 140

**பொழிப்புரை:** *எல்லாப் பொருள்களினால் உண்டாகும் சுகத்திற்கும் மேலான ஆனந்தமாகிய இந்தப் பொருளை உங்களுக்குப் பொருந்தும்படி மகான்களது திருவுளமே இடமாய்க் கொண்ட ஆனந்த நடராச மூர்த்தியாய் எழுந்தருளியுள்ள, சிவபெருமானது திருவடிப் பிரசாதத்தினால் அனைத்தையும் என்னுடைய அன்பினால் இதற்கு மேலாகக் கேட்க வேண்டியது இல்லாதபடி உபதேசித்தேன். இதற்குமேல் நானும் சொல்ல வேண்டுவதும் இல்லை.*

**ஐந்தாவது சாந்தோக்கிய உபநிடத தாற்பரியம் உரைத்த அத்தியாயம் முற்றிற்று.**

## ஆறாவது அத்தியாயம்

# சாந்தோக்கிய உபநிடத தாற்பரியம் உரைத்த அத்தியாயம்

பங்கயா சனத்தில் இருந்திடும் பரமன் பழமறை பகர்ந்த அப்பரிசே
சங்கையா காமல் சங்கரன் திருவாய் மலர்ந்தனன் பரிசினைத் தானே
அங்கு வானவர்கட்கு அளிக்குமா றளித்து அளவிலா அருளினால் அந்த
எங்குமாய் நின்ற பொருளை மீண்டுணரும் இடத்தையும் தெளிவுற இசைப்பான்
1

**பொழிப்புரை:** *தாமரை ஆசனத்தில் அமர்ந்திருக்கும் பிரமன் பழமையான வேதம் சொல்லிய அந்தப்படியே ஐயமுறாமல், தனக்குச் சிவபெருமான் திருவாய் மலர்ந்து அருளிய நல்ல பண்பினைத் தானே அவ்விடத்தில் தேவர்களுக்கு எவ்வாறு அளிக்க வேண்டுமோ அவ்வாறு அளித்தும், அளவில்லாத திருவருளினால் எவ்விடத்தும் பூரணமாய் நின்ற அந்தப் பொருளை மீண்டும் உணரும் இடத்தையும் தெளிவுறச் சொல்லுகின்றான்.*

புகல நின்றிடும் பிரமபுரம் எனும் பதியதனில்
தகர புண்டரிகம் எனும் அகரம் இலங்கியதகர
ககனம் உண்டது மறைகள் கருத நின்றுள பிரம
மிக விரும்புவர் பிறவிவிட விரைந்துள விமலர் 2

**பொழிப்புரை:** *சொல்லுகின்ற பிரம்மபுரம் என்னும் இவ்வுடலில், இதயத் தாமரையாகிய வீட்டில் விளங்குகின்ற இதய வெளி உண்டு. அது வேதங்களால் உணரும்படிநிற்கின்ற சச்சிதானந்தமாகிய சிவமாகும். அச்சிவத்தை பிறப்பு நீங்கும்படி, மோட்சத்தில் விருப்பம் உள்ள சாதகர்கள் மிகவும் விரும்புவார்கள்.*

தெரியிடம் சிறிதலது சிறியதன்று அறிவுருவு
பெரிதெனும் படிநினைக பிரமமெங்கும் உளதென
உரியதொன்று உணர்வது உணர்வொழிவது என்பதுவும் உணர்
கரியழிந்து உளதோர் பொருள் கழிய நின்றதுவும் இலை 3

**பொழிப்புரை:** *காணப்படுவதாகிய இதயத் தாமரையானது அற்பமே அன்றி ஞான வடிவமான அந்த இதய வெளியானது அற்பமன்று. பூரணத் தன்மை உடையதென்று உணரக் கடவீர்கள். சித்து ரூபமாகிய பிரம்மம் எவ்விடத்தும் இருக்கின்றது என்று*

*சொல்லத் தக்கது அறியப்பட்ட ஒரு பொருளையும், அறியப்படாதென்னும் பொருளையும் அறிகின்ற காட்சியை அழிந்து உண்டாகின்ற பொருள்கள் நீங்கி நிற்கின்றதும் இல்லை.*

அறிவின்முன்பு அலதுசடஅகிலம் உண்டென நிகழ்வு
பெறுவதென்று அறிவினில் நிலைபெற நிகழ்ந்தது பிறிது
செறிவுறும் பொருளின் நனிசிறிது எனும்படி நிகழ்தல்
இறைவன் எங்கணும் விரவி எலையறும் படிநிகழும் 4

**பொழிப்புரை:** *ஞானத்தின் உருவமாகிய பிரம்மத்தின் முன்பு அல்லாமல் சடமான இவ்வுலகம் இருக்கின்றதாக தானே விளக்கம் பெறுவதன்று. சித்தினாலேயே நிலைபெற்று விளங்குகின்றது. அந்நியமாய்க் கலந்துறும் பொருளினால் மிகவும் அப்பிரமம் சிறிது எனும்படி விளங்குதலும், வியாப்பியமான உலகத்தை விளக்குகின்ற சிவன் எங்கும் வியாபகன் ஆகி எல்லை இல்லாதபடி விளங்குகின்றான்.*

அளவில் அம்பரம் எவளவு அறிசிதம்பரம அவளவு
உளது விண்புவி அநிலம் ஒளிபதங்கள் உடுமதி
துளிதரும் புயல் மின்முதல் சொலவரும் பொருள்கள் இனி
விளைப என்றி இவை இதய வெளி அடங்கிடும் அடைய 5

**பொழிப்புரை:** *அளவில்லாத ஆகாயமானது எந்த மட்டும் வியாபகமாய் இருக்கின்றதோ, அறியாநின்ற இதய கமல மத்தியில் விளங்கிய சித்தான இதய வெளியும் அந்த மட்டும் வியாபகமாய் இருக்கின்றது. ஆகாயம், பூமி, காற்று, நெருப்பு, சூரியன், சந்திரன், நட்சத்திரம், மழைத்துளியைத் தருகின்ற மேகம், மின்னல் முதலாகச் சொல்லப்படும் பொருள்கள் மேலும் உண்டானவை எல்லாம் இதய வெளியில் ஒடுங்கி இருக்கின்றன.*

இலதென்னும் பொருளும் இவனிடை இலங்குதலின் இறை
சொலவரும் பொருள் முழுதும் நிலவினன் சுழலும் வினை
நலனும் அன்றியதும் நரை மரணமும் பசியைமுதல்
உலகுறும் துயர்முழுதும் உடையன் அன்று ஒருபொழுதும் 6

**பொழிப்புரை:** *இல்லை என்று சொல்லப்பட்ட பொருள்களும் இந்த ஆன்மாவிடத்தில் விளங்கலால் இந்த இதயவெளியின் உருவமான சிவபெருமான், சொல்லப்பட்ட பொருள்கள் எல்லாவற்றினும் நிலவினன். சுழற்றுகின்ற நல்வினையும், தீவினையும் நரையும் மரணமும் பசி முதலாகிய உலகம் அடையப்பட்ட துன்பங்கள் முழுதும் ஒருகாலத்தும் உடையன அல்ல.*

பண்ணிய தொழில்தரு பயன்கள் யாவையும்
மண்ணிடை நுகர்ந்திட மாளுமாறு போல்
புண்ணிய வினைதரும் போகம் யாவையும்
விண்ணிடை இருந்து அனுபவித்து மீளுமால் 7

**பொழிப்புரை:** *செய்த தொழில் தரு பயன்கள் அனைத்தையும் இப்பூமியினிடத்து அனுபவித்திட அப்பலன்கள் நசிக்கும் விதம்போல் புண்ணிய வினைகள் கொடுக்கின்ற சுவர்க்க போகம் அனைத்தையும் பரலோகத்திலிருந்து அனுபவித்து அப்போகம் நசித்தவுடன் திரும்புவான்.*

மெய்யினை உணர்ந்தவர் வினைகள் யாவையும்
செய்யினும் செய்திலர் ஆவர் தேவர்காள்
துய்யநல் வினைகளே தொகுத்தும் மற்றையார்
வெய்ய கர்மத்தராய் விளம்ப வேண்டுமே 8

**பொழிப்புரை:** *தேவர்களே, உண்மையான தன்னை அறிந்தவர்கள் சகல கருமங்களையும் செய்தாலும் செய்யாதவர்கள் ஆவார்கள். தன்னைப் பரமாக அறியாத பிறர் தூய நல்வினைகளையே ஒழுங்காகச் செய்தாலும் அவர்களைக் கொடிதான கன்மங்களைச் செய்தவர்களாகச் சொல்ல வேண்டும்.*

பொற்பொருள் புதைத்த புவியில் புலனிலார் போய்
நிற்பினும் மிடிப்பர் நனிநித்தம் உலகத்தோர்
தற்பொருள் சுழுத்திதனில் உற்றும் அதுதானே
அற்பம் அறிகிற்றிலர் அயர்ச்சிவலி ஐயோ 9

**பொழிப்புரை:** *பொன்னாலான அணிகலன்களைப் புதைத்து இருக்கின்ற பூமியில், கண்ணில்லாதவர்கள் சென்று நின்றாலும் வறுமை உறுவார்கள். அது போல, மிகவும் நாள்தோறும் உலகத்து உள்ளவர்கள் பரம்பொருளானது சுழுத்தியில் இருந்தும் அதைத்தான் சிறிதும் அறிகின்றார் இல்லை. ஐயா அவர்களது அறியாமையின் வலிமையே ஆகும்.*

விதம்படும் உளந்தொறும் விசேட அறிவாய் உற்று
இதம் படுதலால் இதயமென்பர் இறைதன்னைத்
திதம்பட இவன்திறம் அறிந்தவர்கள் சேரும்
பதம் பிரமம் அல்லது பகர்ந்திடுதல் உண்டோ 10

**பொழிப்புரை:** *தொழிற்படுகின்ற சகல இதயங்களிலும் உயர்ந்து ஞான சொரூபமாய் இருந்து சுகரூபமாய் இருத்தலால் சிவனை இதயம் என்று சொல்லுவார்கள். இந்தச் சிவனது தன்மையை உறுதியாகத் தெரிந்தவர்கள் அடையும் பதவி பிரம்மமே அன்றி, வேறு பதவி உண்டென்று சொல்லுவது உண்டோ.*

சுழுத்தி யதனில் துயர்துவக்கும் உடல் தன்னின்று
எழுப்பி உள்ள தன்வடிவினால் இறையை எய்துற்று
அழுத்தமுற யாவன் அதுவாகும் அவன் எங்கும்
முழுத்தியுள தற்பரமமாகி முடிவுற்றான் 11

**பொழிப்புரை:** *சுழுத்தி காலத்தில் துன்பக் கயிற்றில் கட்டப்படும் இவ்வுடலினின்றும் எழும்பிய தனது எதார்த்த வடிவமாகக் கொண்டு சிவத்தை ஒன்றாகி அடைந்து*

*அழுத்தமாக எவன் அச்சிவம் ஆவான் அவன், எவ்விடத்தும் பூரணமாக நிற்கின்ற தானான சொரூபம் ஆகவே மிஞ்சுகின்றான்.*

**இது பரம்பரம் அமிர்தம் அபயம் என்பதுவும் இது**
**விதமுறும் பலஉலகும் விரவல் இன்றிய பிரம**
**பதம் இதன்கணில் இரவு பகல் அடைந்தில மரணம்**
**உதயம் ஒன்றில இருமை வினைகள் ஒன்றதும் இல 12**

**பொழிப்புரை:** *உயர்வும் அழிவில்லாததும் இதுவே. பயமில்லாத மோட்ச வடிவம் என்பதும் இதுவே. பலவிதமான சகங்களும் விரவாத பரமபதமாகும். இதனிடத்தில் இரவுபகல் அடையாது உற்றன. இன்பம் துன்பம் வடிவங்களான இரு வினைகளும் ஒன்றும் இல்லாதனவுமாம்.*

**ஆதலிற் சிலவினையினால் அடர்ப்பவனும் அலன்**
**ஓதல் உற்றிடு பிரமலோகம் இப்பரன் இவன் ஓர்**
**சேது அக்கரை அடைஞர் சேர்பவக் கடல் விடுவர்**
**சாதுயர்ப் படினும் அவர் தாம் இடர்ப்படுவது இலர் 13**

**பொழிப்புரை:** *ஆதலால் இவ்வான்மா சில கன்மங்களினால் சம்பந்தப் பட்டவனும் அல்லன். சொல்லுகின்ற பிரமலோகம் ஆன்மாவே தான். இவனே ஒரு பாலமும் ஆவான். அந்தப் பாலத்தை அடையப்பட்டவர்கள் பிறவிப் பெருங்கடலை விட்டு நீங்குவார்கள், உயிருக்கு அச்சுறுத்தல் தரும் துன்பத்தை அடைந்த போதிலும் அவர்கள் துன்பப்பட மாட்டார்கள்.*

**செப்பிய பொருள்கள் யாவையும் சென்று சேர்வுறா வகைநின்ற சேது**
**அப்படிப் பட்டால் அந்தனும் அனந்தன் அருந்துயர் உற்றும் உற்றிலனாம்**
**இப்படி இதயாகாசம் என்று இயம்பும் ஈசன் இவ்வுடம்பில் வேறாகிக்**
**கப்புறு கனவு நனவு உறக்கத்தைக் கண்டு அவை கடந்து நிற்கின்றான் 14**

**பொழிப்புரை:** *அந்த ஆன்மா பலபிரிவாகச் சொல்லிய அனைத்தும் நசித்துப் போகா வண்ணம் நிலையுற்று நிற்கின்ற சேது ஆவான். அப்படிப்பட்டால் குருடனும் குருடனாகான். தாங்கற்கரிய துன்பத்தை அடைந்தும் அடையாதவனாவான். இவ்வண்ணம் இதய ஆகாசம் என்று சொல்லப்பட்ட ஈசன் இந்த உடம்பைக் காட்டிலும் வேறுபட்டு முப்பிரிவாகிய சாக்கிர சொப்பன சுழுத்தியை அறிந்து அவைகளைக் கடந்து நிற்கின்றான்.*

**தற்பரம் தன்னில் கற்பனையாலே சாக்கிரம் கனவு உறக்கங்கள்**
**அற்புத மாக விளங்கும் அல்லது தானாக அவ்வவத்தைகள் விளங்கா**
**கற்பனை ஆகிக் காட்சியாம் கடம்போல் உடம்பினைத் தானெனக் கருதில்**
**புற்புத உடம்பாய்ச் செற்ற ஆர்வங்கள் பொருந்தும் ஐயுறேல் இனிப் பொருளில் 15**

**பொழிப்புரை:** *இறைவனிடத்தில் கற்பனையாலே சாக்கிரம் சொப்பனம் சுழுத்தி என்ற மூன்று நிலைகளும் அதிசயமாக விளங்குகின்றதே அல்லாமல் தானாக அந்த நிலைகள்*

*விளங்கமாட்டாவாம். கற்பனையாகித் தோன்றுகின்ற கடம் போன்ற இவ்வுடலைத் தான் என்று நினைக்கில் நீர்க்குமிழி போன்ற உடம்பாய் பிரியாப் பிரியங்கள், இந்தப் பொருளில் வந்து பொருந்தும் இனிச் சந்தேகப்பட வேண்டாம்.*

**உடம்புடன் இருந்தே உடம்பிலா உண்மை உணர்ந்தவன் உளத்து ஒருக்காலும்**
**விடம்படும் காம வெகுளி மேவாது விளம்பிடும் பொருளெலாம் விளைக்கும்**
**இடம்படும் இதய ஆகாசமற்று இதுவே இறப்பொடு பிறப்பு இலதென்றும்**
**திடம்படும் பிரமம் ஆவதும் ஆன்மா ஆவதும் தேகிகட்கு எல்லாம் 16**

**பொழிப்புரை:** *இந்த உடம்போடும் இருந்தே உடம்பிலா உண்மையை அறிந்தவனது மனதில் ஒரு பொழுதும் விடம் போல உண்டாகிற விருப்பு வெறுப்பு பொருந்தாது. சொல்லுகின்ற பொருள்கள் அனைத்தையும் உண்டாக்கும் இடம்படும் இதய ஆகாசம் இறப்போடு பிறப்பும் இல்லாதது. முக்காலக்களிலும் திடம் பொருந்திய பிரமமாக இருப்பதும் உடல்களுக்கு எல்லாம் ஆன்ம சொரூபமாய் இருப்பதும் இந்த இதய வெளியே தான்*

**அப்பரம் பொருளே வேறொரு பரமும் ஆகியது அற்பமும் இல்லை**
**எப்பொரு ளாயும் விளங்கியும் விளங்காது இருக்கின்றானும் இங்கு இறையே**
**ஒப்பரும் பரமன் உருத்திரன் சிவனென்று உரைக்க நின்றவன் உடைத்தான**
**இப்பெரும் தன்மை இருந்தவாறு என்னே இதனை ஏவரால் அறிவாம் 17**

**பொழிப்புரை:** *அந்தப் பரம் பொருளே வேறொரு பரமும் ஆகியது சிறிதேனும் வேறில்லை. எப்பொருளாயும் விளங்கியும் விளங்காது இருப்பவனும் இங்கு இறையே. உவமை சொல்லுவதற்கு அரிய உருத்திரன் என்றும், சிவன் என்றும் சொல்லுகின்ற இந்தப் பரமசிவனுடைய பூரணத் தன்மை இருந்தவாறு என்னே! இத்தன்மையை எவரால் அறியலாகும்.*

**இந்த மகாபூதங்கள் பிரிந்தே எல்லையிலா நாமங்களையும் பெற்று**
**அந்த விகாரங்களும் நிகழ்போதும் அவ்வவை யாயே நிகழ்வதுபோல் மற்று**
**அந்தமிலா ஒன்றாகி இருந்தே அளவறு பேதப் பல் பொருளாயிட்டு**
**எந்த உபாதிக்கும் கரியாய் நின்று எங்கும் வியாபிக்கும் பரமீசன் 18**

**பொழிப்புரை:** *இந்த நிலம் முதலான நான்கு மகா பூதங்கள், கடம் முதலிய பல பொருள்களாகப் பிரிந்து, தங்கள் வேறுபாடுகளால் பல்வேறு பெயர்களாயும் பெற்று, அந்த விகாரங்களும் விளங்கும் போதும் அவ்வகைகளாகவே விளங்குவது போல் பரம சிவனானவன் முடிவில்லாத ஒன்றாக இருந்தே அளவில்லாத வேறுபாடுகளையுடைய பல பொருள்களாகி, எவ்வகைப்பட்ட உபாதிகளுக்கும் சாட்சியாய் இருந்து எவ்விடத்தும் நிறைந்து இருக்கின்றான்.*

**பின்ன கடஆகாய ஆதிகளால் ஆகாயம் அபேதம் பேதமுறாது**
**அன்னவன் ஏகாகாரன் அனேகாகார அகம்புக்காலும் அனைத்தாம்**
**மன்னிய பேதாகாரம் அபேதாகாரமுமாய் மாதெவன் இரானேல்**
**இன்னதென் நாமத்தான் எனுமாறு என்யாவையும் ஈசானன் பிரிதன்றே 19**

**பொழிப்புரை:** *வேறான கட ஆகாய முதலியவற்றால் ஆகாயமானது அபேதமே தான் பேதமடையாது அதுபோல அந்தப் பரமசிவன் ஒன்றாவான். பலவாக உள்ள இதயங்கள் புகுந்து இருந்திடினும் அவ்வாறாக நிலைபெற்ற வேறாகவும் ஒன்றாகவும் மகாதேவன் இல்லாவிடில் மகாதேவன் என்னும் பெயரை உடையவன் என்னும் தன்மை என்னாகும்? ஆகையால் அனைத்தும் மகாதேவனே அன்றி வேறல்ல.*

உளவாகியும் இலவாகியும் உருவால் எவை இலகும்
ஒளியானவன் அவனே அவையவையாய் ஒளிர்வுறுவான்
அளவா வகை சிவனே அடையவும் ஆனவன் எனவே
தெளிவாகிய மதியாது அது சிவையாவது தெளிவீர் 20

**பொழிப்புரை:** *இருக்கின்றனவாகும் இல்லாதனவாயும் உருவங்களால் எவ்வெப் பொருள்கள் விளங்குகின்றனவோ அவ்வப் பொருள்களாக ஒளியான அச்சிவனே சருவமும் ஆனவன் என்றே தெளிந்த புத்தி எதுவோ அந்த மதியே சிவை ஆகும் தன்மையை உணர்வீர்கள்.*

சிவனே அகமெனவே திகழ்வுறுவான் இதமென நின்று
அவனே உடலதுமாய் நிகழ்பவன் வேறிலை யானால்
பவமேது அதுவிடல் ஏதுஒருபடியாயுள பரனே
இவன் ஏகமும் எனஓர் பொழுது இறவார் அவர் பிறவார் 21

**பொழிப்புரை:** *பரமசிவனே நான் என்று சொல்லும்படி விளங்குகின்றான். இது என்று சொல்லும்படி நின்று உடலும் ஆகி அந்தப் பரமசிவனே விளங்கப்பட்டவன். அந்தச் சிவனைத் தவிர வேறொன்றும் இல்லையானால், பந்தம் ஏது அந்தப் பந்தம் நீக்கிய முக்தி ஏது ஒருபடியாய் உள்ள இப்பரம சிவனே இந்த எல்லாப் பொருள்களும் என்று உணரும் பொழுதில் ஒருபோதும் அவர்கள் இறக்கவும் மாட்டார்கள். பிறக்கவும் மாட்டார்கள்.*

பரையா மதியுடையார் அநுபவமாய் நிகழ்வது நான்
உரையாடிய படியே உளஒளியாய் நிகழ் சிவனார்
வரையா அருளதனால் வரும்இது மாதவ முதலாம்
நிரையாயிர வழியால் இது நிகழாது நிகழா 22

**பொழிப்புரை:** *மேன்மையாகிய புத்தியை உடையவர்கள் அனுபவமாக விளங்குவதும் யான் உபதேசித்தபடியே இருக்கின்றது. சுயஞ்சோதியாய் விளங்குகின்ற பரமசிவனுடைய நீக்கத்தகாத திருவருளால் இந்தப் பிரம்ம அனுபவமானது வருமே அன்றி, பெருமை பொருந்திய தவம் முதலிய ஒழுங்காகிய பல வழிகளாலும் இவ்வனுபவம் விளங்காது.*

திவகரன் எழில்வேறே சிலவெளி திகழ்வாமோ
அவமுற இருள்போகாது அவனெதிர் நிலையாமோ
சிவதின கரனாலே செறிபவ இருள்நேரா
அவன்ஒளி தனில் நான் மால் அமரர்கள் அறிவோமோ 23

**பொழிப்புரை:** *சூரியன் உதயமானால் வேறான நட்சத்திரம் முதலிய ஒளிகள் ஒளியாகுமா! இருள் வீணாக மாய்ந்து போவதே அன்றி அச்சூரியன் முன்பு நிலையாக நிற்குமோ! அதுபோல, சிவன் என்னும் சூரியனாலே நெருங்கிய பந்தமாகிய இருள் எதிர் நிற்காமல் போய்விடும். அச்சிவனது ஒளிக்கு முன்பு நாராயணன், பிரமனாகிய நான், மற்றத் தேவர்கள் எல்லாரும் ஒளியுடையவர்களாக அறியப்படுவாமோ!*

புரணநல் லறிவாகப் புகலுறு பரமீசன்
சரண்நினைதலும் ஆராதனை புரிதலும் இல்லான் அல்லால்
மரணமதற வேறோர் வழி சொலவிலை யானால்
அரணமதுற நங்கட்கு அடையவும் அவனன்றோ. 24

**பொழிப்புரை:** *சொல்லப்பட்ட பரமேசனுடைய திருவடித் தாமரையைப் பூரணமாக விளங்கும் நல்ல உணர்வாக தியானித்தலும் பூசை செய்தலும் அன்றி பிறப்பு இறப்பு நீங்குவதற்கு மற்றோர் வழியைச் சொல்லவில்லை. இவ்வாறாயின் எங்களுக்குக் காப்பாக அனைத்தும் அந்தப் பரமசிவனே அல்லவா.*

ஆகமங்கள் பலவும் உரையாடு கின்றது இவனைஅனு
போகம் ஒன்றில் அறியும் அறிவாகி நின்ற புனிதன்இவன்
ஏகன் அந்த அனுபவமதே இவன்தன் வடிவுஅதனை
யோகம்ஒன்ற அருள்பவனும் ஓதுகின்ற பரமசிவன் 25

**பொழிப்புரை:** *இந்தப் பரமசிவனையே ஆகமங்கள் பலவும் உரையாடுகின்றது. சொல்லுகின்ற சுவானுபவம் ஒன்றினால் மாத்திரம் அறியப்படுகின்ற உணர்வாகி நின்ற புண்ணிய சொரூபன் இந்தப் பரமசிவனே அத்துவிதன். அவ்வனுபவமே இந்தப் பரமசிவனது சொரூபம். அச்சொரூபத்தை மேன்மை பொருந்த அனுக்கிரகம் செய்பவனும் வேதங்களால் ஓதப்படுகின்ற பரமசிவனே தான்.*

நானும் அந்த அரிஅமரர் ஞாலமொன்று நரர் விவித
யோனி இந்த முழுதும்அதன் ஊடெழுந்த சிறுதிவலை
தானொழிந்து சிறிதில் சிவசாகரம்தன் நிகர்அரியை
ஊனம் ஒன்றும் எனைமொழிவர் ஓர்வொழிந்த உணர்விலிகள் 26

**பொழிப்புரை:** *நானும் அந்த நாராயணரும் தேவர்களும் பூமியின்கண்ணே பொருந்திய மனிதர்களும் நானாவித யோனி பேதங்களும் இவையனைத்தும் பரமசிவன் என்னும் கடலின் ஊடெழுந்த சிறிய துளியே தான். இதற்கு வேறாக அற்பமும் இல்லை. அந்த சிவக்கடலுக்குச் சமானமாக அரியையும் தாழ்வு பொருந்திய என்னையும் ஆராய்ச்சி இல்லாத உணர்விலிகள் கூறுவார்கள்.*

எறிகதிர்க்கு நிகராகின் மின்மினி இறைக்கு நேர் அரியும் எட்டிதான்
நறுவிரைக் கொள் அகில் சந்தொடு ஒக்குமெனில் நானும் அப்பரமனோடுநேர்
அறிவினுக்கு அறிவிலாமை நேர்அகில நாயகர்க்கு ஒருவர் நேரெனில்
செறிய உற்ற அறியாமையின் செயல் இருந்தவாறு எனது செப்புவேன் 27

**பொழிப்புரை:** *பிரகாசிக்கின்ற சூரியனுக்கு மின்மினிப் பூச்சியானது சமமாயின் பரமசிவனுக்கு விட்டுணுவும் சமமானவன். எட்டிமரமானது நல்ல வாசனை உடைய அகில் கட்டைக்கும் சந்தனக் கட்டைக்கும் நிகராகும் எனில், சிருஷ்டி செய்யும் நானும் அப்பரமசிவனுக்குச் சமமாவேன். அகில நாயகனான மகாதேவனுக்கு ஒருவர் சமானமானவர் என்றால் ஞானத்திற்கு அஞ்ஞானமானது நேராகும். பொருந்தும்படி உள்ள அறியாமையின் செய்கை இருந்தவண்ணம் அதனை என்னவென்று சொல்லுவேன்.*

ஓதலுற்ற பரனால் அனைத்தும் உளதாவது அப்பரமன் ஒன்றினால்
ஆதலுற்றிலன் அனாதி முற்றும் அவனால் எறிப்பது அதிரேகமா
வேதனத்தவர் அனைத்தும் அத்துவிதமாய் இழிப்பர் விவிதத்திலே
போதமற்றவர் விழிப்பர் மற்றவர்கள் போதமற்றவர்கள் புல்லியோர் 28

**பொழிப்புரை:** *சொல்லப்பட்ட பரமசிவனால் யாவும் உளதாவது, அப்பரமன் மற்றொன்றினால் உற்பவிக்க மாட்டான். அனாதியாய் உள்ள சகம் அனைத்தும் அவன் ஒருவனால் விளங்குகின்றது உயர்ந்த ஞானக்கண்ணை உடையவர்கள் சர்வ சகங்களையும் அத்துவிதமாகப் பார்ப்பார்கள் ஞானக்கண் இல்லாதவர்கள் பலவிதமான சகத்திலே பார்வையைச் செலுத்துவார்கள் அவர்கள் அறிவை இழந்தவர்கள் கீழ் மக்களும் ஆவார்கள்.*

இது சகந் தானென முன் நிகழ்தலுண்டேல் இவிதம் எவர்களும் காணும் அறிவே
அது பரம் தானென முனனுபவம் தானடையல் அதுபவம் தீரும் அறிவாம்
முதிய சந்தோக உபநிடதம் நின்றோது பொருள் முழுதும் இங்கு ஈசன்மொழியால்
அதிசயம்தான் அமரர் அனைவரும் கூட அழகுற அறைந்தோன் அறிவினால்
29

**பொழிப்புரை:** *இது உலகம் தான் என்று முன்னுற விளங்குவது உண்டெனில், இவ்வித ஞானம் யாவர்களும் இயல்பாக அறிகின்ற ஞானமே அச்சகம் பிரமமே என்று முன்னாக அனுபவம் பொருந்திடில் பரமசிவனது ஆக்கினையாலும் கருணையினாலும் தேவர்காள் நீங்கள் அனைவர்களும் அதிசயத்தை அடைய அழகாகச் சொன்னேன்.*

திண்ணிதாக இதயத்தை மீளும்வகை செய்து சிந்தனை எலாம்அறப்
பண்ணினால் அறிவிலாமை என்றுவரும் பாவகத்தையும் ஒழித்திடக்
கண்ணதாய் நிகழும் அக்கணன்றி எதிர் காணொணாது பிறிதென்னவே
நுண்ணிதான பொருள் சொல்லினான் அதுமெய் நோக்கினால் அடைய வாக்கினான்
30

**பொழிப்புரை:** *உறுதியாக இதயத்தை மீளும் வகை செய்து கவலைகளை எல்லாம் ஒழியச் செய்தால் அறியாமை என்று வரும் பாவனையையும் பிரகாசிக்கும். அந்தக் கண்ணைத் தவிர நேராக வேறொன்றால் பரமசிவனைக் காணக்கூடாது என்று படைப்பவனாகிய பிரம்ம தேவன் அந்தப் பிரம்மத்தை ஞானக் கண்ணால் அமரர்கள் அடையும்படி சூக்குமமாகிய பொருளை உரைத்து அருளினான்.*

**சாந்தோக்கிய உபநிடத தாற்பரியம் உரைத்த ஆறாவது அத்தியாயம் முற்றிற்று.**

**ஏழாவது அத்தியாயம்**

# முண்டக உபநிடதத்து தாற்பரியம் உரைத்த அத்தியாயம்

**நீண்ட கேள்வியினால் கல்வியால் நெஞ்சால் நிச்சயித்து அறிய ஒண்ணாத**
**தூண்டிடா ஞானச் சுடர்தனைச் சொரூப ஆனந்தனைத் துரிசற உளத்தே**
**மீண்டு காண்பதுவே விச்சை என்று உரைப்ப தாகவே தொடங்கினன் மெய்போல்**
**ஈண்டு லோகங்கள் இறக்க உற்பவிக்க இமைப்பது விழிப்பதாம் இறையோன்.1**

**பொழிப்புரை:** *விரிவான கேள்வியினாலும், சாத்திரப் பயிற்சியாலும், மனத்தாலும் நிச்சயித்து அறியவொண்ணாத தூண்டாத ஞான விளக்கத்தை ஆனந்த சொரூபனை, குற்றமற உள்ளத்தின் கண்ணே திரும்பவும் அறிவதுவே பரவித்தை என்று சொல்வதாகக் கருதி, மெய்போல் இவ்விடத்தில் சகங்கள் அழியவும் தோன்றவும் கண்களை மூடுவதும் விழிப்பதும் உள்ளவனாகிய பிரமதேவன் ஆரம்பம் செய்தனன்.*

**எப்பொருள் களுக்கும் தோற்றமும் நிலையும் இறுதியும் தன்கணே ஆகி**
**ஒப்பிட ஒன்றும் இன்றியே என்றும் உள்ளதாய் உரை உணர்வு இறந்த**
**அப்பொருள் நேரே அறிந்தபோது எல்லாப் பொருள்களும் அறிந்ததாம் அந்த**
**மெய்ப்பொருள் தானே எப்பொருள்களுமாய் விளங்கலால் வேறிலா மையினால்.**
**2**

**பொழிப்புரை:** *எப்பொருள்களுக்கும் தோற்றமும் நிலையும் இறுதியும் தன்னிடத்தே உண்டாகியும், ஒப்பிட ஒன்றும் இன்றி எக்காலமும் அழிவற்று இருக்கின்றதாயும் வாக்கு, மனங்களுக்கு அப்பாற்பட்டு இருக்கிற அப்பொருளை நேரே அறிந்த போது எல்லாப் பொருள்களும் அறிந்ததாகும். அந்த மெய்ப்பொருள் தானே எல்லாப் பொருள்களுமாய் விளங்குதலாலும் அப்பொருள்களுக்கு வேறாக யாதொன்றும் இல்லாமையாலும்.*

**இங்குநாம் அறியவேண்டுவது இரண்டுவிச்சை அவ்விரண்டினுள் ஒன்று**
**பங்கமாம் அபரை பரைஎனப்படுவது ஒன்று அதில் பழமறை நாலும்**
**அங்கம் ஆறும் உண்மையமை இதிகாசம் ஆதிகள் அபரையாம் மற்றது**
**எங்குமாய் நின்றதொன்றை யாதொன்றால் எய்தலாம் அது இறையருளால். 3**

**பொழிப்புரை:** *இவ்விடத்தில் நாம் அறிய வேண்டியது இரண்டு வித்தைகளாகும். அந்த இரண்டு வித்தைகளுள் ஒன்று, குறைவாகிய அபரவித்தை ஆகும். ஒன்று பரவித்தை எனப்படும் அவற்றில் அனாதியான நான்கு வேதங்களும், ஆறு அங்கங்களும், உண்மையமைந்த இதிகாச முதலியவைகளும் அபரவித்தையாகும். பரவித்தையானது இறையருளால் யாது ஒன்றை அடையலாமோ அதுவே ஆகும்.*

காணஓர் உருவும் இன்றியே தனக்குஓர் கண்செவி மூக்குவாய் இன்றிப்
பாணி பாதங்கள் இன்றி நுண்ணியதாய்ப் பற்றிய பொருளெலாம் கடந்து
தாணுவாய் எல்லாம் தோன்றுதற்கு இடமாம் தத்துவந் தன்னைத் தன்னாலே
ஆணியாய் அறிவும் அறிவது பிச்சை ஆவது பிறதெலாம் அவிச்சை. 4

**பொழிப்புரை:** *பார்ப்பதற்கு ஒரு உருவமும் இல்லாததாகவும் தனக்கு ஒரு, கண் காது மூக்கு வாய் இவைகள் இல்லாததாகவும், காய் கால்கள் இல்லாததாகவும், நுண்ணியதாகவும், பற்று இன்றி எல்லாப் பொருள்களையும் கடந்து சிவமாயும் ஆகாயம் முதலிய யாவும் தோன்றுவதற்கு இடமாகி உள்ள அந்தத் தத்துவத்தைத் தன் சுபாவத்தாலே மேன்மையாய் அறியப்பட்ட அறிவே பரவித்தை ஆகும். மற்றவை எல்லாம் அபரவித்தை ஆகும்.*

சிலந்தி உமிழ்ந்து விழுங்குவது எப்படி தேகத்தே
மலந்தரு கேச உரோமமது எப்படி மண்ணிற்கே
பலம்தரு ஓடதி எப்படி அப்படி ஈசன்பால்
அலர்ந்து அதுஅடங்கல் வெறும் கனவொக்கும் அது ஆயுங்கால். 5

**பொழிப்புரை:** *சிலந்திப் பூச்சியானது நூலை உமிழ்ந்து மறுபடியும் புசிப்பது எவ்வாறோ உடலில் அழுக்கைக் கொடுக்கின்ற சிகை முதலிய உரோமங்கள் எவ்வாறோ, மண்ணுக்குப் பலனைத் தருகின்ற தானியம் முதலியவை எவ்வாறோ, அவ்வாறே ஈசனிடத்தில் தோன்றி அவ்வுலகங்கள் ஒடுங்குதல் ஆராய்ந்து பார்க்கும் போது வெறும் கனவை ஒக்கும்.*

பன்னிதவத்திரள் உற்றபரத்திடையே முன்னம்
அன்னம்எழுந்து அதனின்று பிராணன் மனம்கன்மம்
தன்னிலுறும் பாலலோகமும் வந்தது தாவில்லா
இன்னமுது என்றுணர் முத்தியும் வந்தது இதன்கண்ணே 6

**பொழிப்புரை:** *சொல்லுகின்ற தவக்கூட்டம் பொருந்திய பிரம்மப் பொருளினிடத்தில் முதலில் அன்னம் உண்டானது. அந்த அன்னத்திலிருந்து பிராணனும் மனமும் அதில் பொருந்திய நானா உலகங்களும் தோன்றியது. குறைவில்லாத இனிய அமுதம் என்று உணரத் தக்க முத்தியும் இந்தப் பிரம்மத்தினிடத்தே தோன்றியது.*

யாதும்உணர்ந்து எவையும் செய்யவல்லவன் யார்யாவன்
போதமயம் தவமாவுடையான் படிவம் பேர் அன்ன
ஆதிகள் அங்கண் நிகழ்ந்தது அடங்கலும் நாநாவாய்
ஆதிவரும் பிரமம் கனவொக்கும் இது ஆயுங்கால் 7

**பொழிப்புரை:** *எல்லாவற்றையும் அறிந்து எல்லாவற்றையும் செய்ய வல்லவன் எவனோ, எவன் ஞானமே தவமாவுடையவன். அப்பிரம்மத்தினிடத்தில் உருவமும் பெயரும் அன்னம் முதலியவைகளும் பலவிதமாக உண்டாகி விளங்குகிறது. இரணிய கருப்பன் என்னும் பிரமமும் முதன்மையாக உண்டாவன். இதனை ஆராய்ந்து பார்க்கும் காலத்தில் கனவுக்குச் சமானமானதாகும்.*

அக்கரமாகி மெய்ம்மையாய் உள்ள அப்பொருள் அறிந்துபோது அல்லால்
எக்கருமங்க ளாலும் வீடில்லை யாக மாதிகள் இயற்றும் கால்
துக்கரமாகி அணித்தமாயப் பேறும் சுருக்கமாய் இருக்க மற்றிவற்றைத்
திக்கறியாதே முயல்பவர் முத்தி செறிந்திடார் மரணமே செறிவார் 8

**பொழிப்புரை:** *அழிவு இல்லாததாயும் சாத்தியமாயும் உள்ள அந்த பொருளை அறிந்தபோது அல்லாமல் எந்தக் கருமங்களாலும் மோட்சம் இல்லை. யாகம் முதலியவை செய்யும் காலத்தில் அவைகளால் பெறுகின்ற சொர்க்க பதவியும் கிடையாத தாயும் நிலையற்றும் அற்பமாகவும் இருக்கவும். இந்த யாகாதிகளைச் செய்யத் திசை தெரியாமல் முயற்சி செய்பவர்கள் மோட்சத்தை அடையமாட்டார்கள். மரணத்தையே அடைவார்கள்.*

கரும தற்பரராய் நாங்களே எல்லாம் கற்றவர் என்றிருக் கின்ற
பெருமித முடையார் மூடரே பிறவா நெறியையும் பெருகிலார் பிறவிக்
குருடர் கைப் பற்ற போகிய குருடர் குழியிலே கூட வீழ்வதுபோல்
மருவிய வினையும் தாங்களும் கூட மாய்வதே அன்றி மற்றிலையே 9

**பொழிப்புரை:** *கர்மநிஷ்டர்களாகிய யாங்களே சாத்திரங்கள் அனைத்தையும் கற்றவர்கள் என்றிருக்கின்ற செருக்குடையார் மூடர்களேதான். முத்தி மார்க்கத்தையும் பெறமாட்டார்கள். பிறவிக் குருடருடைய கையைப் பிடித்துக் கொண்டு போகிற குருடரும் கூடவே பாழும் கிணற்றில் விழுவதுபோல பொருந்திய கருமமும், கர்ம அபிமானிகளாகிய தாங்களும் ஒன்றாக மடிவதே அன்றி வேறில்லை.*

தொலையு நல் வினைப்பயன் தொலைந்த போதிலே
தலையது கீழுற விழுகை தப்புமோ
நிலையுறு முத்தி நேர்படுதல் நெஞ்சிலே
அலைவறு ஞானம் உண்டாகில் அல்லவோ 10

**பொழிப்புரை:** *இவ்வாறு நல்வினைப் பயனும் தொலைந்துவிடும். அது தொலைந்த காலத்தில் சொர்க்கம் முதலிய உலகங்களினின்றும் தலைகீழாக விழுகை தப்புமோ. மனத்தின் கண்ணே சலனம் இல்லாத சொரூப ஞானம் உண்டானால் அல்லவா திரமாகிய மோட்சம் பொருந்துவது.*

சுருதியும் மிருதியும் சொன்னவாறு நின்று
இருமையும் அனித்தமென்று ஏதும் விட்டு நல்
குருவினை வழிபடில் கோதிலா அவன்
அருளிடும் அழிவற நின்ற அப்பொருள் 11

**பொழிப்புரை:** *வேதமும் மிருதியும் சொன்ன வழி நின்று, இகபரம் இரண்டும் நித்தியமல்ல என்று அவை அனைத்தையும் விடுத்து சற்குருவை சரணடைந்தால் குற்றமில்லாத அந்தக் குரு அழிவில்லாத தாகிய அந்தப் பரவித்தையை அருள் செய்வான்.*

எங்கு நிறைந்த பரத்தினில் லோகம் எழுந்து அழியும் படிதான்
அங்கி எழும் பொறி போலும் அகம் புறம் ஆயது மாயை யெனும்
கங்குல் கடந்து உயிருக்குயிராய் ஒருகால் அழிவற்று அகமாய்
அங்கு பிராணன் மனங்கள் அறும் சிவனாகிய அக்கரமே 12

**பொழிப்புரை:** *எவ்விடத்தும் பூரணமாய் நிறைந்த பிரம்மத்தில் லோகம் எழுந்து அழியும் தன்மையானது அக்கினியிடத்தில் உண்டாகிற பொறிகளைப் போலாகும். உள்ளும் வெளியும் வியாபித்திருப்பதும் மாயை என்று சொல்லப்பட்ட அந்தகாரத்தைக் கடந்து உயிருக்கு உயிராகி ஒருகாலத்தும் அழிவில்லாமல் அகம் பதமாகித் தேகம் பிராணன் புத்தி சித்தம் அகங்காரம் என்னும் இவைகள் இல்லாத பரமசிவனாகிய அட்சரப்பொருளே தான்.*

அங்கிதலை வாய் விவிதமான மறை பானு
திங்கள் விழி எண்டிசைகளும் செவிகள் வாயு
தங்கும் உயிர் தன்னிதயமே சகலமும் கால்
இங்கு அவனி சங்கரன் இருக்கும் வடிவம் ஈதால் 13

**பொழிப்புரை:** *நெருப்பு என்னும் வானுலகு சிரமாகும் வாக்கு பலவிதமான வேதங்களாகும். சந்திரனும் சூரியனும் கண்களாகும் எட்டுத் திசைகளும் காதுகளாகும். காற்று தங்கி இருக்கிற பிராணன் ஆகும். தனது இருதயமே எல்லா உலகங்களுமாகும். பாதங்கள் இவ்விடத்தில் பூமியாகும் இதுவே சங்கரன் இருக்கும் வடிவாகும்.*

அர்க்கன் மதி அங்கி மழை ஆதிமறை நாலும்
மிக்குமிகு யாக விவிதங்கள் இயமானர்
தக்கணை சுரஅசுரர் மனித்தர் பசுசாதி
எக்கிருமி கீடமும் எழும் சிவனிடத்தே. 14

**பொழிப்புரை:** *சூரியனும் சந்திரனும் அக்கினி மழை முதலாயினவும், நான்கு வேதங்களும் மிகுந்த பலவித யாகங்களும் இயமானரும் தட்சணைகளும், தேவர்கள், அசுரர்கள், மனிதர்களும், பசு சாதி பூச்சி புழுக்களும் சிவனிடத்தே எழும்.*

மெய்ம்மை விரதம் தவம் விழுப்பம் முதலாகும்
செம்மைதரு நல்வினைகள் செய்து அனுபவிக்கும்
இம்மை மறுமைப்பயன் அனைத்தும் இறைவன்பால்
பொய்ம்மை அறவே நிகழினும் கனவு போலாம். 15

**பொழிப்புரை:** *சத்தியமே விரதம் தவம் விழுப்பம் முதலாகும் செம்மை தரு நல் வினைகள் செய்து அனுபவிக்கும் இம்மை மறுமைப் பயன் அனைத்தும் இறைவன்பால் உண்மை யாகவே நிகழ்ந்தாலும் கனவு போலாம்.*

வரக்கடவது எப்பொருளும் முன்பு வருமாபோல்
உரைத்த பரனே அடையவாகி ஒளிர்கின்றான்
அரிக்கும் முனிகட்கும் அரனுக்கும் அறிவுஈதே
இருக்கும் ஐயம் ஒருகாலும் இதில் எய்தா. 16

**பொழிப்புரை:** *முன் உற்பவித்தவாறுபோல் மற்றும் உற்பவிக்கப் படுகின்ற எப்பொருளும் சர்வ சாட்சியான பரமசிவனே சகல சமுகமாய் விளங்குகின்றான். அப்படி இருப்பதில் அரிக்கும் முனிவர்களுக்கும் அரனுக்கும் அறிவு இதே ஆகிய இவ்வித நிருபணத்தில் சந்தேகம் ஒருபோதும் அடையதாகும்.*

மருவிவரும் மாயை விட மயலால் இம் மனிதர் மரணஆதி இடர்அறா
வெருவு பவவேலை விழுவர் அழியாத விமல சிவஞான விழிபெறார்
ஒருபிரம ஞானம் ஒழிய ஒருகால் இவ்உத்தி கரையேற ஒணுமதோ
தெருள்செய் சிவஞானம் வருவது இறைதாள்கள் செறியவரு சேவை வலியினால்.
17

**பொழிப்புரை:** *பொருந்தி வருகின்ற மாயையினுடைய விஷமாகிய மயக்கத்தினால் இந்த மானுடர்கள் மரணம் முதலிய துன்பம் நீங்காத அஞ்சத்தகுந்த பிறவிக் கடலில் விழுவார்கள். நாசம் இல்லாத பரிசுத்தமான சிவஞானக் கண்ணனை அடையார்கள் ஒப்பற்ற பிரம்ம ஞானத்தைத் தவிர, ஒரு காலத்திலும் இப்பாவக் கடலில் கரையேறக் கூடுமோ! கூடாது. தெளிதலைச் செய்கின்ற சிவஞானமானது பரம சிவத்தின் பாத தாமரைகளை இடைவிடாமல் வரும் தரிசனம் செய்கின்ற வலிமையினால் வருவதாகும்.*

அக்கரம்தனை இக்குரம்பையில் அறியுமாகில் அவிச்சையாம்
இக்கிரந்தி நசிக்கும் ஈசனை எய்தலாம் அமுதென்பதும்
புக்கிறந்த பிராணனும் மனமாவதும் பரபோதமே
மிக்கிருந்த உளத்தினோர் விரகால் இதுஉள்முக மேவுவார். 18

**பொழிப்புரை:** *இந்த உடலில் உள்ள குகையில் வைக்கப்பட்டிருக்கின்ற அட்சரப் பொருளை அபரோட்சமாய் அறிவானாகில், அவனுக்கு அவித்தையாகிய இந்த முடிச்சானது அவிழும் பரமசிவனை அடையலாம். மோட்சம் என்பதும் உடம்பினுள் புகுந்திருந்த பிராணன் என்பதும் மனம் என்பதும் அட்சரப் பொருளே ஆகும். பெருமையின் மிகுந்திருந்த மனத்தை உடையவர்கள் உணர்வினால் இது உள்ளத்தில் புகும்படி பொருந்துவார்கள்.*

தாரம்வில் கணைதான்இலக்குஉள தத்துவம் தவறாதவாறு
ஆர்குறித்து எயவல்லார் அப்பொருளில் குளிப்பவர் எங்குமாம்
பேரிலக்கு எயும் வில்லி அப்படி பேசுநற்கருணை எங்கணும்
கூர்முகத்தது இலக்கில்அம்பு குளிக்கை ஐயுறல் கூடுமோ. 19

**பொழிப்புரை:** *பிரணவமானது வில்லாகவும், ஆன்மாவானவன் அம்பாகவும் இலக்கு என்றும் உள்ள பிரம்மம் ஆகவும் செய்து, தப்பாதபடி யார் குறித்து ஏவவல்லார்களோ அவர்கள் அந்த லட்சியப் பொருளில் தாதான்மியத்தை அடைபவர் ஆவார்கள். பெரிய லட்சியம் எங்கும் வியாபகம் ஆகும். அம்பை எய்கின்ற வில்லை உடையனும் அவ்வண்ணமே வியாபகன். பேசுகின்ற நல்ல அம்பும் எங்கும் கூர்முகத்தை உடையது. ஆகையினால், பிரம்மமாகிய லட்சியத்தில் ஆன்மாவாகிய அம்பானது தாதான்மியத்தை அடைவதில் சந்தேகப்படுதல் கூடுமோ.*

அரணியோடு உத்தராரணி உயிரும் அமல ஓங்காரமும் ஆக்கிக்
கரணிய தியானமாம் மதனத்தால் காணொணா ஒளியினைக் காண்பர்
புரணநல் லொளியில் பூதபௌதிகங்கள் பொருள்துயர் புலங்கள் மற்றெல்லாம்
அரணுறக் கோவை ஆகியே கிடக்கும் அதனையே அறிகுவன் அறிஞன். 20

**பொழிப்புரை:** *அதர் அரணியோடு உத்தர அரணியாய் உள்ள தானான ஆன்மாவையும், நின்மலமான பிரணவத்தையும் செய்து செய்யப்பட்ட தியானமாகிய கடைதலால் காணொனா தேவனைக் காண்பார்கள் பூரணமாகிய நல்ல ஒளியில், பஞ்ச பூத பௌதிகங்களும் உடலில் பொருந்திய இருக்கின்ற பிராணனும் ஐம்புலன்களும் ஆகிய இவை அனைத்தும் அழகாகக் கோக்கப்பட்டிருக்கும். அதனை அறிவுடையவன உணர்வான்.*

பரம்பொருளினையே பாடுவான் வேறு பகருவான் அலன் பருகு அமர்ந்த
வரம்பதுஆகும் மண்ணில் மற்றுஇந்த மகிமையே உள்ளது இப்பிரம
புரந்தனில் இதயஆகாசமா நிகழ்ந்து எப்பொருள்களும் அறிந்து எலாம்வல்ல
அரன்தனை வெறு நல்லஆனந்த வடிவாய் அறிந்தவர் மறுபிறப்பு அறுவார். 21

**பொழிப்புரை:** *பரம் பொருளினையே பாடுபவன் வேறு ஒன்றையும் பகரமாட்டான். பருகக்கூடிய அமிர்தமாகிய மோட்சத்தின் வரம்பு அப்பொருளே ஆகும். பூமியின்கண் பிரம்மத்தினது இம்மகிமையே பிரசித்தமாக விளங்குகிறது. இந்தப் பிரமபுரத்தில் சிதாகாசமாக விளங்கி எல்லாப் பொருள்களையும் அறிந்து எல்லாம் அறிந்தவனாகிய ஈசனை, கேவலம் நல்ல ஆனந்த வடிவாகவே உணர்ந்தவர்கள் மறுபிறவியை நீக்குவார்கள்.*

இதயமாம் இந்த விமலகோசத்தே விரசமாய் விளங்குநற் பிரமம்
துதையவேவிடும் அச்சோதியே எல்லாச் சோதிக்கும் சோதியாவதுவும்
இதயமே நிகழும் இதனை மெய்கண்ட இடத்தில் மற்று இதயநோயெல்லாம்
சிதையும் ஐயுறவும் தீரும்எவ்வினையும் செய்யினும் செய்திலனா மால். 22

**பொழிப்புரை:** *இதயமாம் இந்த நின்மல கோசத்தில் அவித்தை முதலிய பலமில்லாததாகப் பிரகாசிக்கும் நல்ல பிரம்மமாவது நீங்காமல் பொருந்தி நிற்கும். அச்சோதியே எல்லா ஒளிக்கும் பிரகாசிக்கச் செய்வதும், சகல இருதயங்களிலும் பிரகாசிக்கின்ற காரண காரியங்களாய் நின்ற சிவத்தை உள்ளபடி அறிந்த மாத்திரத்தில் இருதயத்தில் கிரந்திபோல் இருக்கின்ற அவித்தையின் வாசனை அனைத்தையும் நசிக்கும் ஐயமும் தீரும். எக்கருமங்களை செய்தாலும் செய்யாதவன் ஆவான்.*

இலங்கு இரவி இந்து அனல்தாரகை மின்எல்லாம்
நலம்பெற விளங்குவது ஞானவொளி கொண்டே
புலம்படு அனைத்தையும் விளக்கு பரபோதம்
துலங்குவது தன்னுடைய சோதிஅதனாலே. 23

**பொழிப்புரை:** *ஞான ஒளியைக் கொண்டே ஒளிர்கின்ற சூரியனும் சந்திரனும் அக்கினியும் விண்மீன்களும் மின்னலும் நன்மை பெறப் பிரகாசிக்கின்றனவாம். புலன்களில் படுகின்ற அனைத்தையும் ஒளிர வைக்கின்ற ஞான சொரூபமானது தன் ஒளியினால் ஒளிர்கிறது.*

ஓரொளி விளங்குகிலது ஊதை உலவாத
சீரொளியில் வேறுசில தேவர் திகழ்வரோ
பார்வெளியும் எப்பொருள்களும் திசைகள் பத்தும்
பேரொளி பெறத்திகழ் பரப்பிரம மேயாம். 24

**பொழிப்புரை:** *ஒரு பிரகாசமும் விளங்கமாட்டாது. வாயுவும் செல்லாது. சிறப்பினை உடைய சிவப் பிரகாசத்தில் மற்றுமுள்ள சாமானிய தேவர்களும் பிரகாசிப்பார்களோ பூமியும் ஆகாயமும் எல்லாப் பொருள்களும் பத்துத் திசைகளும் பேரொளியாய்த் திகழ்கின்ற பரப்பிரம்மமே ஆகும்.*

இந்த உடம்புஉறை சீவ பரங்கள் எனப்படும் அன்னம் இரண்டு
அந்த இரண்டிலும் ஒன்று வினைப்பயன் அங்கு நுகர்ந்திடுமாம்
தொந்த மறும் பரம் ஒன்றும் உணாது சொலப்படு பேதமும் வான்
வந்த கடத்தில் அகப்படு பேதம் எனப்படும் மாயையினால். 25

**பொழிப்புரை:** *எந்த உடம்பில் சீவன் ஈசன் என்று சொல்லப்பட்ட இரண்டு அன்னப்பட்சிகள் இருக்கின்றன. அந்த இரண்டுகளிலும் ஓர் பறவையானது தேகத்தில் கர்மபலத்தில் அவ்விடத்தில் புசிக்கின்றதாகும். தொடர்பு இல்லாத ஈசன் என்னும் மற்றோரு பறவை ஒன்றும் புசியாமல் சாட்சியாய் விளங்குகிறது. மாயையினால் சிவ ஈசர் என்று சொல்லுகின்ற வேற்றுமையும் ஆகாயம் கடத்தில் பிரவேசித்த காலத்தில் கூட ஆகாசம் என்று பெயர் வந்த பேதம் போலாகும்.*

தற்பரன் உருவம் சித்தே தற்பரன் இடையேஅக்
கற்பித சீவன் தானும் அதானக்கால் அந்தச்
சிற்பொருள் ஒன்றே வேறெனின் மற்றுது சித்தாமோ
அற்பமும் வேறாகாது சிதாகா ரத்தாலே. 26

**பொழிப்புரை:** *ஈசனது உருவம் சித்தே ஆகும். ஈசனிடத்தே அந்தக் கற்பிதமான சிவனும் அந்தச் சித்தே ஆன காலத்தில் அந்தச் சித்தாகிய பொருள் ஒன்றே தான். பின்னமாகக் கூறிடில் அது சித்து ஆகாது. சித்துத் தன்மையாலே கிஞ்சித்தேனும் பின்னமாகாது.*

பன்னு சடாகாரப் புணர்வாலே பரசீவர்
பின்னர் எனில் போதத்துஒரு பேதம் பிறவாது
மன்னு சடத்தே பேதம்மதத்தால் மானத்தால்
சொன்ன அபேதப்பொருள் கலர்கண்ணில் தோன்றாதே. 27

**பொழிப்புரை:** *சொல்லப்பட்ட சட உருவ சம்பந்தத்தால் சீவ ஈசர்கள் பேதம் உடையவர்கள் என்றால் போதத்தொரு பேதம் பிறவாது. நிலைபெற்ற சடத்தினிடத்தே பேதம் பிறக்கும். தருக்கத்தாலும் பிரமாணத்தாலும் சொல்லப்பட்ட பேதமில்லா வத்துவானது பாவிகளது கண்ணில் தோன்றாது.*

மறையாலும் மிருதிசொலும் வழியாலும் வருவதுஅவிர்
இறையார்தம் அருளில் வருவது வேகமெனும் உணர்வு
பிரிவானது அறும்உணர்வு பெறுமாகில் ஒருபொழுதும்
இறவாதசிவம் அடையும் இடர்மோகம் எவையும் இலன். 28

**பொழிப்புரை:** *ஏகம் என்னும் உணர்வு மறையாலும், மிருதியினால் சொல்லப்பட்ட ஆசாங்களாலும் வரத்தக்கது. சுயஞ்சோதியாகிய இறைவனது அருளில் வரத்தக்கது. இந்தப் பின்னம் இல்லாது போகும் ஞானத்தை அடைந்தானானால் ஒருக்காலும் அழியாத சிவத்தை அடைவான் துன்பம் மோகம் முதலிய எவைகளும் இல்லாதவன் ஆவான்.*

திதம்ஆவி உடலுறைய இறைமாயை செயலின்உயும்
விதம்நாட அரியகடல் விழும்வேறு படஉணர
இதுநாளும் வரும்இறைவன் உருவாகும் இலதெவையும்
அதுநானென அனுபவம் அது அடைவோன் ஓரலைவுமிலன். 29

**பொழிப்புரை:** *பரமசிவன் இவ்வுலகில் இருக்கவும் நிலைபெற்ற இச்சீவன் மாயையின் செய்கையினால் கரையேறிப் பிழைக்கும் வண்ணம் கருத முடியாத கடலில் வீழ்வான் தனக்கு வேறாகச் சிவனை அறியில் இப்பவக்கடல் எந்நாளும் வரும். உண்மை இல்லாத அனைத்தும் பரமசிவ சொரூபமாகும். அச்சிவமே யான் என்னும் அனுபவத்தை அடைவான் ஒரு சோகமும் இல்லாதவன்.*

சின்மயமாகும் தன்மகிமாவைத் தீரஅறிந்தான் யாதொரு போதுஅத்
தன்மையனாகும் தன்னை அகர்த்தாவாய் முழுதுக்கும் தானிஇடமாகிப்
பொன்மயனாகும் பூரணனாய் அப் போதெதிர் காணும் புண்ணியகோடிப்
பன்மையி னாலும் தர்க்கொடு மானப் பார்வையினாலும் பரனருளாலும். 30

**பொழிப்புரை:** *சின்மாத்திரமாகிய தனது மகிமையை எக்காலத்தில் முற்ற உணர்ந்தானோ அத்தன்மை உடையவனாகிய தன்னை கருத்திருத்துவம் இல்லாதவனாகவும் எல்லாவற்றிற்கும் தான் இருப்பிடமாகி பொன் போன்ற மேனியை உடைய பூரணனாயும், அப்போது முன்னியற்றிய அனேக கோடிப் புண்ணிய மிகுதினாலும், தருக்கத்துடன் பிரமாணமாகிய வேதப் பார்வையினாலும் சிவப்பிரசாதத்தாலும் நேராகக் காண்பான்.*

பாவபுண்ணியங்கள் இரண்டையும்உதறிப் பற்றுதல் ஒன்றோடும் இன்றி
யாவையும் தானாய் வேறிலாதவன் ஒப்பெய்தும் மற்று இப்பொருளறிந்தான்
சீவனும் பரனும் சின்மயமாகும் ஆதலால் ஒப்பெனச் செப்பல்
மேவி ஒன்றாகி விடுதலே அன்றி வேறுவேறாகுமோ வீடு. 31

**பொழிப்புரை:** *இந்த பொருளை அறிந்தவன் பாவ புண்ணியங்கள் இரண்டையும் உதறி, ஒரு பொருளோடும் பற்றுதல் இல்லாமல் யாவையும் தானாய் வேறு ஒரு பொருளும் இல்லாதவன் ஒப்பு எய்துகிறான். சீவனும் சிவனும் சின்மாத்திரமாகும். ஆகையால், ஒப்பு எனக் கூறுதல், ஒன்றாகி மேவி விடுத்தலே அன்றி மோட்சமானது ஒன்றுக்கொன்று வேறாகுமோ? ஆகாது.*

**உடம்புடன் புணர்ப்பால் சீவனுக்கு இறையோடு ஒப்புஉளதென்னில் ஒப்பில்லை**
**கடம்திகழ் வானில் வானம் வேறாகக் கருதி ஒப்புரைப்பரோ ஒப்பாய்**
**விடும்திறம் கன்மத்தால் எனில் கன்மம் இறக்குமே விச்சையால் என்னில்**
**திடம்பட முன்பே உள்ளதே ஞானம் திகழ்த்துவது அல்லது செய்யா. 32**

**பொழிப்புரை:** *உடம்புடன் உள்ள சம்பந்தத்தால் சீவான் மாவுக்கும் பரமான்மோவோடு ஒப்பு உள்ளது. என்னில் ஒப்பில்லை கடாகாசத்தினைக் காட்டிலும் மகாகாசத்தை வேறாகக் கருதி சமமாகச் சொல்லுவார்களோ! ஒப்பாகும் தன்மை கருமத்தால் கூடுமென்றால் கரும சாத்தியம் எல்லாம் நசிக்கும். ஞானத்தினால் ஒப்பாகும் என்னில் திடம்பட அந்த ஒப்பு முன்னமே இருக்கின்றது. ஞானமானது பிரகாசிக்கச் செய்வதே அன்றி ஒரு பொருளை உண்டாக்க மாட்டாது.*

**எப்படியாலும் பண்டும் இப்போதும் எப்பொழுதும் சிவசீவர்க்கு**
**ஒப்புளதாகும் உருவம் ஒன்றான உண்மையால் வேறுறாது என்றே**
**அப்படி உள்ள சிவன்பிறர் போல அவிச்சையால் நிகழும் அவ்வவிச்சை**
**மெய்பர விச்சையால் நசித்து ஒன்றாய் விடுதல் ஒப்படைதல் வேறன்று. 33**

**பொழிப்புரை:** *எப்படியாலும் சீவனுக்கும் சிவனுக்கும் ஒப்பு உளதாகும் உருவம், முன்னும் இப்பொழுதும் எக்காலத்தும் ஒன்றான உண்மையால் வேறுபடாத ஒன்றேதான். அவ்வாறு உள்ள சிவனானவன் பிறர்போல அவித்தையால் தோற்றுகிறான். அந்த அவித்தையானது உண்மையான பரவித்தையினால் நசித்து சீவ ஈசர்கள் ஒன்றாவதுவே ஒப்பு அடைதலாகும். இதுதவிர வேறல்ல.*

**சீவன் தன்னுருவான சிவத்தைத் தெளியில்தான்**
**மேவும் பலதொழில் தன்னிடையாக விளையாடும்**
**யாவும் தன்னுருவாகி நிகழ்ந்தால் இவன் முத்தன்**
**ஆவன் பண்டு அவன் ஆகாமையின் முத்தனும் ஆகான். 34**

**பொழிப்புரை:** *சீவனானவன் தன்னுருவான சிவத்தை உறுதியாய் அறிவானாயின், பொருந்துகின்ற பல தொழில்களும் தன்னிடத்தில் உண்டாகும்படி விளையாடுகின்றான். சகலமும் ஆத்ம சுபாவமாகவே பிரகாசித்தால் இந்தச் சீவன் முத்தனாவான். முன்னமே இவன் பெத்தன் ஆகாமையால் முத்தனும் ஆகமாட்டான்.*

**திரமன்னிய நற்சத்தியத்தின் செய்கையாலும் மனமென்றும்**
**ஒருமைப்படு நன்மாதவத்தின் உயர்வினாலும் ஊனமிலாப்**
**பிரமசரிய முதலாகப் பேசும் தருமம் தன்னாலும்**
**பரமாம் வேதநெறியாலும் அடையப்படும் இப்பரவித்தை. 35**

**பொழிப்புரை:** *நிலைபெற்ற நல்ல வாய்மையின் செய்கையாலும், எந்நாளும் உள்ளம் ஒற்றுமைப்படுகின்ற நல்ல மகாதவத்தின் மேன்மையாலும், ஊனமில்லாத பிரமச்சரியம் என்னும் ஆசிரமம் முதலாகப் பேசும் தருமம் தன்னாலும், உயர்வாகிய வேத வழியாலும் இச்சிவ ஞானமானது அடையப்படும்.*

வேதம் பகர்வழியே வந்தவர்கள்தம் மெய்க்குள்ளே
யாதும் பரவெளியே கண்டு உணருவது ஒன்றாம்அப்
போதம் தனை அடைவார் அங்கு ஒருகதி போய் மீளார்
ஏதும் திகழ்தருவான் எங்கு ஒழிவு செய்து ஏகும்தான். 36

**பொழிப்புரை:** *வேதத்தில் சொல்லியபடியே கடைபிடித்து வந்தவர்கள் தங்களது உடலுக்குள்ளே சகலத்தையும் சுயம்பிரகாசமாகக் கண்டு அறியப்படுவதாய், ஒன்றாகும் அந்த ஞானத்தை அபரோட்சமாக அறிந்தவர்கள் எவ்வளவேனும் அவ்விடத்தில் ஒருபோக்கு வரவும் இல்லாதவர்கள் ஆவார்கள். விளங்குகின்ற ஆகாயமானது எவ்விடத்தை நீக்கி எவ்விடத்தில் போகும் ஒருபோதும் போகாது.*

வாக்கினால் உரைக்கும் மாறிலாப் பொருளை மற்றுள புலன்களொன்றாலே
நோக்குமாறு என்னாம் கருமம் ஒன்றாலும் நுவல் தவத்தாலும் நண்ணாதே
தாக்கிலா அந்தக் கரணமது உடையார் தத்துவ ஞானநல் வழியால்
போக்கிலாது எங்கும் ஆகிய பொருளைப் புரையறக் காண்பர் எப்பொழுதும்.37

**பொழிப்புரை:** *வாக்கினால் உரைக்க முடியாத சிவத்தை வேறாய் உள்ள புலன்கள் ஒன்றினால் ஆயினும் பார்க்கும் வண்ணம் என்னாகும் ஒரு கருமத்தினாலும் சொல்லப்பட்ட தவத்தினாலும் கிட்டாது, பற்றுதலில்லாத விசுத்தமான சித்தவிருத்தியை உடையவர்கள் பிரம ஞானமாகிய நல்ல கண்ணினாலும் போக்குவரவு இல்லாமல் சருவ விபாபகமான பொருளை எப்போதும்.*

அருளினைத் திருமேனியில் தரித்தருளும் அகிலநாயகனை எப்பொழுதும்
தெருளுறத் தியானம் பண்ணும் ஏகாந்த சித்தரால் தெளிவுறும் பொருள்இப்
பொருள் இதனிடத்தே ஐவகைப்பட்ட பொருள்களும் பொருந்து நுண்மையினால்
ஒருவரும் அறியா அரியதென்று இகழாது உணர்ந்திட வேண்டும் ஈதொன்றும். 38

**பொழிப்புரை:** *தனது திருவருள் உருவமான பராசக்தியை திருவுருவில் தரித்திருந்து அருளும் அகில நாயகனான சிவபெருமானை எப்பொழுதும் தெளிவுபொருந்த தியானம் செய்கின்ற ஏகாக்கிரக சித்தம் உடையவர்களால் தெளிவுறும் பொருள் இப்பொருள். இதனிடத்தே பிராணன் முதலிய ஐந்து வகுப்பாகிய பொருள்களுமிருக்கின்றன. இந்தப்பொருள் நுட்பமாகி இருத்தலால் ஒருவரும் உணரமாட்டார்கள். அறிதற்கு அரியதென்று விட்டுவிடாமல் இந்த ஒரு பொருளை மாத்திரம் விசாரித்து அறியவேண்டும்.*

எத்தைப்பெற முயல்கின்றான் அத்தைப் பெறுகின்றான் ஆதலின் எப்போது
நித்தத்துவம் எனுமொன்றைப் பெற நினைகின்றான் அருள்தனில் நேர்பாடாம்
அத்தத்துவ முனிதன்னை பொருளதனாலும் தனது உடலாலும் தான்
பத்திப்படு மனனால் அர்ச்சனை நனி பண்ணக் கடவர்கள் திருவேண்டின். 39

**பொழிப்புரை:** *எதனைப்பெற அடைதற்கு முயற்சி செய்கின்றானோ அதனைத் தானாகவே அடைகின்றான். ஆகையால் எப்பொழுது நித்தத்துவம் பொருந்திய பிரமசொரூபம் ஒன்றினையே அடையக் கருதுகின்றான். அப்பொழுது ஞானத் திருவில் இச்சை உண்டாயின், கருணையில் மிகுந்தவனாகிய அந்தப் பிரமவித்தானவனை*

*திரவியங்களாலும் தன்னுடைய உடலாலும் பத்திப்படு மனனால் பூசனை மிகவும் செய்யக்கடவர்கள்.*

எண்ணிலாக் கல்வியாலும் இலங்கிய கேள்வியாலும்
திண்ணிதா மதியினாலும் தெளியவாராது தீர
நண்ணிய ஞானிதானே நயந்தருள் செய்யில் ஞானக்
கண்ணினால் காணலாகும் கரத்தில் அமலகம் போல. 40

**பொழிப்புரை:** *அதிக அளவிலான கல்வியாலும், ஒளி பொருந்திய சாத்திரக் கேள்வியினாலும் வலிமையாகிய அறிவினாலும் தெளிந்து அடையப் பெறாது. திடம் பொருந்திய ஞானியானவன் ஆன்மாவை அறிய வேண்டுமென்று விரும்பிக் கிருபை செய்தால் உள்ளங்கையின் நெல்லிக்கனிபோல ஞானக் கண்களால் பார்க்கக் கூடும்.*

அயர்ச்சிசேர் தவத்தினாலும் அன்னிய லிங்கத்தாலும்
முயற்சிசேர் பிரமாதத்தான் மொய்ம்பிலாத் தன்மையானும்
செயப்படா உண்மை ஞானம் தெள்ளுமா மதியாற்கால
வயத்தினால் சத்துவத்தின் வலியினால் அன்றி வாரா. 41

**பொழிப்புரை:** *செயற்படுதல் இல்லாத உண்மை ஞானமானது தெளிந்த உணர்வினாலும், பக்குவப்பட்ட காலவசத்தினாலும், சத்துவ குணத்தின் வலிமையினாலும் வருமே அன்றி, மறதி சேர்ந்த ஞானத்தினாலும், மற்றொரு லிங்கத்தாலும், முயற்சியால் உண்டாகும் பிரமாதத்தாலும், வீரியமல்லாத தன்மையாலும் வரமாட்டாது.*

இப்பரம் பரனைச்சேர்ந்தார் ஏகமாம் பொருளதாகித்
தப்பறு ஞானமெய்திச் சாந்தராய்த் தாப மாறி
எப்படி யாலும்எல்லாப் பொருள்களும் எய்திஇங்கே
அப்பொருள் தமக்குள்ளாக அவைதனக்கு உள்ளும்ஆவார். 42

**பொழிப்புரை:** *இந்தப் பிரமத்தை அடைந்தவர்கள் அத்துவிதப் பொருளாகி, தப்பில்லாத ஞானத்தை அடைந்து, சாந்தம் உடையவர்களாய்த், துன்பம் நீங்கி, எவ்வகையிலும் எல்லாப் பொருள்களும் எய்தி, அவற்றுள் தானும், தன்னுள் அவையுமாய் ஆவார்கள்.*

அந்தமா மறையால் நாடிய பொருளை அழகுற அறுதியிட்டு அல்லல்
பந்தமாம் மயல்பற்றறுத்த மாதவர்இப் பரமயோகத்தினால்எல்லாம்
வந்து மாய்விடமாய் அனைத்திலும் பரமாய் மதிக்கொணா மாயையினுடைய
அந்த காலத்தே பந்தமற்று இந்த அமுதினால் அரிய வீடடைவர். 43

**பொழிப்புரை:** *அந்த மறையால் நாடிய பொருளை அழகுற நிச்சயித்து, துன்பமாகிய மயக்கத்தை நாசம் செய்த மகாதவத்தை உடையவர்கள் இந்தச் சன்னியாச யோகத்தினால் எல்லாம் வந்து மாய்வதற்கு இடமாய் அனைத்திற்கும் மேலானதாயும், மதிக்கக் கூடாததுமாய் உள்ள மாயையினுடைய நாசகாலத்தே தொடக்கற்று இந்த அமுதினால் அரிதான மோட்சத்தை அடைவார்கள்.*

**வீடிலா வினைகள் கலைகள் மூவைந்தும் விடய இந்திய அதிபதிகள்**
**நாடு சேதனனாம் சீவன் மற்றனைத்து நாதனார் ஆலயம்நண்ணிப்**
**பாடிபே ருருவமொன்று மற்று அந்தப் பரமனே யாய்விடும் பார்மேல்**
**ஓடும் ஆறெல்லாம் உததிபுக்கு ஒன்றாய் உருவுபேர் ஒழியுமாபோல. 44**

**பொழிப்புரை:** *நீங்குதல் இல்லாத கர்மங்களும் கலைகள் பதினைந்தும், விடயங்கள் இந்திரியங்கள் இவற்றிற்கு அடிப்படையான தேவதைகளும், கருதுகின்ற சேதனனாம் சீவனும் மற்றெல்லாமும் பரமான்மாவான அதிஷ்டானத்தை அடைந்து சொல்லப்பட்ட நாமரூபம் ஒன்றும் இல்லாமல் அந்தப் பரமான்மாவாகவே ஆகிவிடும். பூமியின் கண் ஓடுகின்ற ஆறுகள் எல்லாம் கடலில் ஒன்றாய்ப் பொருள் உருவம் இல்லாததாய் விடுவது போல.*

**மிக்க நற்பிரம ஞானம் உற்ற பொழுதே வெறும் பிரமமாய் மனத்**
**துக்கம் அற்றிடுவர் தொல்லை வல்வினை துவக்குமாறு மிலர் துஞ்சிடார்**
**பொக்கமற்று ஒருவன் இச்சகத்தில் அனுபோகமா அறியுமாயின் மேல்**
**அக்குலத்தினில் ஒருத்தர் அப்பிரமவித்து அல்லர் இலர் ஆணையே. 45**

**பொழிப்புரை:** *மிக்க நன்மைதரும் பிரம்ஞானத்தை அடைந்த காலத்திலேயே பிரம்மாத்திரமாய் நெஞ்சில் துக்கம் இல்லாதவர்களாகவும், வலிமையுள்ள ஊழ்வினையாம் பாசங்கள் தங்களைக் கட்டுமாறும் இல்லாதவராயும் அழியாதவரும் ஆவார்கள். ஒரு விவேகி பொய்ம்மையை நீக்கி இவ்வுலகில் பிரம்மத்தை அபரோட்சமாக அறிவானாயின் அதற்குமேல் அவனது குலத்தினில் ஒருத்தராயினும் பிரமவித்து அல்லாதவர்கள் உண்டாகமாட்டார்கள் இது சத்தியமே.*

**சோக மோக படலத்தினைக் கடிது ஒழிப்பதாகி வெறும் உண்மையாய்**
**ஏகபோக சுகரூப மெய்ப்பொருள் எறிப்பதாகி யுள சோபனம்**
**மோகமோடும் வகை இங்கோர் நாவில் இது சொல்லலுற்று இதுதொல்லையே**
**பாகமாகிய விரோதமான பரிசுத்த நெஞ்சிடை பரிப்பதே. 46**

**பொழிப்புரை:** *சோகம் முதலிய கூட்டத்தை சீக்கிரத்தில் நீக்குகின்றதாயும், பாதிக்கப்படாத சத்தியமாயும், ஒன்றாய் அனுபவிக்கத்தக்க ஆனந்த வடிவமான சத்தியப் பொருளை விளக்குவதுமாயும் இருக்கின்ற மங்களமான மறைப்பொருளை மயக்கம் நீங்கும்படி இவ்விடத்தில் ஒரு நாக்கினால் யான் சொல்லத் தொடங்கியது தொந்தரவே தான் இப்பொருளானது பரிபாகமுற்று விரோதம் இல்லாத சத்தமுள்ள நெஞ்சினால் கிரகிக்கத் தக்கது.*

**அச்சமாகிய வெம்பிறவியை வேரோடு அறுப்பதாய் அறிதற்கு அரிதாய்**
**மெய்ச் சொரூபானந்தன் திருமேனி விளக்குவதாய் மிகுத்துள்ள**
**விச்சையின் தன்மை விண்ணவர்க்கு எல்லாம் விளங்கவே விளம்பினான் மெய்போல்**
**இச் சகமெல்லாம் படைத்த மெய்யன்பர் இதய பங்கயத்தில் வீற்றிருப்பான். 47**

**பொழிப்புரை:** *பயமாகிய கொடிய பிறவியை வேரோடு அறுப்பதாய் அறிவதற்கு அரிதாய், சத்தியனான சொரூப ஆனந்தனது திவ்விய சொரூபத்தைப் பிரகாசிக்க வைக்கின்றதாகவும், பெருமை மிகுந்துள்ள ஞான சுபாவத்தைச் சத்தியம் போல இவ்வுலகனைத்தையும் சிருட்டித்து, உண்மையான பக்தர்களது இதயத் தாமரையில் வாசம் பண்ணும் பிரமாவானவர் தேவர்கள் அனைவருக்கும் தெளிவாய்த் தெரியும்படி சொன்னார்.*

**முண்டக உபநிடதத்து தாற்பரியம் உரைத்த ஏழாவது அத்தியாயம் முற்றிற்று.**

## எட்டாவது அத்தியாயம்

# கைவல்ய உபநிடத தாற்பரியம் உரைத்த அத்தியாயம்

நனிவேத நாலு முகமாக மேவி நளின ஆலயத்தில் உறைவான்
அனுபோக மாக அருளினால் அறிந்த அவரே பரத்தை அறிவார்
தனிமேவு வார்கள் பெருஞான மாகும் இதுசாதனங்கள் உடைய
முனிமேவு வானது எனும் வேத நாலு மொழியோது மாறு மொழிவான் 1

**பொழிப்புரை:** *அத்துவிதத்தை அடைந்தவர்கள் அடைகின்ற ஞானமாகிய இதனை சாதன சதுட்டய சம்பத்து உடைய முனிவர்களால் அடையப்பட்ட மேலானது என்றும், வேதத்தில் உள்ள நான்மொழிகள் சொல்லுகின்ற பிரகாரம் பரமசிவப் பிரசாதத்தினால் பிரமத்தை அனுபவமாக அறிந்தவர்களே சொரூபத்தை அறிவார் என்று பெருமை பொருந்திய நான்கு வேதங்களையும் நான்கு முகங்களாகப் பொருத்தி பதும ஆசனத்தில் வாசம் பண்ணுகிற பிரமாவானவர் சொல்லத் தொடங்கினார்.*

ஈசன் என்று இயம்பும் ஒன்றை இப்பிறப்பு அறுப்பார் தம்மால்
மாசற அறிய வேண்டும் வருந்தியும் வருந்தி நன்றாய்
பாசமானது கெடுத்துப் பரபிரம்மத்தை நல்கும்
தேசுடை இந்த விச்சை தீர்வறத் துறந்தோர் செய்வர். 2

**பொழிப்புரை:** *ஈசன் என்று சொல்லப்படும் ஒரு பொருளை இப்பிறப்பை ஒழிக்கும் விருப்பம் கொண்ட முமூட்சுகளால் வருத்தப்பட்டேனும் நன்றாக வேதத்தை அறிந்து குற்றமற அவசியம் அறியத்தகத்து. பாசத்தை நீக்கி பிரமசொரூபத்தை அருளிச் செய்யும் பிரகாசம் பொருந்திய இந்தப் பிரவித்தையை திரத்தெளிந்த அறிஞர்கள் நீங்காமல் சேவை செய்வார்கள்.*

முத்தியின் விருப்பத் தாலும் முதலவன் நற்பாதத்தில்
பத்தியினாலும் மற்றப் பரனையே பாவிக் கின்ற
நித்தமாம் தியானத் தாலும் நிரந்தர யோகத் தாலும்
சித்தியாம் இதுசித் திக்கும் வினையினால் சித்தியாதால் 3

**பொழிப்புரை:** *மோட்சத்தை அடைய வேண்டி உள்ளத்தில் எழும் சிரத்தையாலும், பரமசிவனுடைய திருவடித் தாமரையில் வைத்திருக்கப்பட்ட அன்பினாலும், அந்தப் பரமசிவனையே பாவனை செய்கிறேன். இடைவிடாது செய்யும் தியானத்திலும், நிரந்தர*

*யோகத்திலும் சித்தியான இது அடைபெறும். கருமத்தால் ஒருபோதும் அடையப் பெறாது.*

**திரமாம் அருத்தத்தினால் மைந்தராலும் சேராது, அவற்றின் தியாகத்தினாலே**
**உரமான வேதாந்த மாவாக் கியத்தால் உற்பன்னமாம் விச்சையாம் நிச்சயத்தால்**
**பரமான அஞ்ஞான அந்தத்திலே அப் படிஞான உபதேசம் ஒன்றாலுமே இப்**
**புரமாம் உடம்புக்குளே அந்த முத்திப் பொருள்கண்டு வீடெய்துவார் இப்புவிக்கே 4**

**பொழிப்புரை:** *உறுதியாகும் தனத்தினாலும் மைந்தராலும் ஒருவருக்குப் பரவித்தை பொருந்தாது, அக்கரும முதலியவைகளினுடைய தியாகத்தினாலும், வலிமையான மகாவாக்கிய சிரவணத்தால் உண்டாக்கிய வித்தியா ரூபமான நிருணயிக்கப்பட்ட பொருளினாலும், அவ்வண்ணமே ஞானோபதேசம் ஒன்றினாலும் மேலான அஞ்ஞானத்தினது நாச காலத்திலே இந்தப் பிரமபுரமாகிய உடம்பினுள் இந்தப் பூமியின் கண்ணே அந்த முத்திரூபமான பிரமத்தைத் தானாகவே கண்டு, முத்தியை அடைவார்கள்.*

**தக்க ஞானத்தைத் தான்பெற்ற பொருட்டுத் தனியிடம் தனையடைந்து இதய**
**துக்கமே வராமல் சுகாசனத் திருந்து தோள் தலை கழுத்து உடம்பு இவை நேர்**
**ஒக்குமா ரிருத்திப் பூதிகொண் டிருந்த உடம்பையும் தூளணம் பண்ணி**
**மிக்கவாய் வருமிந் தியங்களை எல்லாம் விடயமேல் எழாவகை விலக்கி 5**

**பொழிப்புரை:** *அடையத்தக்க ஞானத்தைத் தானடையும் பொருட்டு தனியிடம் தனை அடைந்து, இருதயத்திலும் துக்கமுண்டாகாமல் சுகம் பொருந்திய ஆசனத்திருந்து தோள்கள், தலை, கண்டம், தேகம் இவைகளை நேரே சமமாக நிறுத்தி விபூதியினால் இவ்வுடலில் தூளாகப் பூசி மிகுந்து இச்சித்து வருகின்ற பொறிகள் அனைத்தையும் விடயத்தில் போகாமல் இருக்கும்படி நீக்கி.*

**பத்தியால் குரவன் பதம்பணிந்து இதய பங்கயம் தனை நினைந்து அதிலே**
**நித்தமாய் ஒருவரால் நினைப்பரிதாய் நிமலமாய் எங்கணும் நிறைந்து**
**சுத்தமாய் சாந்தமாய் அனைத்துலகும் தோற்றுதற்கு யோனியாய்ச் சுபாவ**
**சித்தமாய் அமுதாய் அருவமாய் ஒன்றாய்ச் சிற்சதானந்த மாய்ச் சிவமாய் 6**

**பொழிப்புரை:** *அன்பினால் குருவினது பாதத்தாமரையை வணங்கி, இதயக் கமலத்தைத் தியானித்து அதில் என்றும் உள்ளதாயும், ஒருவரால் நினைப்பரிதாய் நிமலமாயும், எங்கும் நிறைந்து சுத்தமாய், சாந்தமாய் அனைத்து உலகும் தோற்றுவதற்கு யோனியாயும் இயல்பாகவே சித்தித்து உள்ளதாயும் அழிவில்லாததாயும், லௌகிக உருவம் இல்லாததாயும் பரமானந்த சொரூப சிவமாயும்.*

**உரிய நால் வேதத்து ஓமெனும் பொருளாய் உள்ளதாய் உள்ள எப்பொருட்கும்**
**கரியதாய் நின்ற ஒன்றினைக் காள கண்டமும் கண்ணொரு மூன்றும்**
**பிரிவிலா மங்கை பாகமு மாகப் பேணுநற் பாவனை பெறுவான்**
**அரிதாய் அருளினால் வரும் விச்சை அதனினால் அதனையே அடையும். 7**

**பொழிப்புரை:** *ஓதுதற்கு உரிய நான்கு வேதங்களிலும் விளங்குகின்ற பிரணவப் பொருளாயும், தோற்றுகின்றதாக உள்ள சகல பொருட்களுக்கும் சாட்சியான பிரபுவாயும் விளங்குகின்ற சிவத்தை நீல கண்டமும் மூன்று கண்ணும் பிரிவில்லாத உமையை ஒருபாகத்திலும் உடையதாக வித்துவான்களால் விரும்பத்தக்க நல்ல தியானத்தை அடைகின்றவன் அருமையதாகி அருளினால் சொரூபத்தையே அடைவான்.*

தெரிவரிய சிற்கனமாய் திகழ்சிவனே தசைமுகனும்
அரியுடன் அவ்வரனும் அமரரதிபதியும் அவன்
துரிசறவே அக்கரமாய் பரமாகும் சுராட்டுமவன்
எரியும் அழல் காலனவன் இந்துவோடு பிராணனவன் 8

**பொழிப்புரை:** *தெரிவதற்கரிய சித்சொரூபமாய் பிரகாசிக்கின்ற பரமேஸ்வரனே பிரமாவும், திருமாலுடன் அந்த அரனும் அவன் தேவர்களுக்கு அதிபதியான இந்திரனும் அவன் குற்றமறவே அட்சரமாகி பரமனாகிய சுராட்டு என்பவனும் அவன். பிரகாசிக்கின்ற அக்னியும் காலனும் அவன், சந்திரனோடு பிராணனும் அவனே.*

ஒளிந்ததொரு பொருளில்லை உள்ளதெல்லாம் அவனே முன்
கழிந்த பொருள் மேலும் வரக்கடவே பொருள் தானுமவன்
மொழிந்ததனிப் பரவிச்சை அவிச்சையெனும் முற்றுமவன்
இழிந்த பிறப்பற ஓர் வழியில்லை இவனொழிய 9

**பொழிப்புரை:** *சிவத்துக்கு வேறாக ஒரு பொருளுமில்லை இருக்கின்ற அனைத்தும் அச்சிவனே முன் சென்ற பொருள்களும் இனி வரக் கடவனேவாகும். பொருள்களனைத்தும் அவனே, கூறிய ஒப்பில்லாத பரவித்தையும் அவித்தையும் என்று சொல்லும் எல்லாமே அவன்தான். இந்த இழிவான பிறப்பு நீங்குவதற்கு இச்சிவனை அல்லாமல் வேறு மார்க்கமில்லை.*

இன்னது எனாமல் தனிடைக் கண்டு தன்னை எப்பொருளிலும் காணும்
அன்னிலை அடைந்தால் அவன் பிரமத்தை அடையும் வேறொன்றினால் அடையான்
தன்னையும் ஓங்காரத்தையும் அரணி ஆக்கி அத்தத்துவ ஞான
வன்னியைத் தியான மதனம் செய்து எழுப்பும் மதியினால் வன்பவம் சேரார். 10

**பொழிப்புரை:** *இத்தன்மை உடையது என்று சுட்டி அறியாமல், சகல பூதங்களையும் தானான ஆன்மாவிடத்தில் பார்த்து தன்னைச் சகல பூதங்களிலும் பார்க்கின்ற அந்த நிலையை அடைந்தால் அவன் பிரம சொரூபத்தை அடைவான். வேறு ஒன்றினால் அடைய மாட்டான். ஆன்மாவையும் பிரமத்தையும் அரணியாக்கி அந்தத் தத்துவ ஞானமாகிய நெருப்பைத் தியானமாகிய மதனம் செய்யும் விவேகிகள் கொடிய பிறப்பை அடைவார்கள்.*

தாக்கமும் பரமன் தன்சுதந் தரத்தால் தன்னுடைய மாயை தன்னாலே
ஆக்கினேன் இந்த உடம்பு அடைந்து அறியான் போல நின்று அனைத்தையும் அதிலே
சாக்கிரத்து என்னும் இடம் வகுத்தன்ன பானமும் தையலார் முதலாம்
போக்கியங்களையும் புகுத்திடும் கனவும் பண்ணி அத்தன்மையே புசிக்கும். 11

**பொழிப்புரை:** *ஒரு பொருளொடும் தொடர்பில்லாத பரமன் தன்னுடைய சுதந்திர பலத்தால் தனக்கு வேறில்லாத மாயையாலே இந்த உடலைப் பொருந்தி மோகமுடையவன் போல நின்று சகல விவகாரங்களையும் செய்பவன் ஆகி அதனிடத்திலே சாக்கிரம் என்னும் தலத்தைக் கற்பித்து அன்னமும் பானமும் மாதர்களும் முதலாகிய போகப் பொருள்களையும் அனுபவிப்பான். கனவையும் உற்பத்தி செய்து சிவனாய் விளங்குகின்ற ஈசன் அவ்வண்ணமே புசிக்கின்றான்.*

**உறங்கும் அக்காலை மன்னிய தமத்தில் உட்புகுந்து ஒன்று ஒழியாமல்**
**இறந்த அவ்விடத்தே தன்னருவான இன்பமே புசிக்கும் மீண்டெழுந்து**
**கறங்கும்பால் நனவை அடையாயினும் அடையும் கனவை வந்து அடையினும் அடையும்**
**சிறந்த முப்புறமும் இவன் விளையாடித் திரிதரச் செய்ததே திகழ்த்தில். 12**

**பொழிப்புரை:** *உறங்குகின்ற காலத்தில் நிலைபெற்ற தமசுக்குள் பிரவேசித்து யாதேனும் ஒன்று தவறாமல், எல்லாம் இறந்த அவ்விடத்தில் தனது சொரூபமாகிய மகா ஆனந்தத்தையே புசிக்கிறான். திரும்பவும் பூர்வ கர்மயோகத்தால் சீவத்தன்மை உடையவனாகி எழுந்து காற்றாடிபோல சாக்கிரத்தை அடைந்தாலும் அடைவான் சொப்பனத்தை அடைந்தாலும் அடைவான் ஆகையினால், சொல்லுங்கால் சிறப்புப் பொருந்திய மூன்று அவத்தைகள் என்னும் புரங்களும் இப்புருடன் லீலையாக விளையாடித் திரியும் பொருட்டுச் செய்ததே தான்.*

**சொல்லிய பொருட்கள் யாவையும் கடந்து சுதந்திரனாய்த் துவக்கின்றி**
**எல்லைதீர் இன்பமே வடிவாகி இருந்துள இறைவனுக்கு என்றும்**
**அல்லல் உண்டாகாது இவை அனுபவிக்க அன்னியமாக ஓர் சீவன்**
**இல்லையே பேத மின்மையினால் சடந்தான் எங்ஙனே புசிக்குமாறு இயம்பீர் 13**

**பொழிப்புரை:** *சொல்லப்பட்ட நிலையில்லாத பொருள்கள் அனைத்தையும் கடந்து சுதந்திரனாகவும், பந்தம் இல்லாமல் அளவில்லாத மகானந்தமே சொரூபமாய் இருக்கின்ற இறைவனுக்கு என்றும் அல்லல் உண்டாகாது. இந்த அல்லல் மிகுந்த வினைப்பலனை அனுபவிக்க அன்னியமாக ஒரு சீவனில்லை பேதமின்மையால் சடந்தான் எங்ஙனே புசிக்கும் வழி, சொல்லுங்கள்.*

**ஆதலால் அறிவு ஆனந்தமாய் உள்ள அமலனே அவை புசிக்கின்றான்**
**ஈதெலாம் விளையாட்டே விளையாடும் இடங்களே இப்புரம் மூன்றும்**
**ஆதல் ஆகாமை சொல்லவும் படுமோ அதிசுந்தரனை அன்னியமா**
**ஓதலாமோ இப்புரங்களும் அவன்தன் உருவகமே வேறிலா மையினால் 14**

**பொழிப்புரை:** *ஆதலால் அறிவு ஆனந்தமாய் உள்ள நின்மலனான அரனே அப்போகங்களை அனுபவிக்கிறான். இப்போகங்கள் எல்லாம் விளையாட்டேதான். இப்புரங்களாகிய மூன்று சரீரங்களும் அரன் விளையாடும் இடங்களாகும். அவ்வரனுக்கு ஆதலையும் ஆகாமையும் ஒருவர் சொல்லவும் கூடுமோ மிகுந்த சுதந்திரனை வேறாகச் சொல்லலாமோ! பிரமத்துக்கு அன்னியமாக ஒன்றும் இல்லாமையால் இந்த மூன்று அவஸ்தைகளும் அவனுடைய சொரூபமாகும்.*

மாலுறா நனவு கனவு உறக்கங்கள் வடிவமாய் நிகழ்ந்துள இறைக்கு
ஞாலமேல் விசுவன் தைசசன் பிராஞ்ஞன் நாமமா நவிலுவர் அடையவே
தூலமே விசுவன் உண்பவன் சுருக்கம் தைசசன் தூய்ப்பவன் சுகம்தன்
பாலது ஆதலினால் தன்னுடைய இன்பம் பருகிடா நிற்குமே பிராஞ்ஞன். 15

**பொழிப்புரை:** *மயக்கம் இல்லாத நனவு கனவு உறக்கங்கள் வடிவமாய்ப் பிரகாசிக்கின்ற ஈசனுக்கு பூமியின்கண் கிரமமாக விசுவன் என்றும் தைசசன் என்றும் பிராஞ்ஞன் என்றும் சங்கேதப் பெயராகக் கூறுவார்கள். விசுவனானவன் தூலமாகிய நனவு நிலையைப் புசிக்கின்றவன் ஆவான். பிராஞ்ஞன் என்பவன் சுகம் தன்னிடத்தில் இருப்பதால் தன்னுடைய இன்பத்தையே புசிப்பான்.*

புரங்கண் மூன்றிலும் போக்கியம் யவையங்கு
இருந்து தூய்ப்பவன் யாவன் மற்று யாவையும்
பரம்பிரமம் எனும்படி பார்ப்பவன்
அரந்தை எய்திடான் ஆயிரம் செய்யினும். 16

**பொழிப்புரை:** *மூன்று அவத்தைகளிலும் புசிக்கப்படுவன எவை, அவ்விடத்திலிருந்து புசிப்பவன் யாவன் அந்த எல்லாவற்றையும் பரப்பிரம்மம் என்று சொல்லும்படி காண்பவன் ஆயிரம் போகங்களைப் புசித்தல் செயினும் துக்கத்தை அடையமாட்டான்.*

விழுமிதாமய மேதங்கள் செய்யினும்
பழிமிகும் பஞ்ச பாதகம் பண்ணினும்
ஒளிவுறாமல் ஒன்றே என்று உணருவான்
நழுவினான் அந்த நன்மையும் தின்மையும் 17

**பொழிப்புரை:** *தூயதான அசுவமேத யாகங்களைச் செய்தாலும், பழிமிகுந்த பிரமகத்தி முதலிய ஐந்து பாவங்களைச் செய்தாலும், தவிராமல் ஏகமான பிரமம் ஒன்றே என்று அறிந்தவன் அப்புண்ணிய பலத்தையும், அப்பாப பலத்தையும் கடந்தவனாவான்.*

சிவன் அன்று புரமூன்றில் சித்தாம் அவனே விளையாடும்
மேவும் எல்லாம் மெய்போல அவனால் விளைதலால் மெய் அத்
தேவனே சான்றோன் ஆதலினால் சித்தும் அவனே அத்துவிதன்
யாவும் தானதலின் எதிலும் உனையே விரும்பலால் இன்பன். 18

**பொழிப்புரை:** *அவத்தைகள் மூன்றில் சித்தாகிய பரமசிவனே விளையாடுகின்றான். சிதாபாசனல்ல. பொருந்திய எல்லாப் பொருள்களும் சத்தியம் போல அச்சிவனால் உண்டாதலால் அத்தேவனே சத்தாவான். எல்லாவற்றிற்கும் சாட்சியாக இருந்தலினால் சித்துருபனும் அந்தத் தேவனே. எல்லாமும் தானாய் இருத்தலின் இரண்டற்றவன். எல்லாவற்றினும் மேலாகத் தன்னையே விரும்புகின்ற படியால் ஆனந்த வடிவானவனும் அவனும்.*

இந்தப் புரங்கள் ஒருமூன்றும் இவன்தன் இடையே இருப்பதெனில்
தொந்தப் புருடன் அன்றவன்போல் தொன்று கின்றான் கேவலமாம்
அந்தப் பிரமமாய் அவன்தான் அறியாமையினால் அப்பரனை
பந்தப் படுமோர் சீவனெனப் பார்ப்பார் பவத்தே பதைக்கின்றான். 19

**பொழிப்புரை:** *இந்த மூன்று அவத்தைகளும் அவனிடத்திலேயே ஒடுங்கி இருப்பதென்றால் துவிதனான சீவன் அன்று. கேவலமான அந்தப் பிரமமாகிய ஆன்மாவே அந்தச் சீவன்போல் தோன்றுகின்றான். அறியாமையினால் அந்தப் பரமசிவனை கட்டுப்பட்ட ஒரு சீவன் எனக் காண்பவர்கள் பிறவிச் சமுத்திரத்தில் விழுந்து துன்பப் படுவார்கள்.*

ஈனமாகி விடும் பிராணன் மனங்கள் இந்தியம் யாவையும்
வானம் ஊதை நெருப்பு நீர் புவி மற்றும் அந்த மகத்திலே
யானதாகியும் அதுநுண்மையாம் அதுவாகும் மெய்ஞ்
ஞானம் நாடிய தத்துவம் பதமொன்றின் எய்தும் அருத்தமே 20

**பொழிப்புரை:** *இழிவாகிய பிராணனும், மனம், புத்தி, என்னும் இவைகளும், பொறிகள் எல்லாமும் வானும் காற்றும் நெருப்பும் நீரும் மண் மற்றுமுள்ள அனைத்தும் அந்தப் பிரமத்தினின்றும் உண்டானதாயினும் அப்பொருள் நுட்பத்தினும் மிகுந்த நுட்பமாகும். சுபாவமாகிய சத்து சித்தாகக் கருதுகின்ற அப்பிரமமே துவம்பதம் என்னும் பதமொன்றின்கண் அடையப்படும் பொருளாகும்.*

நீயெனும் பொருளே அதென்று நிகழ்த்திடும் பொருள் ஆவதுவும்
தூய சிற்பரமே பதங்கள் இரண்டினும் துணிவாதலான்
மாயை என்றும் அவித்தை என்றும் உபாதி பேதவழக்கினால்
ஆய கற்பித பேதமல்லது அபேதமே பொருளாவதே. 21

**பொழிப்புரை:** *நீ என்று சொல்லும் பதப்பொருளே அது என்று சொல்லுகின்ற பதப்பொருளாகி நின்றதும், நீ அது என்று சொல்லுகின்ற சொற்கள் இரண்டிடத்தும் பொருளானது சுத்த சித்தான பரமசிவமே நிச்சயமாதலால், மாயை என்றும் அவித்தை என்றும் சொல்லப்படும் உபாதியின் பேத விவகாரத்தால் உண்டான கற்பித வேற்றுமையின்றி பேதமில்லாத ஏகத்துவமே பொருளாகும்.*

ஆதாரத்தோடு அவிச்சை நாமம் அறுத்த நல்லதி காரியைப்
போதம் முற்றும் எனப் புகன்றது பொய்யிலாமறை ஐயமன்று
ஏதமற்றது நானென்றும் திடனாவனே அஃது எய்தினோன்
ஒது முத்தி அவன்தன் உள்ளனுபோகம் இங்ஙன் உதிப்பதாம். 22

**பொழிப்புரை:** *மெய்யான வேதம் அன்போடு அறியாமை என்னும் பெயரையும் அறுத்த நல்ல அதிகாரிக்கு ஞானசொரூபமே எல்லாமும் என்று உபதேசித்தது சந்தேகமே இல்லை. எவன் குற்றம் நீங்கி அந்தப் பரமசிவன் நானெனும் திடமுடையவன் ஆகின்றானோ அவன் அந்தப் பிரமத்தை அடைந்தவன். அவனிடத்தில் சொல்லுகின்ற முத்தி இருக்கின்றது இவ்விடத்தே அவனுக்கு அநுபோகம் உண்டாகும்.*

**புகலும் முப்பதத்தில் போகம் போக்கியம் புசிப்பானே நான்**
**நிகழும் இத்தனைக்கும் சான்றாய் நின்ற தற்சொரூபனே நான்**
**நிகழுவது என்பால் என்பால் நிற்பதும் இறப்ப தென்பால்**
**சகலமும் ஆதலாலே தற்பரம் பொருளா கின்றேன்** 23

**பொழிப்புரை:** *சொல்லுகின்ற மூன்று இடங்களாகிய அவத்தைகளிலும், போகமும் போக்கியமும் புசிப்பவனும் நானே. விளங்கும் இத்தனைக்கும் சாட்சியாகி நிற்கின்ற அந்தத் தத்பத சொரூபனும் நானே. எல்லாமும் என்னிடத்திலேயே உண்டாவதும் நிற்கின்றதும் என்னிடத்திலேயே அழிகின்றதும் என்னிடத்திலேயே ஆகையினால் தற்பரம் பொருளான பரமசிவன் ஆகின்றேன்.*

**அணுவினுக்கு அணுவும் நானே அப்படி மகத்தும் நானே**
**துணியில் எப்பொருளும் நானே சோதியுள் சோதி நானே**
**பணிவுறத் தகுவேன் நானே பழையனாம் புருடன் நானே**
**இணைதனக்கு இல்லா ஈசன் ஆகிய இன்பம் நானே.** 24

**பொழிப்புரை:** *அணுவுக்கும் அணுவாய் உள்ளவனும் நானே. அவ்வறே மகத்துக்கு மகத்தாய் உள்ளவனும் நானே. நிச்சயிக்கில் எல்லாப் பொருளும் நானே. ஒளிக்குள் ஒளியாய் உள்ளவனும் நானே. யாவராலும் வணங்கத்தக்கவனும் நானே. புராதனனான புருடனும் நானே. தனக்கு நிகரில்லாத பரமசிவமான ஆனந்த சொரூபமும் நானே.*

**கண்ணும் செவியும், இன்றியுமே காணக் கேட்கக் கடவேன் நான்**
**பண்ணும் தொழில் எல்லாம் வல்லேன் பாணி பாதம் இல்லெனினும்**
**எண்ணுங் கடந்த இடமிங்கே இருந்தும் செல்வேன் நானொருவர்க்கு**
**ஒண்ணும் படியன்று எனை உணர எல்லாம் உணரு கின்றேன் நான்** 25

**பொழிப்புரை:** *விழியும் காதும் இல்லாமல் இருக்கினும் பார்க்கவும் கேட்கவும் வல்லவன் நான். கைகால்கள் இல்லை எனினும் செய்கின்ற தொழில் எல்லாவற்றினும் வல்லவனும், இவ்விடத்தில் நினைவையும் கடந்த சொரூப நிலையில் இருக்கினும் எங்கும் செல்பவனும் நான். எவர்க்கும் என்னை உணர்வதற்கு நான் பொருந்தும் தன்மையன் அல்லன். எல்லாவற்றையும் அறிகின்றவனும் நானே.*

**ஓதுவேதம் பலவாலும் ஓதி உணரப் படுவேன் நான்**
**வேத வேதாந்தப் பொருள்கள் எல்லாம் விளங்க அறிவேன் நான்**
**தீது நன்றாம் வினை மரணம் சனனம் தேகேந்தியம் புத்தி**
**பூதம் ஐந்தும் இன்றி மிக மிதமாய் நானே புசிக்கின்றேன்** 26

**பொழிப்புரை:** *சொல்லுகின்ற மறைகள் பலவாலும் ஓதி அறியத்தக்கவன் நான், மறை, மறை, முடிவு ஆகியவற்றில் உள்ள பொருள்கள் எல்லாவற்றையும் நன்றாக அறிபவனும் நானே பாவ புண்ணியங்களாகிய கருமங்களும், இறப்பும், பிறப்பும், உடல் பொறிகளும் புந்தியும் ஐந்து பூதங்களும் இல்லாமல் அகந்தையும், இகந்தையுமாய் யாவையும் நானே புசிக்கின்றேன்.*

சிறப்புடைய தேசுவடிவில் திகழ்தலால் நான்
எறித்த வடிவாலும் எறியா வடிவினாலும்
நிறத்த சுடரான வடிவாக நிகழ்கின்றேன்
இறத்தலிலனான பரமீசன் அவன் யானேன். 27

**பொழிப்புரை:** *சிறப்புப் பொருந்திய ஒளிவடிவாக யான் விளங்குகின்றதென்றால் விளங்குகின்ற வடிவமாகவும் விளங்காத வடிவமாகவும் சுடரான வடிவாக விளங்குகின்றவனும் அழிவில்லாதவனான பரமசிவனும் யானே.*

எனையொழிய ஒன்றுமிலை எலாம் எனதுருவே வென்று திகழ்வதோர்
அனுபவம் வந்து விளையுமே அழிவுள தன்றி அமலமாய்
இனிதுற நெஞ்சில் உறைவதாய் இலது உளதன்றி எதுவுமாய்
அனிய மிறந்த பிரமமா அறிவுரு ஒன்றை அடையுமே 28

**பொழிப்புரை:** *என்னைத் தவிர ஒருபொருளும் இல்லை யாவும் என் வடிவம் என்று விளங்கும் ஓர் அனுபவம் ஒருவர்க்கு வந்து உண்டாகும் எனின், நாசம் இல்லாது விமலமாயும் யாவரும் ஆனந்தமடைய இதயத்தில் உள்ளதாயும் இல்லை உண்டு எனக் கூறாமல், யாவுமாயும் தனக்கு அன்னியம் இல்லாத பிரம்மமான ஞான சொரூபம் ஒன்றினை அவன் அடைவான்.*

கைவல்லிய உபநிடதம் கருணையினாலே எதுகருதிக் கூறிற்று
உய்வில்லை அனியம் ஒன்றால் என அரி பிரமாதிகள் உகவா நின்றார்
எவ்வல்லியிலுள அதிகாரிகளும் இது அறியும்படி இனிதில் சொன்னேன்
அவ்வெல்லையில் பொருள் அதிபத்தியொடு அறிவுறுவீர் அமரர்கள் அனைவீரும் 29

**பொழிப்புரை:** *மற்றொரு பொருளினால் பிழைப்பில்லை என்று கைவல்லிய உபநிடதமானது கிருபையினால் எதனைக் கருதிச் சொல்லிற்று அதனை மால் அயன் முதலியவர்கள் மகிழ்ந்தனர் எந்தப் பிரிவிலுள்ள அதிகாரிகளும் இதனை உணரும்படி பிரியமாகச் சொன்னேன் தேவர்களான நீங்கள் எல்லாரும் அந்த எல்லையில்லாத பரசிவ சொரூபத்தை மிகு பக்தியோடு அறிவீர்கள்.*

பண்டைநான் மறைகள் சொல்லிய பரிசே பரகுருவாய் இருந்துள்ள
அண்டர் நாயகளை ஆதரித்து அவன்தன் அருளினால் அனுபவமாகக்
கண்டுளோர் இருக்கும் தன்மையை எல்லாம் காதலால் வானவர்க்கு உரைத்தான்
புண்டரீகத்தே இருந்துதான் சகல பூதமும் படைத்திடும் புனிதன் 30

**பொழிப்புரை:** *தாமரைத் தவிசிலிருந்து எல்லாப் பூதங்களையும் உண்டாக்கிய தேவன், பழைய நான்கு வேதங்களும் உபதேசித்தவாறே மூல குருவாய் எழுந்திருக்கின்ற லோக நாயகனான சிவபெருமானை அன்பினால் வழிபட்டு, அவனின் திருவருளினால் சுவானுபவமாகக் கண்டுள்ளவர்களிருக்கும் இயல்பை விண்ணவர்க்கு உபதேசித்தான்.*

**கைவல்ய உபநிதட தாற்பரியம் உரைத்த எட்டாவது அத்தியாயம் முற்றிற்று.**

## ஒன்பதாவது அத்தியாயம்

# பிரகதாரணிய உபநிடத தாற்பரியம் உரைத்த அத்தியாயம்

துன்பமாம் உடம்பினின்றும் அங்கு அதனால் துவக்குறா வகைநின்ற சிவனுக்கு
இன்பமே வடிவம் ஆதலால் சொருப ஆனந்தனென்று எழின்மறை எல்லாம்
முன்பு கூறிற்று அவ்வின்பமாம் பரிசை மொழிந்திடக் கேண்மின் என்று அழகா
அன்பினால் அலரோன் அமரர்யாவர்களும் அறிய ஆதரத்தொடும் உரைப்பான்
1

**பொழிப்புரை:** *துன்பம் உண்டாகும் உடம்பில் இருந்தும் அவ்விடத்தில் தானே அவ்வுடம்பில் சம்பந்தம் இல்லாதபடி விளங்குகின்ற சிவத்துக்கு. இன்பமே வடிவம் ஆதலால் ஆனந்த வடிவானவன் என்று மறைகள் அனைத்தும் முன்பே சொல்லிற்று. அந்த இன்பத்தின் தன்மையைச் சொல்லக் கேளுங்கள் என்று அழகாக அன்பினுடன் பிரம்ம தேவர் எல்லாத் தேவர்களும் அறியும்படி சொல்லுகின்றார்.*

ஈசனுக்கு உருவு ஆனந்தமே ஆகும் ஏதெனில் யாதிலும் தன்மேல்
ஆசை வைத்திடலால் ஆசைவைத்திடும் ஆனந்தமே மிகவும் ஆனந்தம்
பாசம் வைத்திடுதல் தன்பொருட்டன்றிப் பதிபொருட்டல்லவே மனைவி
நேசம் எப்படியும் தன்னொடு ஆதலின்தான் நிரதிசய ஆனந்தம் நேரே! 2

**பொழிப்புரை:** *ஈசனுக்கு உருவமானது ஆனந்தமே தான் எதனாலெனில் அனைத்தினும் தன்னைக் குறித்து ஆசை வைத்திடலால் ஆசை வைத்திடும் ஆனந்தமே மிகுந்த ஆனந்தமாகும். மனைவி கணவனிடத்தில் ஆசை வைத்தல் தனது காமத்தின் பொருட்டு அல்லாமல் கணவன் நிமித்தமல்ல, எப்படியும் ஆசையானது தன்னோடாதலின் தானே நித்திய ஆனந்தமானவன்.*

வேதியர் அரசர் விண்ணவர் மிகவும் விரும்பிய உலகுகள் சகல
பூதமும் போக போக்கியமாகும் பொருள்களும் பொருள்களின் பொருட்டும்
காதல் செய்கின்றான் அல்லன் எப்படியும் காதல் செய்வது தனைக் காமித்து
ஆதலால் விரும்பும் தன்னொடுஆதலின் தான் நிரதிசய ஆனந்தம் ஆகும் 3

**பொழிப்புரை:** *அந்தணர்களையும் அரசர்களையும் தேவர்களையும், மிகவும் விரும்பப்பட்ட உலகங்களையும், சகல பூதங்களையும் போக போக்கியமாகும் பொருள்களும் ஆகிய இவற்றின் பொருட்டாக ஆசைப்படுவது தன்னைக் குறித்துத்தான் ஆதலினால் விருப்பம் தன்னிடத்தில் இருப்பதனால் தானே நித்திய ஆனந்தமாவான்.*

யார்க்கும் இன்பம்போல் விரும்பிடப் படலால் இன்பமே இறைவடிவு இன்பம்
தூக்கி மெய்யின்பம் பெறநினைப்பவரால் துயர்மிகும் தொழிலெலாம் விட்டுப்
பார்க்கவும் கேட்க நினைக்கவும் தியானம் பண்ணவும் படுவன் இப்பரமன்
ஊக்கி அங்கு அவனை அறியவே எல்லாம் அறிந்ததாம் ஒழிய இன்மையினால்
4

**பொழிப்புரை:** *இன்பமே எவர்களுக்கும் சுகமாக விரும்பப்படுதலால் அந்த இன்பமே இறை வடிவாகும். ஆராய்ந்து மெய்யின்பத்தை அடைய நினைப்பவரால் துக்கம் நீக்கி இந்த ஆன்மாவானவன் பார்க்கவும், கேட்கவும் நினைக்கவும், தியானம் பண்ணவும் ஆவான். அவ்வான்மாவை ஊகித்து அவ்விடத்தில் அறியவே அந்த ஆன்மாவைத் தவிர மற்றொன்று இல்லாததால் எல்லாம் தெரிந்ததாகும்.*

மத்தமுறும் பிறவிப்பகை மாளும்
முத்தியும் முன்னிலையாம் முடிவில்லா
எத்துயரும் கெடும் இன்பமதாகும்
அத்துவிதத்தை அறிந்தவருக்கே 5

**பொழிப்புரை:** *அத்துவைத ஞானத்தை அறிந்தவர்களுக்கு, மதம் பொருந்திய பிறவிப் பகை ஒழியும். மோட்சமும் தன்முன்பு நிலையாகும் முடிவில்லாத எல்லாத் துயரங்களும் அழியும் இன்பமும் உண்டாகும்.*

பின்னமுறப் பிரமத்தை அறிந்தான்
தன்னை மெய்ப்பொருள் தள்ளும் அதன்றி
மன்னும் உடம்பு வசத்தொரு வாது இங்கு
இன்ன உலோகம் எணாமல் இழிக்கும் 6

**பொழிப்புரை:** *சுத்தப் பிரம்மத்தை தனக்கு வேறாக அறிந்தவனை அந்தப் பிரம்மமும் தள்ளிவிடும் அல்லாமல் நிலைபெற்ற இந்த உலகமும் உடம்பின் வசத்தினின்றும் நீங்காமல் இருக்கும்படி இங்கு மதியாமல் தள்ளிவிடும்*

அல்லாது இல்லாப் பரந்தன்னில் அயலாய் அறியும் படிஅயர்ந்து
பொல்லா ஆகத்து அறிவுபெறும் பசுவானவனைப் புத்தேளிர்
எல்லாம் எல்லா வேதமும் பூதங்கள் யாவும் இறத்தள்ளி
நில்லா நிற்கும் பேதத்தே நிற்பான் நசிக்கை தப்பாதே 7

**பொழிப்புரை:** *பிரிவினைப் பொருளாய் இல்லாத பிரம்மத்தில் பிரிவாய்த் தெரியும்படி தன்னை மறந்து பொல்லாத உடல் அறிவுடைய ஆன்மாவைத் தேவர்கள் அனைவரும் எல்லா வேதங்களும், ஐந்து பூதங்களும் அழியும்படி தள்ளி நிற்கும் இருமையில் நிற்கின்றவனுக்கு மரணம் தப்பாது.*

மறையோர் அரசர் முதலான வன்னாச் சிரமம் மற்றுள்ள
பிறிவாய் நிகழு கின்றவெலாம் பிரமம் ஒன்று மேபிரிதா
அறியா நிற்கும் அறிவென்றும் அல்லல் பிறப்பை அடைவிக்கும்
இறைதா னான நிலையெய்தும் இரண்டும் காணாது இருந்தக்கால் 8

**பொழிப்புரை:** *வேதியர்கள், அரசர்கள் இவர்கள் முதலான வருணாச்சிரமங்களும் மற்றும் இருக்கின்ற வேறாக நிகழுகின்ற அனைத்தும் ஒன்றேயான பிரமமேதான் வேறாக அறிகின்ற புத்தியானது எக்காலத்திலும் துன்பமான பிறப்பை அடையச் செய்யும் இரண்டு என்று பாராமல் இருந்தால் பரமசிவன் தான் என்ற சுபாவத்தை அடையான்.*

அத்துவிதம் தானாம் அவிகற்பம் அடைந்த போதே
புத்தியில் இளைப்பும் போகும் இப்பிறப்பும் நேரா
எத்திகழ்வாலும் பேதம் இன்மையால் இறையே என்னும்
தத்துவ வித்தே என்றன் தலையினால் வணங்கத் தக்கான் 9

**பொழிப்புரை:** *அத்துவிதமாகிய நிர்விகற்பத்தை அடைந்த பொழுதே புத்தியில் உள்ள துக்கமும் நீங்கும் இந்தப் பிறப்பும் ஒழியும் எந்த விளக்கத்தினாலும் பேதம் இல்லாததனால் அனைத்தும் பிரம்மமே என்கின்ற தத்துவ ஞானியே நேராக எனது நான்கு தலைகளாலும் வணங்கத் தகுந்தவன்.*

வேதம் ஆகமம் புராணம் மிருதிகள் வேறா மார்க்கர்
ஓதும் ஆகமங்கள் தர்க்கம் ஒன்றோடொன்று ஒவ்வாதாகும்
ஈதெலாம் ஒக்கப் பண்ணல் ஆவதன்று இதய துக்கம்
ஆதலால் அனைத்தும் விட்டு இங்கு அனைத்துமாம் சிவனைப் பார்ப்பான் 10

**பொழிப்புரை:** *வேதங்களும் ஆகமங்களும் புராணங்களும் மிருதிகளும், புத்தர் அருகர் முதலிய மதவாதிகள் சொல்லுகின்ற ஆகமங்களும் தருக்கங்களும் ஒன்றுக்கொன்று பொருந்தாதாகும். இவைகள் எல்லாம் மனத்தில் துக்கத்தை உண்டு பண்ணும் ஆதலால் ஒன்றுபடுத்தக் கூடுவதல்ல எல்லாவற்றையும் தள்ளி இவ்விடத்தில் யாவுமாய் விளங்குகின்ற சிவ வடிவைப் பார்க்கக் கடவன்*

கிருமி கீடங்கள் மதியுடைத்து அதனில் கிளர்ந்திடும் பசுமதி அவற்றின்
நரர்மதி உடையர் அவரினும் சிலவர் ஞானம்மிக்கு இருப்பர் அன்னவரில்
பெரியர் கந்தருவர் மதியினால் அவரில் பெரியரே பிதிர்க்கள் வெவ்வேறு
ஒருவருக் கொருவர் தாரதம்மி யத்தால் உணர்வினால் உயர்ந்தவர் உளரால் 11

**பொழிப்புரை:** *புழு, வண்டு முதலியன மதியுடையனவாகும் அவற்றைக் காட்டிலும் பசுவினது புத்தி சிரேட்டமாக விளங்கும், அவைகளைக் காட்டிலும் மனிதர்கள் அதிக புத்தியை உடையவர்கள் அந்த மனிதர்களுள்ளும் சிலர் விசேஷ அறிவு உடையவர்களாக இருப்பார்கள். அவர்களைக் காட்டிலும் கந்தருவர்கள் புத்தியை உடையவர்கள். அவர்களைக் காட்டிலும் பிதிர்க்கள் மதியினால் பெரியவர்கள் ஒருவருக்கு ஒருவர் தாரதம்மியத்தாலும் அறிவினாலும் வேறுவேறாக மேன்மை உடையவர்களாக இருக்கின்றார்கள்.*

உள்ளபேர் எல்லாரிலும் உணர்வுடையீர் உம்பர்கள் நீங்கள் உங்களினான்
தெள்ளியன் ஆவேன் மதியினால் என்னில் செனார்த்தனன் சேதனன் ஆகும்
வெள்ளம் மேல் துயிலும் மாலினும் அரன்தான் மேதையாம் விளம்பிய எவர்க்கும்
உள்ளமே மருவி உணர்வளிக் கின்ற சிவன் யாரினும் உணர்வுடையான் 12

**பொழிப்புரை:** *கீழே சொல்லியிருக்கிற எல்லார்களிலும் தேவர்களே! நீங்கள் மிகவும் உணர்வு உடையவர்கள். உங்களைக் காட்டிலும் மதியினால் நான் தெளிந்தவன் ஆவேன். என்னைக் காட்டிலும் திருமால் அறிவுடையவனாவான். பாற்கடலில் நித்திரை செய்கின்ற திருமாலினும் அரன் அதிக ஞானம் உடையவர் ஆவார். இப்போது சொல்லிய அனைவர்களுக்கும் இருதய பங்கயத்திலிருந்து ஞானத்தைக் கொடுத்து அருள்கின்ற உமாபதியாகிய மகாதேவரே எல்லாரிலும் மேலான உணர்வு உடையவர்.*

ஆதலால் அறியும் அறிவெலாம் கைவிட்டு அறிவினுக்கு அறிவதாய் நின்ற
பேதமில் பிரமம் ஒன்றுமே அறிவான் பேறு பேரின்பமாம் பிறத்தல்
சாதலற் றிருக்கும் இதனையோர் வருத்தம் இன்றியே சார்தலும் ஆகும்
ஆதரித் தறியார் அற்பமே விரும்பி அனந்த துக்கத்திலே அமைவார் 13

**பொழிப்புரை:** *மகாதேவரே அனைத்தும் அறிந்தவராய் இருத்தலால் அறியத்தக்க வித்தைகள் அனைத்தையும் விடுத்து ஞானத்துக்கும் ஞானமாக விளங்குகின்ற அத்துவிதமான பிரம்மம் ஒன்றினையே அறியக் கடவன். அதனால் வரும் பலமும் பேரானந்த முக்தியாகும். பிறப்பு இறப்பு இல்லாமல் இருக்கின்ற இந்தச் சிவத்தை ஒரு வருத்தமும் இல்லாமல் இவ்விடத்தில் தானே அடையலாம். இந்தப் பிரமத்தை அன்பு வைத்து உணராதவர்களாகி அற்ப சுகத்தை கருதி முடிவில்லாத துன்பத்தில் தானே அழுந்துகின்றார்கள்.*

வேதநூல் மிருதி புராணம்அத்துவித மெய்ம்மையே விளம்ப மெய்த்தருக்கம்
சாதியா நிற்க தத்துவஞானத்தவரும் இப்பொருளையேசார
ஆதியாம் சிவன் நாராயணன் நான் இங்கு அறைந்ததும் அபேதமாய் இருக்க
வாதியாம் ஒருவற்கு இதை அனாதரித்தல் மாயையினுடைய வல்லபமே 14

**பொழிப்புரை:** *வேதமும் மிருதியும் புராணங்களும் அத்துவிதத்தின் உண்மையே சொல்லவும் மெய்ம்மையான தர்க்கங்களும் அத்துவிதத்தையே சாதனம் செய்யவும், தத்துவ ஞானிகளும் இந்த அத்துவிதப் பொருளையே பொருந்தவும், ஆதியாய் இருக்கின்ற சிவபிரானும், விஷ்ணுவும், பிரம்மாவாகிய நானும் இவ்விடத்தில் சொல்லியதும் அத்துவிதமாய் இருக்கவும் மதவாதியாகிய ஒருவனுக்கு இந்த அத்துவிதப் பொருளை அனாதரவு செய்கின்ற புத்தி பொருந்துதல் மாயையினுடைய வன்மையே ஆகும்.*

கனகமது அபேதம் வேறு கடகம் மகுடாதி போல
அனிய வடிவால் அனேகம் அறிவு நிலையால் அபேதம்
எனவும் உரையாடு வாரும் இதயமிலா ஞான வீனர்
எனைய நிகழ்வாலும் ஈசன் என நினைகுவான் அவீசன் 15

**பொழிப்புரை:** *பொன்னானது பேதமில்லாததாயும் வேறு கடகம், மகுடம் முதலானவை ஆவது போல், வேறுபாட்டால் அநேகம் என்றும் ஞான நிலையால் அத்துவிதம் என்றும் சொல்லுகின்றவர்களும் புத்தியில்லாதவர்களும் ஆவார்கள். மற்ற எந்த விளக்கத்தினாலும் அனைத்தும் ஈசனேதான் என்று கருதுகின்றவன் அந்த ஈசனே ஆவான்.*

பலவடிவும் வேறுபாடு பகரும் வெறு மூடரான
புலையரொடு கீடமோடு புழுவினொடு வாசியேது
சொலவிலுல காலும் வேறு துணியில் உணர்வே எலாமென்
இலகுமதி பேறதாகும் இறைவனடி பேணலாமே 16

**பொழிப்புரை:** *பலவடிவம் வேறு என்று சொல்லுகின்ற வீண் மூடர்கள், உற்பத்தியான நீசர்களோடும் கிருமிகளோடும் புழுவினோடும் சமமானவர்கள் என்று சொல்லுவதற்குக்கூட நியாயம் என்றிருக்கிறது. விவகாரத்தில் உலகங்கள் வேறாகச் சேரும் நிச்சயத்தில் அனைத்தும் ஞானமே என்று விளங்கும் புத்தியானது சிவபிரானது திருவடியைத் தியானித்தலாலே பிரயோசனம் ஆகும்.*

உலகென விளங்கல் ஞான உருவமதடைந்து நாளும்
இலகு பரையின் சொரூபம் எனும் விமல புந்தி தானும்
அலகில் அருள் இந்து மோலி அடியிணையால் அன்பு நீட
நிலைகொள உறும் தியான நிகழ்வினில் இலங்கும் ஓர்மின் 17

**பொழிப்புரை:** *சகங்களாக விளங்குதலும் ஞான வடிவத்தைப் பொருந்தி எப்பொழுதும் பிரகாசிக்கின்ற பராசக்தியினது வடிவமே என்று கருதுகின்ற நின்மலமாகிய புத்தியும் அளவில்லாத திருவருளை உடைய சந்திரசேகரரது அடியிணையால் அன்புமிக நிலை கொண்ட தியானத்தின் விளக்கத்தினால் ஒருவனுக்குப் பிரகாசிக்கும் என்பதை நீங்கள் அறியுங்கள்.*

மறைசக விளக்க நாடி மருவு பிரியத்தின் ஏது
முறையினை உரைத்தாம் மெய் மொழியல எனக்கொள் ஞானி
இறையவன் இயற்ற யாதும் இலை தொழில் அவர்க்கு மோக
முறைதொழில் இயற்றுவோன் நல்உணர்வில் பசுவொத்த வீனன் 18

**பொழிப்புரை:** *உலக விளக்கத்தைக் கருதி சுருதியானது பொருந்துகின்ற பிரியத்தின் ஏது முறையினைச் சொல்லியதாகும். உண்மையாய்ச் சொல்லியது என்று கருதுகின்ற பரம அத்துவித ஞானியே பரமசிவனானவன். அந்த ஞானிக்குச் செய்யத்தக்க கருமங்கள் ஒன்றும் இல்லை. மயக்கம் பொருந்திய கருமங்களைச் செய்பவன் நல்ல அறிவில்லாத பசுப்போன்ற இழிந்தவன் ஆவான்.*

செலவொடு திரும்பல் மேவு செனன மரணங்கள் ஞானம்
மலவிமலம் என்ப யாவும் மருவு அறிஞன் முன்பு சேர்வது
இலைவிரவு கின்ற யாவும் இயைபர சிவன் சொரூப
நிலையதென நன்றாக நிகழ்வுற விளங்க லாகும் 19

**பொழிப்புரை:** *போக்கு வரவாய் இருக்கும் பிறப்பு இறப்புகள், அறிவு, மலம், நின்மலம் என்பவை அனைத்தும் பொருந்துகின்ற சிவயோகி முன்பு ஒரு நாளும் செல்வதில்லை. பரவுகின்ற அனைத்தும் கருணை பொருந்திய பரமசிவனது சொரூப நிலையாகவே அவனுக்கு நன்மையாக பிரகாசமாக விளங்கும்.*

**தேசிகன் அளித்த வழியினால் ஐயம் தீர்ந்து சிற்சடத் திகழ்வெல்லாம்**
**ஈசனாய்ப் பார்ப்பான் இப்படிப் பார்க்கும் இதனையும் இறையெனப் பார்ப்பான்**
**நேசமோடு இங்ஙன் பார்ப்பவன் பார்வை தன்னையும் நீக்கியே இந்தத்**
**தேசிகன் திகழும் சின்மய மாகச் சின்மயமென்கையு மிலையே 20**

**பொழிப்புரை:** *ஆசிரியரானவர் அளித்த வழியினால் சந்தேகம் தீர்ந்து சிற்சட விளக்கம் அனைத்தும் பரமசிவனாகவே பார்க்கக் கடவன். இவ்வண்ணம் பார்க்கப்பட்ட பார்வையும் சிவனாகவே பார்க்கத் தக்கவன். அன்பினோடு இல்லாமல் சிவமாகவே பார்க்கத் தக்கவன். அன்பினோடு இவ்வாறு சிவனாகப் பார்க்கின்றவனாகிய இந்தச் சற்குருவானவன் அந்தப் பார்வையையும் விடுத்து சின்மயமாக சேஷிப்பான் என் கையும் அவனுக்கு இல்லை.*

**ஒழிவிலாப் பரம யோகியர் அனுபவம் உள்ளவாறு உரைத்திட யானோர்**
**வழிபெறேன் நெடுமால் மகேசன் மாமுனிவர் வானவர் உரைத்திட மாட்டார்**
**விழிமிகும் சிவனால் விஞ்சையாம் சிவையால் விளம்பவும் படாதது விளம்பு**
**மொழியெலாம் வந்து மோன பாவத்தே முடியும் அங்குலமதே முடிவு 21**

**பொழிப்புரை:** *அழிவில்லாத மகாத்மாவின் அனுபவத்தை உள்ளவண்ணம் சொல்லுவதற்கு நான் ஒரு வழியும் பெறாதவனாய் இருக்கிறேன் திருமாலும், ருத்திரனும் மாமுனிவர்களும் அந்த அனுபவத்தை உரைத்திட முடியாதவர்கள். நெற்றிக்கண் உடைய பரமசிவனாலும் அறிவு வடிவான பராசத்தியாலும் அந்த அனுபவத்தை சொல்ல முடியாது. அதைப் பற்றி சொல்லப்பட்ட வார்த்தையெல்லாம் மௌனத்தில் தான் முடிந்து விடும். அந்த நிலமே முடிவாகும்.*

**இப்படிக் கருணையால் இயம்பினேன் எலாம்**
**அப்பழ மறையெலாம் அறிய ஓதுவது**
**ஒப்புற நானுமக்கு உரைத்த ஈதெல்லாம்**
**செப்பரு நான்மறையதின் சேடம் ஆகுமே 22**

**பொழிப்புரை:** *அந்த அனாதியாக வேதங்கள் எல்லாம் அனைத்தையும் இவ்வாறு அறியும்படி சொல்லுகின்றது. பரமசிவத்தின் கருணையால் இயம்பினேன் ஒப்பும்படி நான் உங்களுக்கு சொல்லுதற்கு அரிய வேதத்தினது எஞ்சிய பகுதிதான்.*

**உரையாடுவது இத்தகமைத்து எனவோர் குறியுண்டாம்**
**பொருள்பால் அன்றே பூரணமாய் ஓர் வேறில்லாச்**
**சொருபானந்தன் திருமேனியெனச் சொலவன்றே**
**விரையார் கமலத்தவன் மெய்பாரா வியப்புற்றான் 23**

**பொழிப்புரை:** *இத்தன்மையுடையது என்று சொல்வதற்கு ஒரு குறிப்பான பொருள் உண்டு. அப்பொருளும் வேறிடத்து இருப்பதல்ல. பூரணமாயும், ஓர் வேறுபாடு இல்லாததாயும் விளங்குகின்ற சொரூபானந்தனது திருமேனி என்று சொல்லுவதற்கு அக்காலத்தில் தானே வாசனை பொருந்திய கமலாசனத்தில் வீற்றிருக்கின்ற பிரமதேவர் மெய்யை நோக்கி அதிசயம் அடைந்தார்.*

**பிரகதாரணிய உபநிடத தாற்பரியம் உரைத்த ஒன்பதாவது அத்தியாயம் முற்றிற்று.**

## பத்தாவது அத்தியாயம்

# உஷஸ்தப் பிரமாணம் உரைத்த அத்தியாயம்

நாதனாம் சொருபா னந்தன் நாண்மலர்ப்பாதம்
போதமே எனும்பரிசு புத்தேள் அவர்க்கெல்லாம்
நேதிநேதி செய்து இப்பரிசென நிகழ்த்திடுவான்
வேதநாலும் நான்முகத்தினால் விளக்கிய விதாதா 1

**பொழிப்புரை:** *யாவர்க்கும் நாயகராகிய சொரூபானந்தரது புதுமலர் போன்ற திருவடியே ஞான சொரூபமாய் இருக்கின்றது என்னும் தன்மையை, இதல்ல, இதல்ல என்று நீக்கி இவ்விதம் என்று நான்கு வேதங்களையும் நான்கு முகங்களாலும் விளக்கும் பிரம தேவரானவர் தேவர்கள் அனைவருக்கும் சொல்லுகின்றார்.*

எப்பொருள் களுக்கும் சான்றாய் யார்க்கும் உள்ளாகி என்றும்
மெய்ப்படு தன்தேசாலே விமலமாய் விளங்கா நின்றது
எப்பொருள் எல்லா மாகி எங்கணும் நிறைந்து நின்ற
அப்பரப் பிரம்மம் நேரே அழகுற அறிய லாகும் 2

**பொழிப்புரை:** *எந்தப் பொருள்களுக்கும் சாட்சியாயும் அனைவர்க்கும் உள்ளாகியும், எக்காலத்தும் மெய்ம்மையாகிய தனது பிரகாசத்தினாலேயே நின்மலமாய் விளங்குவதுமாய் உள்ளது எந்தப் பொருளோ அது அனைத்துமாகி எங்கும் பூரணமாய் நின்ற அந்தப் பரப்பிரம்மமே நேரே அழகாக அறியத்தகும்.*

இந்தப் பிராண அபானாதி யாரால் உண்டாய் இயங்குவதிங்கு
எந்தப் புருடன் முன்பாக எல்லாம் இலங்கி அவிர்வாகும்
தொந்தப்பட எத்தொழிலும் செய்து ஏவன் தொழிலற்று இருக்கின்றான்
அந்தப் பரனே யாவர்க்கும் உள்ளாம் ஆன்மா ஆகின்றான் 3

**பொழிப்புரை:** *இந்தப் பிராணன் அபானன் முதலியவைகள் எவனால் உண்டாகிச் சலிக்கின்றன. இவ்விடத்தில் எந்தப் புருஷனது சன்னிதானத்தில் அனைத்தும் பிரகாசமாக விளங்கும் சுகதுக்கங்களுக்குப் பாத்தியப்படும்படி எல்லாத் தொழில்களையும் செய்தும் எவன் ஒரு தொழிலும் இல்லாமல் இருக்கின்றானோ அந்தப் பரமனே யாவர்க்கு உள்ளாம் ஆன்மா ஆகின்றான்.*

உடம்போ தானன்று உடம்பு ஈதென்று உணரப் படுதலால் உடம்பில்
திடம்சேர் பிராணாதியும் அன்று செடமாய்க் காணும் செய்தியினால்
கடம்போல் இயாவன் இவையனைத்தும் காண்பான் அவனே கர்த்தாவாய்
நடஞ்சேர் உடம்பினுள் நின்று நடத்துகின்ற நானாவான் 4

**பொழிப்புரை:** *இது உடல் என்று சுட்டி அறியப்படுதலால் இந்த உடலோ நானல்ல. இந்த உடம்பில் திடம்பொருந்திய பிராணன் முதலிய வாயுக்களும் செடங்களாகக் காணப்படும் செய்கையினால் நானல்ல. எவன் கடத்தைப் போல இவையனைத்தையும் பார்க்கின்றானோ அவனே அதிபனாகி சலனம் பொருந்திய சரீரத்துள்ளே நின்று ஏவுகின்ற நானாவான்.*

வினவுற்ற கேள்விக்குக் கேட்பானாகி மேவிய
காட்சியில் விழித்துக் காண்பானாகி
மனனத்தின் மாந்தாவாய் ஞானந்தன்னின்
மதித்திடு ஞாதாவாகி மன்னுகின்றான்
சொனஅத்தற் பரனாகும் அவனில் வேறாம்
தோற்றமெலாம் மெய்யாகும் தோற்ற மன்று
நினையில் தற்பரனே இங்கு எல்லாமென்று
நினைவதுவே நினைவான நினைவுநேரே 5

**பொழிப்புரை:** *கேட்கின்ற செவிக்குக் கேட்பவனாயும், பொருந்திய கண்ணுக்கு விழித்துப் பார்ப்பவனாயும், மனனத் தொழிலை உடைய மனத்திற்கு மனனிக்கின்றவனாயும், விஞ்ஞானத்திற்கு மதிக்கின்ற விஞ்ஞாதாவாயும் நிலைபெற்று இருப்பவனே அந்தத் தற்பரனாவான். அவனுக்குப் பின்னமாகத் தோற்றுகின்ற அனைத்தும் உண்மையான தோற்றமல்ல. நேரே நினையில் அந்தப் பரனே இங்கு அனைத்தும் என்று நினைப்பதுவே நினைக்கத்தக்க நினைவாகும்.*

பாரிலே எல்லாப் பொருள்களும் கோவைப் பட்டது எப்படியில் அப்படியே
நீரிலே பாரும் நெருப்பிலே நீரும் நிலவு காலதனில் நெருப்பும்
ஊருகால் அந்தரிக்க லோகத்தும் உண்டையும் பாவும் போலச்
சாருமாம் ஒன்றோடு ஒன்று வேறறவே தன்னிலே பின்னிஇச் சகத்தில் 6

**பொழிப்புரை:** *பூமியின்கண் எல்லாப் பொருள்களும் கோவையாகியது எவ்வாறோ அவ்வாறே நெருப்பிலே நீரும், நிலவுகின்ற வாயுவில் தீயும், சலிக்கின்ற காற்று ஆகாயத்திலும் நூலினது உண்டையும் பாவும் போல ஒன்றுக்கொன்று வேரற்ற தன்னில் தானே பின்னிக்கொண்டு இவ்வுலகில் பொருந்தி இருக்கின்றனவாம்.*

அந்தரிக் கங்கள் கந்தரு வத்தே ஆதித்த உலகங்கள் இடையே
கந்தரு வங்கள் சந்திர வுலகில் கதிரவன் உலகுகள் எல்லாம்
சந்திர உலகம் தாரகை உலகில் தாரகை வானவர் உலகில்
இந்திர உலகில் வானவர் உலகம் யாவையும் கோவையாய் இருக்கும் 7

**பொழிப்புரை:** *ஆகாய லோகங்கள் கந்தர்வ லோகத்திலும், கந்தர்வ லோகங்கள் சூரிய லோகங்களிலும், சூரிய லோகங்கள் எல்லாம் சந்திர லோகத்திலும், சந்திர லோகம் நட்சத்திர லோகத்திலும், நட்சத்திர லோகம் தேவலோகத்திலும், தேவலோகம் இந்திர லோகத்திலுமாக அனைத்தும் கோக்கப்பட்டிருக்கின்றன.*

**அரசாகிய அமராதிபன் உலகானவை அடையப்**
**பிரசாபதி உலகங்களின் இடையே பிரமனதாம்**
**உரைசார் உலகினில் மற்றவை இது மாலவனுலகில்**
**திருமால் உலகம் சேர்வுறும் இடமும் செப்புதுமே. 8**

**பொழிப்புரை:** *அரசனாகிய இந்திரனது உலகங்கள் எல்லாம் பொருந்த, பிரசாபதி லோகங்களிலும் அந்தப் பிரசாபதி லோகங்கள் சொல்லுகின்ற பிரமாவினது உலகங்களிலும், இந்தப் பிரமலோகம் உயர்ந்த விஷ்ணுலோகத்திலும் கோவைப்பட்டிருக்கும் இந்த விஷ்ணுலோகம் பொருந்தும் இடத்தையும் இனி முறையே எடுத்துச் சொல்லுவாம்.*

**உருத்திரன் உலகின் மாலுலகு உருத்திரன்**
**இருக்கும் அவ்வுலகெலாம் ஈச லோகமே**
**திருத்தகும் ஈச லோகங்கள் திண்ணமாய்க்**
**கருத்தறும் சதாசிவ உலகின் கண்ணதே. 9**

**பொழிப்புரை:** *திருமாலின் லோகமானது உருத்திர லோகத்திலும், உருத்திரன் வாசம் பண்ணுகின்ற அந்த உலகம் எல்லாம் ஈசுவர லோகத்திலும், சொல்லப்பொருந்திய ஈசுவர லோகங்கள் வலிமையாகக் கருத்தினால் எட்டக்கூடாத சதாசிவ லோகத்திலும் கோவைப்பட்டு இருக்கின்றன.*

**தற்பரம் தன்னிலே சதாசிவன் தனது**
**உற்பவ உலகெலாம் உறுதியாம் அதில்**
**கற்பிதமாய் நிகழ்ந்திடு மெய் காணுறில்**
**அற்புதமாம் பரன் அல்லது இல்லையே. 10**

**பொழிப்புரை:** *சதாசிவனுடைய உற்பத்திக்கப்பட்ட உலகம் அனைத்தும் தற்பரம் தன்னிலே உறுதியாகக் கோக்கப்பட்டிருக்கிறது. அந்தப் புரத்தில் ஜகமனைத்தும் கற்பிதமாக விளங்கும் உண்மையாய்ப் பார்க்கும் இடத்தில் அற்புதன் ஆகிய பரனைத் தவிர இல்லை.*

**உடையது ஒன்றுடையான் எனும் வேறவையின்றி லோகத்து**
**இடையிருந்தும் இருந்திலனாய் எவையும் உடம்பாய்த்**
**திடமிதென்று அறியாவகை நின்றொரு செய்கை இன்றி**
**அடையவும் செயுமார் அவன் அந்தரி யாமியாவன். 11**

**பொழிப்புரை:** *ஒருபொருள் தன்னுடையது எனவும் ஒரு பொருளை உடையவன் எனவும், சொல்லுகின்ற வேறான அவ்வுரைகள் இல்லாமல் உலகத்தின்கண் இருந்தும் இல்லாதவனாகவும், சகலத்தையும் உடம்பாக உடையவனாகவும், திடமாக இதுவென்று சுட்டியறியத் தகாதவனாயும் இருந்து ஒரு தொழிலும் அல்லாமல் எவன் எல்லாவற்றையும் செய்பவன் அவனே அந்தர்யாமி ஆவான்.*

காண்டல் கேட்டல் கருதல் செயப்படுவான் அலன்தான்
காண்டல் கேட்டல் கருதல் செயப்படுவான் ஒருத்தன்
தூண்டாச் சோதியினால் அனல் சோமன் அருக்கன் எல்லாம்
மாண்டபோதும் விளங்குமெனக் கரியாகி நின்று. 12

**பொழிப்புரை:** *காணப்பட்டவனும் கேட்கப்பட்டவனும் கருதப்பட்டவனும் அல்லன். தான் காண்பானாகவும், கேட்போனாகவும், கருதல் செய்பவனாகவும் இருக்கின்ற ஒருவன் அக்கினி, சந்திரன், சூரியன் அனைத்தும் அழிந்த காலத்தும் தன்னுடைய தூண்டா விளக்கத்தினால் மனோசாட்சியாய் நின்று விளங்குகின்றான்.*

சித்தம் அத்தமித்திடத்து அபாவமும் தெரிந்திடும்
சுத்தநற் சுழுத்தியில் துயக்கும் மாயை கண்டிடும்
அத்தமித்தலும் பிறத்தலும் இலான் அபாவ பா
வத்தையும் அகண்டமும் அறிந்த போத ரூபனே. 13

**பொழிப்புரை:** *ஆன்மாவானவன் சித்தம் நசித்த இடத்தில் அதன் இல்லாத தன்மையும் அறிவான். சுத்தமாகிய நல்ல சுழுத்தியினிடத்தில் சோர்வுள்ள மாயைதனையும் காண்பான் ஒடுங்குதலும் பிறத்தலும் இல்லாதவன் பாவ அபாவத்தையும் எல்லாவற்றையும் அறிந்த ஞான வடிவாவான்.*

பின்னமான தன்றியே பிரமமாய் அறிந்தவன்
துன்னுபேத மேவினும் சொரூபமே நிகழ்ந்ததாம்
உன்னில் ஞான நாசமில்லை ஞேய நாசமாகுமால்
தன்னில் ஞான நேயமாக வேறுறாத தன்மையால். 14

**பொழிப்புரை:** *வேறு என்பது இல்லாமல் பிரம்மமாக அறிந்தவன் நெருங்கிய பேதம் பொருந்திடினும் அது சொரூபமாகவே விளங்கியதாகும். கருதிடில் தன்னிடத்தில் உள்ள ஞானமானது ஞேயமாக வேறுறாத தன்மையால் ஞானத்திற்கு அழிவில்லை ஞேயத்திற்கு அழிவுண்டாகும்.*

இதுபரம மானகதி இதுபரம மாம்உலகும்
அதிசுகமும் ஆவதிது அழிவில்தனம் ஆவதிது
உதறுதன தோல்உரகம் உடலென உனாதுபரம்
அதனை அறிவான் அதிகன் அகமதி வையான் உடலில். 15

**பொழிப்புரை:** *இந்தச் சொரூபமே பரமபதமும், இதுவே மேலான உலகமும், இதுவே அதிக சுகமும் ஆகும் இதுவே அழிவில்லாத செல்வமும் ஆகும். உதறுகின்ற தனது சட்டையை பாம்பு சரீரம் என்று கருதாது. அதுபோல பிரம்மத்தை அறிகின்றவனான சிரேட்டன் சரீரத்தில் நான் என்னும் புத்தியை வைக்கமாட்டான்.*

தற்பரம் ஆகியுள தத்துவமதே ஒழிய
அற்பமயல் காணுமவர் அத்துருவமே அடைவர்
கற்பித அஞானமதில் உற்பவமதாம் உலகம்
நற்பிரம மாயறிவர் நற்சிவமதா நயனர். 16

**பொழிப்புரை:** *தற்பரமாய் இருக்கின்ற பிரம்மத்தைத் தவிர கொஞ்சமேனும் வேறுபாடாகப் பார்க்கின்றவர்கள் நிலையில்லாத மரணத்தையே அடைவார்கள். கற்பிதமாய் உள்ள அவித்தையில் உற்பத்தியாகிய உலகை நல்ல சிவமாகிய கண்களை உடையவர்கள் சுத்தப் பிரம்மமாக அறிவார்கள்.*

நிலையில் நிலையாகி அளவிட வொணாத நிமலனுரு நாளும் நினைகுவான்
சலனமற நாவு மலைவு அலையறாத சமயகலை ஓதல் தவிருவான்
உலகில் உதியாது உயர்வு குறைவான ஒருவினையினாலும் மருவுறாது
அலகில் உலகேவல் செயஉரியனான அதிபதியாகும் அமலனே. 17

**பொழிப்புரை:** *தனது நிலையில் தானே நிலையிருப்பதாகி அளவிடக்கூடாத நின்மலனாகிய பரமசிவ சொரூபத்தை எந்நாளும் நினைப்பவனாயும், நாவானது இடைவிடாமல் சலிப்பது நீங்க மயக்கமாகிய அலைநீங்காத சமய சாத்திரங்களைச் சொல்லாதவனாயும் உள்ள அமலனானவன் உலகத்தில் பிறவாமல் ஏற்றந்தாழ்வாகிய ஒரு கருமங்களாலும் துன்பம் பொருந்தாமல் அளவில்லா உலகத்தோர்கள் ஏவல் தொழில் செய்யத் தகுந்தவனான இறைவனுமாவான்.*

பூதபதி பூதபாலன் உலகூடு போக முடியாததான ஓர்
சேதுவெனும் ஈசனானவனை மேவல் தேடி வழிபாடு மேவியே
வேதமொழியாலும் வேள்வி பலவாலும் மேவு தவதான பூசையே
ஆதிவழியாலும் ஆதரவினாலும் ஆயும் முனி ஞானியாகுவான். 18

**பொழிப்புரை:** *பூதங்களுக்குத் தலைவனாகவும், பூதங்களைக் காப்பவனாயும் உலகூடு போக முடியாததான ஒரு கரையாகிய பரமசிவனை அடைய விரும்பி, வணக்கம் பொருந்தி வேத வாக்கியங்களாலும் பல யாகங்களாலும் பொருந்திய தவம், தானம், பூசை முதலான மார்க்கங்களாலும், பக்தியினாலும் ஆராய்கின்ற முனியானவன் ஞானியாவான்.*

குறியது வாதலால் குறிக்கவும் படான்
இறுவது மிலன் உடம்பு என்றும் இன்மையால்
செறிவது பற்றிலன் தீண்ட லின்மையால்
அறியில் அவ்வறிஞன் ஒன்றோடும் ஆர்ப்புறான். 19

**பொழிப்புரை:** *ஆன்மாவே லட்சியப் பொருளாகையால் குறிப்புக்கும் அடங்கமாட்டான். உடம்பு எக்காலத்தும் இன்மையால் அழிவும் இல்லாதவன் ஆவான். தீண்டுதல் இல்லாமையால் ஒரு பற்றும் நெருங்குதல் இல்லாதவன் ஆவான். உணருங்கால் அந்த ஞானியானவன் ஒன்றோடும் கட்டுப்படமாட்டான்.*

தத்துறு வினையினால் உயர்வு தாழ்வுறா
வித்துவான் மகிமையே விளம்பி நித்தமாம்
அத்தகு சொரூபத்தை அறிந்து பாவமாம்
இத்துயர் வினையொடு என்றும் சேர்வுறான் 20

**பொழிப்புரை:** *கெடுதலுறும் புண்ணிய பாவமான கருமத்தால் உயர்வு தாழ்வாகிய விகாரத்தை அடையாத ஆன்மஞானியின் மகிமையே நித்தியமாகும். ஆதலால் ஒருவன் மேற்சொல்லிய நித்திய மகிமாரூபமான ஆன்மாவை அறிந்து பாவமாகிய இந்தத் துன்பக் கருமத்தினோடும் எக்காலத்தும் சேராதவன் ஆவான்.*

சத்தியத்தால் மிகுசாந்தி தாந்தியால்
எத்தொழிலும் இசைவற்று இருத்தலால்
பத்தியால் இறைவனைப் பண்ணும் பூசையால்
சுத்த வேதாந்த மெய்த்துணிவு தோன்றுமால் 21

**பொழிப்புரை:** *உண்மையாலும் மிகுந்த அமைதி தன்னடக்கத்தினாலும், எத்தொழிலும் பொருந்தல் அற்று இருத்தலினாலும், பக்தியினாலும் பரமசிவனை வழிபாடு செய்யும் சிறப்பினாலும் பரிசுத்தம் பொருந்திய வேதாந்தத்தின் உண்மையான நிச்சய ஞானம் உண்டாகும்.*

வேளுடல் பொடிபட விழித்த விண்ணவற்கு
ஆளெனும் அன்பினால் அணியு நீற்றை உத்
தூளனம் பண்ணலால் தொழுது போற்றலால்
மாளுதல் பிறத்தலாம் வழியை மாற்றலாம் 22

**பொழிப்புரை:** *மன்மதனின் உடல் சாம்பலாகும்படி நெற்றிக்கண்ணை விழித்து எரித்த சிவபெருமானுக்கு அடிமை என்னும் பக்தியினால் எல்லோராலும் அணியத்தக்க விபூதியை உடம்பு முழுவதும் பூசுவதாலும், வணங்கிப் போற்றுவதினாலும் பிறப்பு இறப்பாகிய வழியை ஒழித்துவிடலாம்.*

மெய்யுறும் அன்பினால் மேவு சாதனம்
ஐயமில் ஞானமுண்டாக்கும் ஆக்கினால்
வையகம் யாவையும் மன்னு போதமாய்க்
கையுறு கூவிளங்கனியில் காணலாம் 23

**பொழிப்புரை:** *உண்மையான அன்பினால் பொருந்துகின்ற சாதனங்கள் ஐயமில்லாத ஞானத்தை உண்டுபண்ணும். அவ்வாறு ஞானத்தை உண்டாக்கினால் , எல்லா உலகங்களையும் நிலைபெற்ற ஞான சொரூபமாகவே கையில் இருக்கின்ற வில்வக் கனிபோலப் பார்க்கலாம்.*

மேவுபாவம் வெல்லாது மெய்ஞ்ஞானியை வென்றிடும் இவன் எல்லாப்
பாவமானதும் ஆதலால் வேதனம் பண்ண வல்லவனான
தேவதேவனாம் தேசிகன் தனக்கு முன் செய்பொருள் உடல்ஆவி
ஈவதே கடன் இறைவன் எம்பிரானெனவே ஏத்தி மெய்யிதயத்தால் 24

**பொழிப்புரை:** *பொருந்துகின்ற பாவமானது உண்மை ஞானியை செயிக்காது. இந்த ஞானி பாவமாகிய அனைத்தையும் செயிப்பான். ஆகையால் ஒருவனுக்கு ஞானத்தை உண்டாக்க வல்லவனாகிய, தேவ தேவனாகிய குருவுக்கு முன்பு தொழிலால்*

*சம்பாதிக்கப்பட்ட பொருள்களையும் உடலையும் உயிரையும் உண்மையான மனத்தினால் இறைவனே எம்பெருமானே என்று வணங்கிக் கொடுப்பதே கடனாகும்.*

மாயவன் புலத்து எழாவகை தீர்ந்ததன் வாய்மையால் இடரின்றிப்
பாய இன்னமுது இருசெவித் துளைவழி பாய்ச்சினான் பதுமத்தான்
தாயும் தந்தையும் சுற்றமும் மற்று நற்றனமும் என்று அடைவான்தன்
காயம் உள்ளளவும் புகழ்ந்து ஏத்துவான் கற்றதோர் கலையாலே 25

**பொழிப்புரை:** *தீங்காகிய வலிய ஒலி முதலிய ஐம்புலங்களில் எழும்பிச் செல்லாதபடி அடக்கிய தனது உபதேசத்தால் துக்கம் இல்லாமல் பாயும்படி இனிய சொரூப அமுதத்தை இரண்டு செவித்துளைகளின் வழியாகச் செலுத்திய தேசிகனது தாமரை போன்ற திருவடிகளே மாதாவும், பிதாவும், சுற்றமும், செல்வங்களும் என்று சரணடைகின்றவன் தன் உடல் உள்ள வரைக்கும் தான் கற்ற ஒப்பில்லாத கல்வியினால் புகழ்ந்து வணங்கப்படுபவன் ஆவான்.*

தேசிகன்தன் திருமேனி சிந்தை செய்யச்
சிவனைச் சிந்தித்தானாம் செம்பொற் றாளில்
பூசனை செய்திட எங்குமாகி நின்ற
பூரணனை இனிதாகப் பூசித்தானாம்
நாசமிலாச் சிவநாமம் நவின்றான் ஆண்ட
நாயகன்தன் திருநாமம் நவின்றானாகில்
ஈசனையே இகழ்ந்தானாம் கண்ணாற் காண
எழுந்தருளும் திருக்கோலம் இகழ்ந்தானாகில் 26

**பொழிப்புரை:** *குருவினுடைய திருமேனியைத் தியானம் பண்ணிடில் சிவபெருமானையே தியானித்தவன் ஆவான். அவரது செவ்விய பொன்னடியில் பூசனை செய்திட எவ்விடத்திலும் பிரகாசிக்கின்ற பரிபூரணனை அன்புடன் பூசித்தவனாவான். தன்னைத் திருவருளால் ஆண்ட குருவின் திருநாமத்தைச் சொல்லுவானேல் அழிவற்ற சிவாகமத்தைச் சொன்னவன் ஆவான். கண்ணாலும் பார்க்கும்படி எழுந்தருளுகின்ற திருக்கோலத்தை இகழ்ந்தானாகில் அவன் ஈசனையே இகழ்ந்தவனாவான்.*

ஆதலினால் வேதவேதாந்தத் துண்மை
அறிவானாய் முழுதுமறிந்து அடங்கினான்தன்
பாதமடைவான் முத்தி வேண்டின் அல்லல்
பரப்பையெலாம் கைவிடுவான் பரிவோடு உங்கட்கு
ஓதுவதில் கிடைப்பதிலை அருளால் எல்லாம்
ஓதினேன் இப்பொருள்மெய் உணர்ந்தோன் செய்யும்
நீதிபிழை நினைந்திடவும் இல்லை எங்கும்
நிறைந்தபரம் பொருளாகி நிகழா நின்றான் 27

**பொழிப்புரை:** *ஆகையால் வேத வேதாந்தங்களின் உண்மையை அறிபவனாகி முத்தியைக் கருதிடில் அனைத்தையும் அறிந்து தன்னிலே அடங்கிய குருவின்*

*திருவடியைச் சேர்வான் விசாலமாகிய துக்கங்களையெல்லாம் விட்டு நீங்குவான் பிரியத்துடனே உங்களுக்குச் சொல்ல வேண்டிய விஷயத்தில் மீதி ஒன்றும் இல்லை. சிவபெருமானது திருவருளால் அனைத்தையும் உபதேசித்தேன். இந்தப் பொருளினது உண்மையை அறிந்தவன் செய்யத்தக்க விதியையும், விலக்கையும் கருதவே இல்லை. எவ்விடத்தும் நிறைந்த பிரம்ம சொரூபமாகி விளங்குகின்றான்.*

**ஒருவரால் ஒருவிரகில் உணர்வுஒணாதது பரம**
**குருவினால் அறியவரும் அதனை நேர் தருகுரவன்**
**அருளை யாதொரு வழியில் அடையலாம் அதுமுயல்கை**
**கருமமாம் எனநிகரில் கரும நான்முகன் அருளும்** 28

**பொழிப்புரை:** *ஒருவரால் ஓர் உபாயத்தினாலும் அறியக்கூடாத அந்தப் பொருள் பரம குருவினால் அறியவரும். அந்தச் சொரூபத்தை நேராகத் தருகின்ற தேசிகரது கிருபையை எந்த வழியினால் பெறலாமோ அந்த வழியால் முயற்சி செய்வது நல்ல தொழில் ஆகுமென்று ஒப்பில்லாத படைப்புத் தொழிலைச் செய்கின்ற பிரம்மதேவர் சொன்னார்.*

**உஷஸ்தப் பிரமாணம் உரைத்த பத்தாவது அத்தியாயம் முற்றிற்று.**

**பதினொன்றாவது அத்தியாயம்**

# கடவல்லியோடு சுவேதாச்சுவதரமும் உரைத்த அத்தியாயம்

பன்னுநன் குருவெனும் பரம்பரன் திறம்
சொன்ன தன்மையை எலாம் தோன்ற நானுமக்கு
இன்னமும் கூறுவன் என இயம்பினான்
அன்ன வாகனத்தினான் அமரர்க்கு அன்பினால் 1

**பொழிப்புரை:** *சொல்லுகின்ற சற்குருவாகிய பரமசிவத்தின் சத்தியை பகர்ந்த தன்மை அனைத்தையும் தெரியும்படி நான் இன்னமும் சொல்வேனென்று அன்னவாகனத்தை உடைய பிரமன் தேவர்களுக்குக் கிருபையினால் சொன்னார்.*

குகையில் இருப்பதாய் மிகவும் கூடமாகி எவ்விடத்துந்
திகழ்வதாகி ஒருவர்க்கும் தெரியாதாகும் சிவனுருவம்
மிகவும் நன்றாய் மேலாம் அவ்வுருவ மெய்ம்மை விளங்குமவன்
சுகதுக் கங்கள் தீர்ந்து வெறும் சுகசொரூபன் ஆகின்றான் 2

**பொழிப்புரை:** *அந்தக்கரணம் என்னும் குகையில் இருப்பதாயும் மிகவும் ரகசியமாயும் எங்கும் பிரகாசிப்பதாயும் ஒருவருக்கும் தெரியாததாயும் உள்ளது, சிவனுடைய உருவம் மேலான அந்த உருவத்தின் உண்மை மிகவும் தெளிவாய் விளங்கும்படி அடைந்தவன் இன்ப துன்பங்களற்று வெறும் சுக சொரூபன் ஆகின்றான்.*

தரும ஆதிகட்கும் பூதங்கள் தமக்கும் வேறதாய் யாதொன்று
அருமா மறைகள் அறைகின்றது அரிய பிரம சரியாதி
சரியா நின்றார் யாதுபெற அதுதற்பரம் அக்கரம் அதனைத்
திரமாய் அறியும் அவன் சிந்தை செய்ததெல்லாம் சித்திக்கும் 3

**பொழிப்புரை:** *தருமம் முதலியவைக்கும் சென்ற காலம் முதலிய மூன்று காலங்களும் வேறாக எது அருமையான பெரிய வேதங்கள் சொல்லுகின்றதோ அரிய பிரம்மச்சரியம் முதலிய ஆசிரமங்களை எதனை அடைவதற்கு சரியா நின்றார்களோ, அதுவே தற்பரமாயும் அட்சரப் பொருளாயும் விளங்குகின்றது. அந்தப் பொருளை ஸ்திரமாக அறிந்தவன் மனத்தில் நினைத்ததெல்லாம் நிறைவேறும்.*

அந்தப் பரமே எப்பொருட்கும் ஆலம்பனம் ஆவது அதனைச்
சிந்தைக் கேறத் தெளிவுற்றான் செனியான் மரியான் ஒருதிசையில்
வந்துற்றிலன் ஓர் வடிவுமிலன் அதனால் வரவு போக்காகும்
இந்தத் தொழில்கள் ஒன்றுமிலன் எங்கும் தானாய் இருக்கின்றான் 4

**பொழிப்புரை:** *அந்தப் பரப்பிரம்மமே சகல பொருள்களுக்கும் பற்றுக்கோடாகும். அதனைச் சிந்தையில் ஏறும்படி தெளிவாக அறிந்தவன் பிறவான் இறவான் ஒரு திசையிலும் வந்து பொருந்தமாட்டான். தனக்கு ஒரு வடிவும் இல்லாதவன் ஆவான். ஆகையால் வரவு போக்காகும் ஒன்றும் இல்லாதவன் ஆவான். எவ்விடத்தும் தானாகவே விளங்குகின்றான்.*

பொன்ற உடலைத் துணிசெய்போதும் இறை பொன்றான்
கொன்றிடுதலும் கொலையுறுந் தொழிலும் இல்லான்
இன்று பெருமைச் சிறுமையில் பெருகி நுட்பாய்
என்றும் இதயக் குகையில் இலகுகின்றான். 5

**பொழிப்புரை:** *அழியும்படி உடம்பை வெட்டின போதிலும் அழியாத பொருளாகிய ஆன்மா அழியமாட்டான். ஒருவரைக் கொல்லுதலும் ஒருவரால் கொலை செய்யப்படுதலும் என்னும் தொழில் இல்லாதவன், பெரியதில் பெரியதாயும் சிறியதில் சிறிதாயும் நின்று எக்காலத்தும் அந்தக்கரணமாகிய குகையில் விளங்குகின்றான்,*

அண்ணியனும் ஆகும்அதி தூரியனும் ஆகும்
வண்ணமிலதான மகிமா அருளினாலே
கண்ணிகழ்வாம் அலது காண எளிதோதான்
திண்ணமுற நானறிவன் வேறுதெளிவார் ஆர்? 6

**பொழிப்புரை:** *அருகில் இருப்பவனும் ஆவான். அதிதூரத்தில் இருப்பவனும் ஆவான் இவ்வண்ணம் என்று குறிக்கக்கூடாத, மகிமை பொருந்திய அந்த ஆன்மாவானவன் சிவ அருளினாலே ஞானக் கண்ணுக்கு விளங்குபவனே அன்றி காண்பதற்கு எளியவனோ, திடமாக நான் அறிவேனே அன்றி மற்று யார் தெளிபவர்.*

நின்றும் உடல்தோறும் உடலின்றி நிகழ்வானாய்ப்
பொன்றும் அதனோடும் ஒரு பொன்றுதல் உறானாய்
என்று நிலையாய் உலகமெங்கும் ஒருதானாம்
ஒன்றை அறிவான் இடர்களொன்றில் உழலான் 7

**பொழிப்புரை:** *உடல்கள் தோறும் இருந்தும் உடல் இல்லாமல் விளங்குகின்றவனாயும், அழிகின்ற இந்த உடலினோடும் ஓர் அழிவும் இல்லாதவனாயும், எக்காலத்திலும் அழிவில்லாமல் இருந்து உலகெங்கும் ஒப்பற்ற தானாகவே விளங்குகின்ற பிரம்மத்தை அறிந்தவன் ஒரு துன்பத்திலும் உழலமாட்டான்.*

இகழு புன்னெறியை விட்டு ஒருப்படும் இந்த்ரியங்கள் மனங்கள் மீட்டிருக்கும்
தகவினை உடையான் அருள்பெறும் அந்த அருளினால் பிரமத்தை யடைவான்
இகபரம் இரண்டும் புசிப்பவன் அவனிங்கு எவ்விடத்தே உளன் இங்ஙன்
திகழுற மிகுத்த தேவருமறியார் மனிதரோ இனித் தெளிவுறுவார் 8

**பொழிப்புரை:** *இகழத்தக்க அற்ப வழியை விடுத்து கூடிய இந்திரியங்களையும், மனம் முதலானவைகளையும் திருப்பி இருக்கின்ற குணத்தை உடையவன் சிவனருளை அடைவான். அந்தத் திருவருளால் பிரம்மத்தை அடைவான். இவ்விடத்தில் இம்மை மறுமை இரண்டினையும் புசிக்கின்றவனாகிய அவன் எங்கே இருக்கிறான். அவனை இவ்விடத்தில் விளங்கும்படி மிகுதியான தேவர்களும் அறியமாட்டார்கள். மானிடர்களோ இனிமேல் அறிவார்கள்.*

**ஏயபேருலகில் வினைப்பயன் நுகர்ந்து அங்கு இதயமே மருவுவார் இருவர்**
**சாயை ஆதபம் ஆகின்றனர் சீவ சங்கரர் என்றிடத் தகுவார்**
**ஓயுமாறு அறவே உண்பவன் சீவன் ஊட்டுவான் சிவனிவர் தமக்கிங்கு**
**ஆயபேதந்தான் உபாதியால் வந்தது அல்லது அபேதமே ஆகும் 9**

**பொழிப்புரை:** *பெருமை பொருந்திய உலகின்கண் கரும பலத்தைப் புசித்து அவ்விடத்தில் இருதயத்தில் பொருந்தியிருக்கின்றவர்களாகிய இரண்டு பேர்கள் நிழலும் வெய்யிலும் போல் இருக்கின்றார்கள். அவர்கள் சீவர், ஈசர் என்று கூறத்தக்கவர்கள். அவர்களில் ஓயும் தன்மை இல்லாமல் புசிப்பவன் சீவனாவான். ஊட்டப்பட்டவன் சங்கரனாவான். இவ்விடத்தில் இவ்விருவர்களுக்கும் சமட்டி வியட்டியால் வேறுபாடு வந்ததே அன்றி யதார்த்தத்தில் அபேதமே தான்.*

**தேசினிகழ் தேருடல் செலுத்துமதி பாகன்**
**பாசமனமாம் அது பிணித்துவரும் பாய்மா**
**வீசுபுலனாம் விடய வீதிமிசை தானாம்**
**ஈசனிவை யாதும் விளையாடி இடுகின்றான் 10**

**பொழிப்புரை:** *ஒளியோடு விளங்குகின்ற தேர் உடலாகவும், அதை நடத்துகின்ற பாகன் புத்தியாகவும், கயிறு மனமாகவும் அந்தக் கயிற்றினால் கட்டி வருகின்ற குதிரையானது பரம்புகின்ற ஐம்புலன்களாகவும் விடயமாகிய வீதியில் ஆத்மா ஆகிய ஈசன் இவை அனைத்தையும் கொண்டு விளையாடுகின்றான்.*

**யோகமனம் ஒன்றி அறிவாம் உணர்விலானுக்கு**
**ஆகமுறும் ஐம்புல அயங்கள் வயமாகா**
**பாகனை அறிந்த பரிபோல மனனத்தே**
**ஆகும் மதியாளனை அறிந்து வயமாமால் 11**

**பொழிப்புரை:** *ஆத்ம யோகத்தால் மனம் தனித்த அறிவாகிய புத்தி இல்லாதவனுக்கு உடலில் இருக்கின்ற ஐம்புலங்களாகிய குதிரைகள் வசப்படாவாம். பாகனை அறிந்த குதிரையைப் போல மனனத்தின் கண்ணே பொருந்தி இருக்கின்ற விவேகியை அறிந்து வசப்படும்.*

**வருத்த மிலதாம் மனனமற்ற மதிகேடன்**
**பரத்தை யடையான் மிகுபவத்தை அடைகின்றான்**
**ஒருக்கு மனனால் உணர்வு கூடினவன் வீடாய்**
**இருக்குமிடம் மேவி அதில் நின்றும் இளையானால் 12**

**பொழிப்புரை:** *வருத்தமில்லாத மனனம் இல்லாத புத்தி ஈனனாவன் சிவத்தை அடையமாட்டான். மிகுந்த பிறவிகளையே அடைகின்றான். ஒருமைப்படுகின்ற மனத்தினால் ஞானமடைந்தவன் மோட்சமாகிய இடத்தை அடைந்து அவ்விடத்திலிருந்தும் இளைக்கமாட்டான்.*

பொருந்து ஞானமாம் பாகனால் மனத்தளை பூட்டி ஐம்புலப் பாய்மா
பரந்து எழாவகை தன்வசம் ஆக்கினான் பரம்பதம் அடைகின்றான்
திருந்து மாலுடைப் பதமது வதுபரம் சிவனெனும் திருநாமத்து
இருந்தவாறு தானிருந்தவாறு அன்றிவேறு இணையிலா இறையாவான் 13

**பொழிப்புரை:** *பொருந்துகின்ற விஞ்ஞானமாகிய பாகனால் மனமாகிய கயிற்றினைப் பூட்டி, ஐம்புலங்களாகிய குதிரைகள் விரிந்து போகாமல் இருக்கும்படி தன்வசம் செய்தவன் பரமபதம் அடைகின்றான். திருந்திய மாலுடைய பதமும் அதுவே ஆகும். உயர்வாகிய அதுவே சிவனென்னும் திருநாமத்தை உடையவனாய் இருந்தவாறுதான் அப்படி இருந்த சிவபிரானைத் தவிர ஒப்பில்லாத இறைவன் வேறு எவன் இருக்கிறான்.*

அருளதால் உருவொன்றியே நின்றுள அகில நாயகன் என்னும்
பொருளதே பரமாம் பதம் யாவரும் புகலிடம் அதுவாகும்
கருணை மேவிய சிவனொழிந்து உருத்திரன் கண்ணன் நான்முகன் என்பார்
இருளதானதில் பரம்பதம் எனும்படி எங்ஙனே இமையோரே! 14

**பொழிப்புரை:** *திருவருளாகிய பராசத்தியுடன் திருவுருக்கொண்டு எழுந்தருளி இருக்கின்ற அகில நாயகன் என்னும் பொருளே பரம பதமாகும். எவர்களுக்கும் தஞ் சமான இடம் அப்பரமபதமே ஆகும். தேவர்களே! கருணை பொருந்திய சிவனைத் தவிர உருத்திரன், கண்ணன், நான்முகன் என்னும் மூவர்களுக்கும் அஞ்ஞானம் இல்லாத பரமபதம் என்னும் வண்ணம் எங்கே!*

இந்தியங்களில் பொருளெனல் பரம் மனம் இவற்றினும் பரம் அத்தில்
புந்தி நற்பரம் அதிலும் மான் பரம் எலாம் பொன்றிய தெரியாமை
அந்த மானினும் பரம் அவ்வியத்தமாம் அதில் பரம் புருடந்தான்
இந்த மெய்ப்பரம் புருடனில் பரம் பிறிதில்லை மேல் இவனேயாம் 15

**பொழிப்புரை:** *பஞ்ச இந்திரியங்களைவிட விஷயங்கள் சிறந்ததாகும். இவற்றை விட மனம் சிறந்ததாகும் அதனினும் புத்தியானது மிகவும் சிறந்ததாகும் அதனினும் மகத் தத்துவம் சிறந்ததாகும். அனைத்தும் தன்கண் நசித்துறும் அஞ்ஞானமாகிய மாயையானது அந்த மகத் தத்துவத்தைக் காட்டிலும் சிறந்ததாகும். அதனினும் புருடன் சிறந்ததாகும். இந்த உண்மையாய்ச் சிறந்தவனாகிய புருடனைக் காட்டிலும் சிறந்தது வேறில்லை. இந்தப் புருடனே சிறந்தவனாவான்.*

புருடன் என்று உரைசெயப்படுவது பரிபூரணம் ஆகின்ற
சொருபம் நின்றவா நிற்க இங்கு அருளொடு தோன்ற வல்லவன் தானே
அரனுமன்று மால் அயனுமன்று எவர்க்கும் உள்ளாகியே யாவர்க்குந்
தெரியவரும் சிவன் அவனை இங்கு ஒருங்கிய சிந்தையார் தெளிவாரே 16

**பொழிப்புரை:** *புருடன் என்று சொல்லப்படுவது அகண்ட பரிபூரணமாகிய தனது சொரூபமாக விளங்கி நின்றவண்ணம் இருக்கவும் இங்கு கருணையே வடிவமாகிய பராசத்தியோடு விளங்க வல்லவனே ஆவன். அவன், உருத்திரனும் அல்லன் அரி, அயனும் அல்லன். எவர்க்கும் உள்ளானவனாய் எவர்களாலும் அறியக் கூடாத சிவபெருமானே ஆவான். அந்த சிவபெருமானை இவ்விடத்தில் ஒருமைப்பட்ட சித்தத்தை உடையவர்கள் அறிவார்கள்.*

வாக்கது மனத்திடை வைக்கும் அம்மனம்
போக்கிடும் புந்தியுள் புந்தி மானிலே
ஆக்கிடும் அந்தமான் இவை அனைத்தினும்
தாக்கறும் சாந்தமாம் தன்னில் சாந்தமாம் 17

**பொழிப்புரை:** *வாக்கானது மனத்தினிடத்தில் ஒடுங்கும். அந்த மனமானது புத்தியினிடத்தில் ஒடுங்கும். புத்தியானது மகத் தத்துவத்தில் ஒடுங்கும். அந்த மகத் தத்துவமானது இவை எல்லாவற்றிலும் தொடர்பில்லாத சாந்தமாகிய ஆன்மாவினிடத்தில் ஒடுங்கும்.*

ஒலிமுதல் உரைப்பன ஒன்றும் இன்றியே
எலையில தாகி எப்பொருட்கும் மேலதாய்
சலமதின்றி யவது தன்னைத் தம்முளே
நிலைபெற அறிந்தவர் மரணம் நீங்குவார் 18

**பொழிப்புரை:** *ஒலி முதலாகச் சொல்லப்பட்டன ஒன்றும் இல்லாமல் எல்லை இல்லாததாயும் அனைத்திற்கும் உயர்வாயும், சாந்தமாயும் உள்ள அதனைத் தனது இதயத்தின் கண்ணே நிலைபெற உணர்ந்தவர்கள் பிறப்பு இறப்பினைக் கடப்பார்கள்.*

பரப்பினான் இந்தியங்களைப் பார்க்குறப் பரம்பரன் உள்ளாகி
இருத்தலால் அறிவொண்கிலன் புறம்புள இதரமே காண்கின்றான்
திருப்பி ஞான நாட்டத்தினால் அப்பொருள் தெரியவே பெறும் தீரன்
ஒருத்தனே அவிநாசியாம் பரவொளியாய் அவன் ஒளிர்கின்றான் 19

**பொழிப்புரை:** *உலகத்தைக் காணும் பொருட்டு ஐம்பொறிகளையும் விரிவாகப் படைத்தவன் ஆகிய பரமசிவன், உள்ளார்ந்த பொருளாக இருத்தலால் அறிதற்கு அரியவன் ஆதலின் சீவனானவன், புறத்தேயுள்ள பின்னங்களையே பார்க்கிறான். உள்ளே திருப்பி ஞானக் கண்ணால் அந்தப் பரசிவனைக் காணப்பெற்ற தீரனாகிய ஒருவனே நாசம் இல்லாதவன் ஆவான். பிரம்ம சொரூபமாகவும் அவனே பிரகாசிக்கின்றான்.*

பேதமாகி வேறாகிய பொருள்கள்மேல் பேதமை அதனாலே
காதல் மேவினர் காலபாசத்திலே கட்டுணக் கடவாரே
ஆதலால் அழிவின்றிய பொருளிலே அறிஞர் ஆதரித்தல்லால்
ஏதும் ஆதரித்திடாது அவர் அப்பொருள் எய்தியே இருக்கின்றார் 20

**பொழிப்புரை:** *பின்னமாகி வேறாய் இருக்கின்ற பொருள்கள்மேல் பேதமையதனால் காதல் மேவினர். எமனது பாசக்கயிற்றால் பிணிக்கப்படுவார்கள். ஆகையால், நாசமில்லாத பொருளினிடத்தில் விவேகிகள் அன்பு வைப்பதே அன்றி மற்று எதனிடத்தும் அன்பு செய்யாமல் அவ்வறிஞர் அப்பொருளை அடைந்தே இருக்கின்றார்கள்.*

சத்தப் பரிச உரு இரதம் கந்தாதி சமைந்தன முதலால்
எத்தைக் கொண்டு இங்கு அறிகின்றான் அதனை ஒழிய ஏதுளதாம்
அத்தற் பரத்தைக் கண்டிந்த அவத்தை மூன்றும் காணாமை
சித்தித்திருக்கும் அவன் நலமும் தீங்கும் இன்றித் திகழ்கின்றான் 21

**பொழிப்புரை:** *சத்தம், பரிசம், உருவம், இரதம், கந்தம் முதலாகப் பொருந்திய அனைத்தையும் எதனால் இவ்விடத்தில் அறிகின்றானோ அதைத்தவிர யாது இருக்கின்றதாகும். அந்தப் பிரம்மத்தைக் கண்டு இந்த மூன்று அவத்தைகளையும் ஆன்மாவாகிய தன்னிடத்தில் காணாது இருக்கின்ற தன்மை வாய்க்கப் பெற்றிருக்கிற அவன் நன்மையும் தீமையும் இல்லாமல் விளங்குகிறான்.*

மூன்றாகின்ற அவத்தையென மொழியும் புரங்கள் மூன்றுணரும்
சான்றாய் அறியில் அறிகின்ற தன்னில் வேறாகாது அவைதான்
ஊன்றா உணர்வே உருவான ஒளியே உளதாய் வித்தாகித்
தோன்றா நின்றும் தோன்றாது நிகழ்வான் என்றும் சுதந்தரத்தால் 22

**பொழிப்புரை:** *மும்மையாகிய அவத்தைகள் என்கின்ற சாக்கிர சொப்பன சுழுத்தியாகிய முப்புரங்களையும் அறிகின்ற சாட்சியாகத் தன்னைப் பார்த்தால், அவ்வாறு அறிகின்ற தன்னைத் தவிர அந்த மூன்று அவத்தைகளும் வேறாகாது. தள்ளக்கூடாத ஞானமே ரூபமாகிய விளக்கமே இருப்பதாயும், காரணப் பொருளாயும் விளங்கியும் எக்காலத்தும் சுதந்திரத்தினால் தோன்றாமல் விளங்குவான்.*

பரமிகமாய் நிகழ்ந்தது பரம்பொருள்
ஒருபொருள் பிறிதிலை உளதுபோல் பல
கருதுமேல் அவன்கணில் காண்பது எங்கணும்
மரணமே மரணமே மறித்தும் சார்வதே 23

**பொழிப்புரை:** *பிரம்மமே இம்மையிலும் மறுமையிலும் இருப்பதாகி விளங்குகின்றது. அந்த ஒரு பொருளைத் தவிர வேறு ஒன்றும் இல்லை. இருக்கின்றதுபோல் பலவாகக் கருதுவனேல் எங்கும் அவனிடத்தில் காணப்பட்டது மரணமே தான். மறுபடியும் பிறந்து அவனுக்கு மரணமே பொருந்துகின்றது.*

வன்னிதான் ஒருவனாயிருக்க மற்றவன்
துன்னிய உருவமாய்த் தோன்றும் ஆறுபோல்
இன்னது எனாமல் உட்புகுந்து ஏகனாய்
அன்னியன் ஆகி ஒன்றோடும் ஆர்ப்புறான் 24

**பொழிப்புரை:** *நெருப்பானவன் ஒருவனாய் இருக்கவும் அந்த நெருப்பானவன் தான் பொருந்திய பொருள்களின் வடிவமாகக் காணும் தன்மை போல, இன்னதென்று குறிக்கப்படாமல் உடலினுள் புகுந்தும், ஏக சொரூபன் ஆகியும் அன்னிய சொரூபங்களாயும் இருந்து கொண்டும் ஒன்றோடும் சம்பந்தப்படமாட்டான்.*

எல்லாம் வசீகரிப்பானாய் எதுக்கும் உள்ளாம் ஒருவடிவைப்
பல்லாயிரம் கோடிகளாகப் பண்ணாநிற்கும் பரம்பரனை
அல்லாது ஒன்றும இல்லையென அனுபவத்தால் அகத்துஉணர
வல்லார் தமக்குப் பேரின்பம் வடிவாய் மொழியும் மாமறைதான் 25

**பொழிப்புரை:** *அனைத்தையும் தனக்கு வசப்படுத்துகின்றவனாயும், அனைத்திற்கு உள்ளாகவும் இருக்கின்ற ஒரே வடிவத்தை, பல்லாயிரம் கோடி அண்டங்களாகச் செய்கின்ற பரமசிவனைத் தவிர ஒன்றுமில்லை என்று சுவானுபவத்தால் மனத்தில் அறிய வல்லவர்களுக்குப் பேரின்பமே வடிவமாகப் பெருமை பொருந்திய வேதங்கள் சொல்லுகின்றன,*

யாவன் அறியப் படாமையினால் இவ்வேறு உண்டாம் இவ்வேறு எத்
தேவனாலே நிலை பெற்றுச் சேதனங்களாய்த் திகழும்
ஓவல் அறவே அப்பரனை உள்ளத்து உணர்ந்தோர் உள்ளத்தே
தாவில் சாந்தி குடிகொள்ளும் அல்லாதவரைச் சாராதால் 26

**பொழிப்புரை:** *எவன் தானாக உணரப்படாததனால் இந்த வேறுபாடான உலகங்கள் தோன்றுகின்றன. இவ்வுலகங்கள் எந்தத் தேவனால் நிலைபெற்று அறிவுப் பொருளாய் விளங்குகின்றன, அந்தப் பரமசிவனை ஒழிவின்றிப் பத்தியாக மனத்தில் அறிந்தவர்களது இருதயத்தின்கண்ணே குறைவில்லாத சாந்தியானது குடிகொண்டிருக்கும். அவ்வாறு உணராதவர்களிடம் சாந்தி பொருந்தாது.*

இதுவென ஒண்ணாத எல்லையில் பேரின்பத்தை
அதுஇது என்பார்கள் அறிவோ அறியாமையோ அறிவே
எதுவும் இறையால் நிகழ்வது இறைநிகழ்வில் இவையொன்றாம்
மதி பரிதி அனல் ஒளியும் மறுவில் பரனால் ஒளியாம் 27

**பொழிப்புரை:** *அது இது என்று கருதப்படாத அளவில்லாத பேரானந்தத்தை பிரம்மத்தை அனுஷ்டிப்பவர்கள் அது இது என்று அனுபவித்துச் சொல்லுவார்கள். அது இப்பொழுது உள்ளவர்களுக்கு விளங்குகின்றதாக அறியப்படுமோ விளங்காததாக அறியப்படாதோ எனின் அறியப்பட்டதாகும். அனைத்தும் பரமசிவத்தினால் ஒளிர்கிறது. அந்தப் பரமசிவ ஒளியினால் இவைகள் பொருந்தாவாம். சந்திரன், சூரியன், நெருப்பு என்னும் இவர்களது பிரகாசமும் குற்றமற்ற பிரமத்தினால் விளக்கமாகும்.*

அரசது ஒன்று உம்பர் வேராகி நீள்சாகை கீழ்
நிறைசெய்து எங்கணும் நிறைந்து என்றும் நின்று உள்ளதால்
கரையில் அண்டங்கள் எல்லாம் அதன் கண்ணதாம்
ஒரு பரம்பொருள் கடந்திட ஒணாது ஒருவரால் 28

**பொழிப்புரை:** *அரசமரம் ஒன்று மேல்பாகத்தில் வேரை உடையதாகி, நீண்ட கிளைகளை கீழ்பாகத்தில் ஒழுங்காகப் பரப்பிக்கொண்டு எங்கும் நிறைந்து எக்காலத்தும் நின்று உள்ளது. கரையில்லாத அண்டங்கள் அனைத்தும் அந்த மூலப் பிரம்மத்தினிடத்தில் இருக்கின்றதாம் ஒருவராலும் ஏகமான பிரம்ம சொரூபத்தைக் கடக்கக் கூடாது.*

**எச்சகத்தும் சலிப்பிக்கும் ஈசானனாம்**
**வச்சிரத்தைப் பெறுமனிதன் வீடுறும் இவற்கு**
**அச்சமுற்று அங்கி கால் அர்க்கன் இந்திரன் யமன்**
**நிச்சயிப்பான் தம்தொழில் செயா நிற்பரால் 29**

**பொழிப்புரை:** *எந்த உலகங்களையும் சலிக்கச் செய்கின்ற ஈசானன் ஆகிய வச்சிரத்தைப் பெறுகின்ற ஒரு மனிதன் மோட்சத்தை அடைவான். இந்தச் சிவனிடத்தில் பயமுற்று அக்கினி வாயு சூரியன் இந்திரன் எமன் என்னும் இவர்கள் நிச்சயிக்கப்பட்டன ஆகிய தங்கள் தொழில்களைச் செய்கின்றார்கள்.*

**உண்ணாடி யாகத்தின் உணராதவன் தான்**
**உடம்பாம் உடம்புக்குளே காணலாகும்**
**கண்ணாடி போலப் பிராணாதி கத்தைக்**
**கடம்போல் கழித்துக் கழித்தற்ற பின்னைக்**
**கண்ணான பரனன்றி வேறின்மை யால்அக்**
**கண்ணான அனுபூதி ஆகின்ற கண்ணால்**
**எண்ணாரும் வேறின்மை கண்டார்கள் நேரே**
**இறவாது பிறவாது எலாமாய் இருப்பார் 30**

**பொழிப்புரை:** *இந்த உடலுக்கு உள்ளே நாடித் தன்னை அறியாதவனே உடம்பாகக் கொள்வான். கண்ணாடியைப் போலே தனது சரீரத்துள்ளே பார்க்கத்தக்க பிராணன் முதலியவற்றைக் கடத்தைப் போல நீக்கி, அவ்வாறு கழித்து நீக்கிய பின்பு கண்ணான பரனைத்தவிர வேறாக ஒருபொருளும் இல்லாமையால், அந்தக் கண்ணாக ஆனவனது அனுபூதியாகிய கண்ணால் நேரே எண்ணாதவர்களும் வேறுபாடு இல்லாத தன்மையைக் கண்டவர்கள் சகலமும் தானாகி இறவாது பிறவாது இருப்பார்கள்.*

**ஒருவரும் கண்ணாற் காண ஒண்ணும் அதன்று உள்ளத்தால்**
**கருதவும் துணிந்து அங்கு ஒன்றக் கடவதும் அலாது அதைத்தான்**
**சுருதியால் அனுபவத்தால் துணிந்தவர் சுகசொரூபம்**
**மருவியே மாண்டு மீண்டு வரும்வழி மறப்பர் அன்றே 31**

**பொழிப்புரை:** *ஒருவரும் கண்ணால் பார்க்கத்தக்கது அல்ல. மனத்தினால் நினைக்கவும் நிச்சயித்து அங்கு பொருந்தக் கூடுவதும் அல்லாதது. அந்த வடிவத்தை வேதங்களினாலும் அனுபவத்தினாலும் அறிந்தவர்கள் சுக சொரூபத்தை அடைந்து, இறந்து திரும்பவும் பிறக்கும் வழியை மறந்து விடுவார்கள்.*

**வித்தக வேதப் பொருளதாய் ஞான விழியினால் விளங்கிடும் பொருட்கோர்**
**புத்தியினாலும் உள்ளவாறு அறியப் போயிடாதாய் இருந்து உள்ள**
**சத்தி உண்டு அந்தச் சத்தியோடு என்றும் தான் பிரிவின்றி அது அதுவே**
**சத்திய ஞான அனந்த ஆனந்தத் தத்துவம் ஆகியே இருக்கும் 32**

**பொழிப்புரை:** *ஞான வடிவாக இருக்கிற சுருதிப் பொருளாகி ஞானக் கண்ணால் ஒளிர்கின்ற பிரம்மத்துக்கு ஒரு புத்தியினாலும் உள்ளவண்ணம் அறியக் கூடாததாய் இருக்கின்ற ஒரு சத்தி இருக்கின்றது. அந்தச் சத்தியுடன் எக்காலத்தும் தான் பிரிவில்லாமல் இருப்பதாகும். அந்தப் பிரம்மமே சத்தியமாகவும் ஞானமாகவும் முடிவில்லாத ஆனந்த வடிவமாயும் இருக்கின்றது.*

**மெய்யதாம் உருவம் விமலமாம் இறைக்கு விளங்கிய திவ்யமாம் உருவம்**
**வையமாம் உருவம் மற்றும்ஓர் உருவம் மறைமுதல் ஆகவே விளம்பல்**
**செய்யும் நூலெல்லாம் வேறும் ஓருருவம் சிவனுடை வடிவிலை இவற்றில்**
**துய்யதாம் உருவம் சொல்லில் அவ்விறைக்குத் துலங்கிய ஞானமே சொரூபம்**
**33**

**பொழிப்புரை:** *மலம் அற்றவனான பரமசிவனுக்கு உடலுடன் கூடினவன் ஆன சீவன் ஒரு வடிவமாகும். பின்னும் ஒரு வடிவமானது வையமாம் வடிவமாகும். வேதங்கள் முதலாகச் சொல்லுகின்ற சாத்திரங்கள் அனைத்தும் மற்றும் ஒரு வடிவமாகும். இவ்வடிவங்கள் எல்லாம் உண்மையாகச் சிவனுடைய வடிவங்கள் இல்லை. அந்தப் பரமசிவனுக்கு இப்பொழுது கூறிய இந்த வடிவங்களைக் காட்டிலும் துய்யதான வடிவத்தைச் சொல்லுங்கால் ஒளிர்கின்ற ஞானமே வடிவமாகும்.*

**பெரியதாய் எவர்க்கும் உள்ளதாய் உயிராய் நிறைந்துள பிரம சக்கரத்தே**
**திரிதரா நிற்கும் சீவன் இப்பரிசே திரிதரும் இவனையும் திரிக்கும்**
**பரமனாய் உள்ள அவனையும் மனனம் பண்ணி இப்படியிலே பார்ப்பான்**
**ஒருவனே செனன மரணமற்று என்றும் உள்ளதாய் நிகழ்ந்திட உரியான் 34**

**பொழிப்புரை:** *பெரியதாயும் எவர்க்கும் உள்ளதாயும் உயிராதாரமாய் நிறைந்திருக்கின்ற பிரம்மத்தால் உண்டாகிய சம்சார சக்கரத்தில் சீவன் சுழலுகிறான். இவ்வண்ணமே சுழல்கின்ற இந்தச் சீவனையும் சுழற்றுகின்ற பரமனாய் உள்ள அவனையும் மனனம் செய்து இவ்வண்ணமாகப் பார்க்கின்ற ஒருவனே பிறப்பு இறப்பு ஒழிந்து எக்காலத்தும் உள்ள பிரம்மமாகவே விளங்குவதற்கு உரியன் ஆவான்.*

**அறிவனும் அறியாதானுமாய் நிகழ் பரசீவர்க்கு**
**மறையினால் வடிவால் தர்க்க வழியினால் அனுபவத்தால்**
**பிறிவிலை மாயை போக ஏதுவாம் பிரமந் தானிங்கு**
**அறைதரும் எல்லாம் தானாய் அகர்த்துருவாகி நிற்கும் 35**

**பொழிப்புரை:** *அனைத்தும் அறிந்தவனும், மிகக்குறைவே அறிந்தவனும் ஆகி ஒளிர்கின்ற ஈசன் மற்றும் சீவனுக்கு வேதங்களாலும் அவர்கள் சுபாவத்தினாலும் தர்க்க வழியினாலும் அனுபவத்தினாலும் பேதம் இல்லை. மாயையானது போகத்துக்குக்*

*காரணமாகும் இவ்விடத்தில் பிரம்மமானது சொல்லுகின்ற அனைத்தும் தானாயும் அகர்த்தாவாகவும் விளங்குகின்றது.*

நாசமுற்று விடும் மாயை சீவன் நசியான் இரண்டினிலும் நாதனாம்
ஈசன் நிற்கும் இறையைத் தியான பரனாக வந்த இயல்பாலுமே
யோக சத்தின் நிலையாலும் ஏகமெனும் உண்மையாலும் உயிர் முடிவினில்
தேசெனத் திகழும் இங்ஙனே பிறிது செய்த மாயை சிதைவாகுமால் 36

**பொழிப்புரை:** *மாயை நாசத்தை அடையும். சீவனானவன் அழியமாட்டான். இந்த இரண்டினிலும் நாதனாகிய ஈசுவரன் நிற்கின்றான். நாயகனாக இருக்கின்ற பரமசிவனை தியானம் செய்கிறவனாக வந்த குணத்தினாலும் யோக சத்தி நிலையினாலும் அத்துவிதம் என்னும் உண்மையாலும் உயிர் முடிவினில் ஒளி போலத் தோன்றும் இவ்விடத்தில் இரண்டான தன்மையை உருவாக்கிய மாயையும் நாசம் அடையும்.*

ஈசனை அறிந்த அந்த இடத்திலே எண்ணும் எல்லாப்
பாசமும் நசித்தல் தானும் பணியறப் பவத்தின் தீர்வும்
காசுறும் அகிலமாய கங்குலின் கழிவும் தானே
ஆசறும் அகண்ட ரூபியாகையும் அனைத்தும் எய்தும் 37

**பொழிப்புரை:** *பரமசிவனை அறிந்த அந்த இடத்தின் கண்ணே கருதுகின்ற பந்தம் அனைத்தும் நசிப்பதுவும், தொழில்கள் ஒழியும்படி பிறவியின் அழிவும், குற்றம் பொருந்திய உலக மாயையாகிய இருட்டினது தீர்வும் தானே குற்றமில்லாத அகண்ட சொரூபன் ஆதலும் மற்ற அனைத்தும் சித்திக்கும்.*

மேவிய தன்பால் உள்ள மெய்ப்பொருள் ஒன்றும் அன்றி
யாவும் இங்கு அறிய வேண்டா அருந்தும் இப்பொருளும் ஆகி
சீவனாய் உண்பானாகிச் சிவனென ஊட்டுவானாய்
மூவித மாகி நிற்கும் மூலமாம் பிரமம் தானே 38

**பொழிப்புரை:** *பொருந்திய தன்னிடத்தில் இருக்கின்ற உண்மைப் பொருளாகிய ஆன்மாவைத் தவிர வேறு ஒன்றினையும் இவ்விடத்தில் அறிய வேண்டாம். புசிக்கின்ற இந்த அனுபவப் பொருளும் அனுபவிப்பவனாகிய சீவனும் ஊட்டுவிக்கின்ற ஈசுவரனாயும் காரணமாகிய பிரம்மமே மூன்று பிரிவாகி நிற்கிறது.*

தீ மரந்தொறும் அடைந்து அழிவுறாது தெரிவு
ஆகாமைநின்று அரணியால் வடிவு காணும் அதுபோல்
ஆம் உடம்பில் அழிவின்றி மறைகின்ற அமலன்
ஓம்எனும் பொருள் உணர்ந்திட உடம்பில் வெளியாம் 39

**பொழிப்புரை:** *தீயானது மரங்கள் தோறும் இருந்து அழியாமல், கண்ணுக்குப் புலப்படாமல் நின்றும், கடைதலால் அதன் வடிவம் காணப்படுதல் போல உண்டாகிய உடலின்கண் நாசம் இல்லாமல் மறைந்து இருக்கின்ற ஆன்மாவானவன் பிரணவப்பொருளை அறிந்திட உடலில் தெரியவரும்.*

உலத்தலின்றி ஒழிவற்ற பொருளுண்மையது தான்
சலித்தல் இன்றிய தவத்தினவர் தங்கண் எதிரே
திலத்தில் எண்ணெய் அரணிக்கனல் ததித்திகழு நெய்
நிலத்தில் நீரென நிகழ்ந்து வெளியாகி நிலையாம் 40

**பொழிப்புரை:** *நாசம் இல்லாமல் நீங்குதல் இல்லாத பொருளானது, சலனம் இல்லாத தவத்தை உடையவர்களது கண்ணுக்கு முன்பாகவே எள்ளில் எண்ணெய் போலும் அரணியில் அக்கினியில் போலும் தயிரில் விளங்குகின்ற நெய் போலும் பூமியில் நீரைப் போலும் அந்த ஆன்மா விளங்கி வெளிப்பட்டு நிலையாகும்.*

ஆகும் ஞானம் நற்றவ மறையீறு அறை அருத்தமும் அதுவல்லால்
யாக தான புண்ணியங்களால் யோகம் வந்து எய்தும் வந்து எய்துற்ற
யோகம் ஞானம் உள்புகுத்தும் மெய்யுணர்வுதான் உள்ளவாறு உளவாறே
ஏகமான வீடளித்திடும் கருமத்தால் இன்பவீடு எய்தாதே 41

**பொழிப்புரை:** *நல்ல தவபலத்தால் ஞானம் உண்டாகும் உபநிடதங்கள் சொல்லுகின்ற பொருளும் அதுவாகும். அதுவன்றியும் யாகம், தானம் முதலிய புண்ணியங்களால் யோகம் சித்திக்கும். வந்து பொருந்திய யோகமானது ஞானத்தை இருதயத்தில் உண்டாக்கும். அந்த மெய்யுணர்வு தான் எப்படி இருக்கிறதோ அப்படியே அத்துவித முத்தியைக் கொடுக்கும். கருமங்களால் பிரமானந்தமான மோட்சம் கிடைக்காது.*

மிக்க சாந்தராய் நீற்றின் உத்தூளணம் புண்டரம் விளங்கச்செய்
பக்குவர்க்கிது பகரலாம் அல்லது பகர்ந்திடப் படாது என்றும்
தக்க நற்குரவன் தனைச் சிவனெனத்தான் நினைந்திடுவார் உள்
புக்கலாகும் இங்கு உரைத்த மெய்ப் பரம்பொருள் புரணமாய் வெளியாக 42

**பொழிப்புரை:** *மிகுந்த சாந்தர்கள் ஆகி திருநீறு உத்தூளணம், திரிபுண்ட்ரம் விளங்கும்படி தரித்துக் கொள்ளுகின்ற பக்குவமுடைய அதிகாரிகளுக்கு இந்தப் பொருளை உபதேசம் செய்யலாமே அன்றி, எக்காலத்திலும் மற்றையவர்களுக்கு உபதேசம் செய்யக்கூடாது. தகுந்த நல்ல குருவை சிவனென்றே கருதுகின்ற மகாத்மாக்களது இதயத்தில் இவ்விடத்தில் கூறிய உண்மையாகிய பரம்பொருள் பிரகாசமாகவும், வெளியாகவும் செல்லும்.*

அரிய மாமறை வாக்கினால் உங்களுக்கு அறியவும் அறைந்தேன் நான்
தெரியுமாகில் மற்று அவன் தெரியாமையைக் கடந்துபோய்ச் சிந்தைக்குப்
பிரியமாகிய பரப்பிரம்மத்தையே பெற்று மேல் பிறவாமைக்கு
உரியனாகும் என்று உரைத்தனன் உணர்வினால் உலகெலாம் படைத்திட்டான் 43

**பொழிப்புரை:** *நான் அரிதாகிய பெருமை பொருந்திய மறை வசனங்களால் உங்களுக்கு அறியும்படி உபதேசித்தேன். அறியப்படில் அந்த விவேகி அஞ்ஞானத்தைத் தாண்டிப் போய் உள்ளத்திற்குப் பிரியமாய் இருக்கிற சிவத்தையே அடைந்து இனிப் பிறவாமல் இருப்பதற்கு உரியவன் ஆவான் என்று ஞானத்தினால் உலகம் அனைத்தையும் சிருட்டித்த பிரமதேவர் சொன்னார்.*

**கடவல்லியோடு சுவேதாச்சுரமும் உரைத்த பதினொன்றாவது அத்தியாயம் முற்றிற்று.**

**பன்னிரண்டாவது அத்தியாயம்**

# சர்வ சாத்திரார்த்த சங்கிரகம் உரைத்த அத்தியாயம்

வகுத்து நான் உமக்கு உரைத்த நான்மறைகளின் பொருளைத்
தொகுத்து நான்சொலக் கேண்மின் என்று இன்னவா சொன்னான்
உகத்த நான்கையும் ஒன்றதாயிரம் ஒருபகல் நான்
முகத்தினால் பொருள் நான்கும் நான்மறையினால் மொழிவான் 1

**பொழிப்புரை:** *நான் உங்களுக்கு வகுத்துச் சொல்லிய நான்கு வேதங்களின் பொருளை நான் சுருக்கிச் சொல்லக் கேளுங்கள் என்று இவ்வாறு உபதேசம் செய்தார். ஓராயிரம் நான்கு யுகங்களையும் ஒரு பகலாகக் கொண்டு நான்கு முகங்களாலும் நான்கு மகா வாக்கியப் பொருள்களையும் நான்கு வேதங்களால் உரை செய்த பிரமதேவர் ஆனவர்.*

பாடுகின்ற எக்கலையின் பயனும் தெரிந்து பகர்கின்றேன்
ஓடுகின்ற சிந்தை ஒழித்து ஒருப்பட்டு எவரும் கேண்மின் உரை
ஆடுகின்ற நானென்னும் உரைக்கும் அறிவுக்கும் அறிவாய்
நாடுகின்ற உணர்வு ஒன்று உண்டு அதுவே ஆன்மா நமக்கெல்லாம் 2

**பொழிப்புரை:** *சொல்லுகின்ற எல்லா நூல்களின் பொருளும் தெரிந்து யான் உபதேசம் செய்கின்றேன். பொறிவழிச் செல்கின்ற மனத்தை விடுத்து ஒற்றுமைப்பட்டு எல்லோரும் கேளுங்கள். சொல்லுகின்ற அகம் என்னும் சொல்லுக்கும், ஞானத்திற்கும் ஞானமாய்க் கருதுகின்ற ஞான சொரூபம் ஒன்று இருக்கின்றது. அந்தப் பிரம்ம சொரூபமே நமக்கெல்லாம் ஆன்மா ஆகும்.*

மாசது இல்லாப் பரனாகி இருக்கத் தனது மாயையினால்
ஈசன் என்பது அறியாமல் இறந்தான் பிறந்தான் போலிருக்கும்
பாசம் விடுமா நினைவுறுவான் பாரம்பரியத்தால் பண்ணும்
ஆசில் மறையால் ஆசையெலாம் அறலால் சாந்தி ஆதியினால் 3

**பொழிப்புரை:** *குற்றமில்லாத பிரம்மமாகி இருக்கவும் தன்னுடைய மாயையினாலே தான் ஈசுவரன் என்று தெரியாமல் பிறப்பு இறப்புகளை அடைந்தவன் போலிருக்கிறான். அந்தப் பாசங்களை நீக்க நினைவு கொண்டவன் குருபாரம்பரியமாக அத்தியாயனம் செய்கின்ற வழுவில்லாத வேதங்களாலும் ஆசை எல்லாம் நீங்குதலாலும் சாந்தி முதலியவற்றாலும்.*

பத்தியால் குரவன் பாதம் பணிந்து வேதாந்தம் பன்னும்
சுத்தமா வாக்கியத்தால் துணிந்த அப்பொருளைத் தூய
புத்தியால் துணிந்து கொண்டு அப்பொருள் அனுபோகமாகச்
சித்தியா நிற்கும் ஐக்யம் சிவபதம் தனையே சேரும் 4

**பொழிப்புரை:** *பக்தியினால் சத்குருவின் திருவடிகளை வணங்கி உபநிடதங்கள் சொல்லுகின்ற பரிசுத்தமாகிய மகாவாக்கியங்களால் நிச்சயித்த அந்தப் பிரமத்தை தூய்மையுடைய புத்தியினால் நிச்சயித்து அந்தப் பொருள் சுவானுபோகம் ஆகுங்கால் ஐக்கியமானது சித்திக்கும். அதனால் சிவபதத்தையே அடைகுவான்.*

ஊனில் ஒருபற்றும் உளனன்றி உடல் நிற்கும்
நானென விளம்புதனை நற்சிவம தாகத்
தானறியு மாகிலொருவன் தன் உருவாகும்
ஞான பரிபூரண நலந்தனை அடைந்தான் 5

**பொழிப்புரை:** *ஒருவன் உடலினால் ஒருபற்றும் உடையவன் ஆகாமல், இவ்வுடலின் கண்ணே நிற்கின்ற நான் என்று சொல்லுகிற தன்னை நல்ல சிவமாகவே தான் அறிவானேல் தனது சொரூபமாகும் பரிபூரண ஞானமாகிய நன்மையை அடைந்தவன் ஆவான்.*

செறிவாய் எங்கும் திகழ்ந்துள்ள சிவன் நானென்னும் திகழ்வுற்றான்
நெறியால் நிகழும் நிகழ்வெல்லாம் நிமல மாயே நிகழ்ச்சி தரும்
அறிவாய் அறியாமையும் ஆகி அறிவிப்பவனாய் அறிவானாய்ப்
பிறிவாய் உளதாய் இலதாயும் பிரமம் ஒன்றுமே பிறழும் 6

**பொழிப்புரை:** *எங்கும் நிறைந்து விளங்குகின்ற சிவனே நான் என்னும் விளக்கம் உடையவனுக்கு வரிசையாக விளங்குகின்ற விளக்கம் அனைத்தும் நின்மலமாகவே விளங்கும். ஞானமாயும் அஞ்ஞானமாயும் அறிவிப்பவனாயும் அறிபவனாயும், பின்னமாயும், இருக்கின்றதாயும், இல்லாததாயும் பிரம்மம் ஒன்று மாத்திரமே விளங்கும்.*

அடையவும் பிரமமே என அறிந்துளோன்
அடைவது அங்கு அதனையே ஆகும் அன்றியே
இடையிலோர் மாயை உண்டென்ன எண்ணுமேல்
கடையதேயாம் அவன் கற்ற கல்வியே 7

**பொழிப்புரை:** *அனைத்தும் பிரம்மமே என்று உணர்ந்தவன் அடைவதும் பிரம்மத்தையே ஆகும். இவ்வாறன்றி, இடையில் ஒருமாயை இருக்கின்றதென்று கருதுவானாயின் அவன் கற்ற கல்வியெல்லாம் இழிந்ததே ஆகும்.*

மாயை என்று ஒன்று உண்டாக மதிப்பது மனனமல்ல
ஆயினும் அகண்ட ஞான அங்கமாம் இந்த ஞானம்
காயம் வேறாகும் என்கை காரணமாக வித்தைத்
தூய நான்மறைகள் ஓதும் துவந்துவம் தீர்க்கை சுட்டி 8

**பொழிப்புரை:** *மாயை என்று ஒன்று இருக்கின்றதாகக் கருதுவது மனனம் அன்றாகும். அவ்வாறாயினும் இந்த ஞானமானது அகண்ட ஞானத்திற்கு அங்கமாகும். உடல் வேறாகும் பிரம்மத்தை அடைவதற்குக் காரணமாக இருமையை நீக்குவது குறித்து இதனைப் புனிதமாகிய நான்கு வேதங்களும் சொல்லும்.*

யாதொரு படியில் தோன்றும் இயல்பினால் சகத்துக்கு உண்மை
ஓதியது உபநிடந்தான் ஓர்விடத்து உண்மையாகப்
பேதமாம் உலகு தோன்றில் பிறப்பதற்கு ஏதுவாகும்
ஈதெலாம் இல்லை என்னல் இன்பத்துக்கு ஏதுவாகும் 9

**பொழிப்புரை:** *எவ்வாறு தோன்றுகின்றதோ அத்தன்மையைக் கொண்டே உபநிடதம் சகத்தினுக்கு உண்மைத் தன்மையைக் கூறிற்று. கருதும் இடத்தில் உண்மையாக பேதமான உலகம் தோன்றினால் பிறப்பதற்குக் காரணம் ஆகும். இவை அனைத்தும் இல்லை என்பதுவே பேரின்பத்துக்குக் காரணமாகும்.*

ஆகையால் அகிலத்தையே மாயை என்றாக மெய்யாய் வந்த
மோக மாற்றுதல் பொருட்டு ஒரோவிடத்திலே மொழிந்தது முதுவேதம்
பாகமாகிய சித்தரைக் குறித்து மெய்ப்பரம்பொருள் ஆகின்ற
வேகமே நிகழ்கின்ற தெல்லாமென இயம்பியது இதயத்தால் 10

**பொழிப்புரை:** *ஆதலால் மெய்யாகப் பொருந்திய மோகத்தை மாற்றும் பொருட்டு உலகத்தை மாயை என்று ஒவ்வொரு இடத்திலும் பழமையான வேதம் கூறியது பரிபக்குவ சித்தம் உடையவரைக் குறித்து விளங்குகின்ற அனைத்தும் மெய்ப்பரம் பொருளாகிய பிரம்மமே என்று இருதயத்தினால் கூறிற்று.*

மெய்யை நாடில் மெய்ப்பரம் அலால் விச்சையும் அவிச்சையும் வேறேயோ
வையமானதும் மற்றொரு பொருள்களும் இல்லையாம் மனனஞ்செய்
துய்ய யோகிமுன் எப்படி எப்படித் தோற்றுகின்றது தோற்றம்
செய்யும் யாவையும் சிவன் வடிவாகவே திகழ்ந்திடும் திடமாக 11

**பொழிப்புரை:** *உண்மையை நாடில் மெய்யாகிய பிரம்மத்தைத் தவிர வித்தையும் அவித்தையும் வேறோ? உலகமும் வேறொரு பொருள்களும் வேறாக இல்லை பரிபூரணன் ஆதலால் எக்காலத்தும் ஞான சொரூபமே இருக்கின்றது இடைவிடாமல் எங்கும் நிறைந்த யோகியானவன் அலை இல்லாத கடலைப் போன்றவன் ஆவான்.*

யாதொரு படியில் தோற்றம் என்றியம்பியது முன்னை
வாதனை அதனைப் பற்றியல்லது மற்றொன்றில்லை
போதமே உள்ளது என்றும் பூரணன் ஆகையாலே
ஓதமில் வேலை போலும் ஒழிவற நிறைந்த யோகி 12

**பொழிப்புரை:** *எவ்வாறு விளங்குகின்றதோ என்று சொல்லியதும் முன்னை வாசனையைப் பற்றியே அன்றி வேறொன்றில்லை பரிபூரணன். ஆதலால் எக்காலத்தும்*

ஞான வடிவமே இருக்கிறது. இடைவிடாமல் எங்கும் நிறைந்த யோகியானவன் அலை இல்லாத கடலைப் போலாவான்.

**அப்படி இருந்த யோகி அனுபவத் தன்மை தானும்**
**எப்படி என்று காணான் ஈசன் மால் நானும் காணோம்**
**செப்பிட அறியா வேதாகமங்களும் சிவனார் மேனி**
**எப்படி என்னின் மற்று அப்படியிலே இருந்ததென்னும் 13**

**பொழிப்புரை:** *அவ்வாறு இருந்த யோகியானவன் அனுபவத்தன்மையை எவ்வாறு என்று தானும் அறியமாட்டான். ஈசுவரனும் திருமாலும் நானும் காணமாட்டோம். வேதங்களும் ஆகமங்களும் சொல்ல அறியாதனவாகும். சிவனார் மேனி எவ்வண்ணம் இருக்கின்றது என்றால் அவ்வண்ணமே இருக்கின்றதென்று அவ்வேதாகமங்கள் சொல்லும்.*

**அம்பிகாபதி அறியும் இவ்வனுபவம் அவன் அருளாகும் அக்**
**கொம்பனாள் அறிந்திடும் திருவருளையே கோலமாய்க் கொண்டு அந்த**
**எம்பிரான் அருளால் அரி நாம் பிறர் யாவரும் அறிவோம் அத்**
**தம்பிரான் அறிந்தமை எவரால் எனச் சங்கையும் தகுமோதான் 14**

**பொழிப்புரை:** *இந்தச் சுவானுபவத்தை உமாபதியாகிய சிவபெருமான் அறிவன். அவரது திருவருளே வடிவமாகிய அந்தப் பார்வதி தேவியும் அறிவாள். திருவருளையே அழகாக அடைந்து அந்த எம்பெருமானது திருவருளால் திருமாலும் யாமும் மற்ற எல்லாரும் அறிவோம் அந்தச் சிவபெருமான் உணர்ந்தது யாரால் என்று சங்கிக்கும் செய்கையும் கூடுமோ?*

**ஞானமாகிய விழியினால் குருபரன் நயந்து நோக்கிட உண்டாம்**
**ஆனுபூதி யாதொன்று அதுவே சிவனாவது அப்படி உள்ள**
**மேனிதான் வினையொத்த அப்பொழுதிலே வெளிப்படும் வெளிகாணல்**
**ஆன தேசிகன் தன்னை அப்பரம்பொருள் என்ன ஆதரம் செய்வான் 15**

**பொழிப்புரை:** *ஞானமாகிய விழியினால் குருபரன் கருணை கூர்ந்து நோக்கிட உண்டான சுவானுபூதி யாதொன்று உண்டோ அதுவே சிவசொரூபம் ஆகும். அச்சிவமாய் இருக்கிற திருமேனியானது புண்ணிய பாவங்கள் ஒத்த காலத்தில் வெளியாகும். வெளியில் காணும்படி தோற்றிய குருவை, அந்த்ச் சிவபெருமானே என்று ஒருவன் அன்பு செய்யக் கடவன்.*

**நேச நெஞ்சினால் தனக்கது நினைவல ஆயினும் நெறியென்றே**
**தேசிகன் திருவுள்ளமே செய்குவான் செனித்திடும் குலத்துக்கு**
**மாசதாயினும் ஆச்சிரமத்திலே வழுவினும் உலகெல்லாம்**
**ஏசி வீடினும் அறம் புகழ் தனம் பிற இழப்பினும் இடரேனும் 16**

**பொழிப்புரை:** *தான் பிறந்த குலத்துக்குக் களங்கம் வருவதாய் இருக்கினும், ஆச்சிரமத்திலிருந்து வழுவினாலும் உலகத்தோர்கள் எல்லாரும் நிந்தித்துத் தள்ளி*

*விடுத்தாலும், அறத்தையும் புகழையும், செல்வத்தையும் மற்ற அனைத்தையும் இழந்தாலும், துன்பமாய் இருந்தாலும், தனக்கு அவ்வாறு இருப்பது கருத்து அன்றாயினும் அன்பு பொருந்திய மனத்தினால் இதுவே நமக்கு நல்ல வழியென்று பரம தேசிகரது திருவுள்ளம் போலவே செய்யக்கடவன்.*

தேசிகன் திருவுள்ளம் உண்டாக அச்சிவன் திகழ்ந்திடுகின்றான்
ஈசன் இங்கு அருள்செய்ய வந்திருக்கின்ற இடம் இவன் திருமேனி
மாசது ஒன்று இவனளவிலே செயில் எரிவாய் நரகினில் பூத
நாசம் எவ்வளவு அவ்வளவும் செல நண்ணும் நன்னெறி நண்ணான் 17

**பொழிப்புரை:** *குருவினது கருணை மிகுந்த திருவுள்ளம் ஒருவனிடத்தில் உண்டானால் அவனுக்கு அந்தச் சிவபெருமான் விளங்குகின்றான். சிவபெருமான் இவ்விடத்தில் திருவருள் செய்ய வந்து அமர்கின்ற இடம் இந்தக் குருவினுடைய திருமேனியே ஆகும். ஒரு குற்றமாயினும் இந்தத் தேசிகனிடத்தில் செய்தால், பூதங்கள் எல்லாம் அழிவதற்கு எத்தனை காலம் இருக்கின்றதோ, அத்தனை காலமும் செல்லும் வரைக்கும் எரிவாய் நரகங்களில் அடைந்து கிடப்பான் நல்ல மார்க்கத்தில் வரவேமாட்டான்.*

அருவெனும் அமலன்தான் அருளிலன் எனினும் சார்
குருபரன் அருள் உண்டே எனில் ஒரு குறையுண்டோ
திருவடி தரவந்தார் திருவுளம் இலர் என்றால்
ஒருவரும் இலர் கண்டீர் உறுதுயர் களைகின்றார் 18

**பொழிப்புரை:** *அரூபனாகிய சிவபிரான் திருவருள் செய்யாவிட்டாலும் பொருந்திய குருவின் திருவருள் உண்டென்னில் ஒரு குறையுமில்லை. திருவடி சூட்ட எழுந்தருளிய குரு திருவுளம் இரங்கிக் கருணை செய்கிலர் எனில் உற்ற துன்பங்களை ஒழிப்பார் வேறு ஒருவரும் இல்லை பாருங்கள்.*

உறுவது தனில் வேறாய் உளதல அதுநேரே
பெற அருள் பெரியோனே பெருகிய குருவாவான்
நெறி உடல் உளம் நாவால் நிலைபெற வழிபாடே
செறிபவன் அருளாலே சிவகதி அடைவானால் 19

**பொழிப்புரை:** *தான் அடையும் பொருள் தன்னைக் காட்டிலும் வேறாய் இருக்கின்றது அல்ல. அதனை நேரே அடையும்படி அருள்கின்ற உயர்ந்தவனே அருள் பெருகிய குருமூர்த்தி ஆவன். ஒழுங்காக காயத்தினாலும் மனத்தினாலும் வாக்கினாலும் நிலைபெற பணிவிடை நெருங்கிச் செய்பவன் குருவின் திருவருளால் மோட்சத்தை அடைவான்.*

இந்த இடும்பை உடம்பு உறும் ஏதுத்
தந்தை எனப்புகழ் கின்றிலர் தக்கோர்
அந்த மிலாத அகண்டமும் நம்முள்
தந்தவர் தந்தை எனச்சமை வுற்றார் 20

**பொழிப்புரை:** *இந்த துன்பமாகிய உடல் உண்டாவதற்குக் காரணமாகிய தந்தையை அறிஞர் குரு என்று புகழ மாட்டார்கள். முடிவில்லாத அகண்ட சொரூபத்தை தமது இதயத்தின்கண்ணே விளங்கும்படி அருள் செய்தவரே குருவென்று கருதி இருக்கிறார்.*

**உண்டுபோல் தோன்றும் உலகெலாம் உண்மை அன்றென உணர்த்தி எப்பொருளும்**
**கண்டசான் றதனைக் காட்சியது அறவே கண்டிடக் கரியெனக் காட்டும்**
**பண்டை வேதாந்த வாக்கியம் சொன்ன படியிலே பரமனோடு ஒன்றாய்**
**விண்டிடா வண்ணம் உணர்த்துவான் தன்னை வியன்குரு என்றிடும் வேதம் 21**

**பொழிப்புரை:** *இருக்கின்றது போன்ற உலகங்கள் எல்லாம் உண்மையல்ல என்று அறிவித்து எல்லாப் பொருள்களையும் காண்கின்ற சாட்சியை, காட்சியது அறவே கண்டிட சாட்சியாகத் தெரிவிக்கின்ற பண்டை வேதாந்த வாக்கியம் கூறியபடியே பிரம்மத்தினோடு ஒன்றாகிப் பிரியாதபடி உபதேசிப்பவனையே சுருதியானது, பெருமை பொருந்திய குரு என்று சொல்லும்.*

**காட்சியை எல்லாம் கண்ணதாய்க் கரைத்துக் கண்ணொழிந்து ஒரு பொருளில்லா**
**மாட்சியை அளிக்க வல்லவன் குருவாம் மாரிபோல் மாறு வேண்டாதே**
**மீட்சியில் பதத்தைக் கருணையால் அளிக்கும் வித்தகக் குரவனே எவரும்**
**தாட்சி செய்து ஏத்தற்குரிய தத்துவமாம் சங்கரன் என்றிடத் தகுவான் 22**

**பொழிப்புரை:** *காட்சிகளை எல்லாம் கண்ணாகும்படி செய்து கண்ணைத் தவிர வேறொரு பொருளும் இல்லாத பெருமையைக் காக்கும் திறம் உடையவனே குரு ஆவான். மேகங்களைப் போல் கைம்மாறு கருதாமல் திரும்புதல் இல்லாத பதவியைத் திருவருளால் கொடுத்து அருள்கிற ஞானாசிரியரே, எல்லோரும் தாழ்ந்து துதித்தற்குரிய தத்துவ சொரூபியாகிய சங்கரன் என்று சொல்லத்தகுவான்.*

**வருபிறப்பு அறவே வேண்டினான் மறை ஈறென்னும் அம்புயத்தினை மலர்த்தற்கு**
**இரவியாய் நெஞ்சிற்கு இசைந்த நற்குருவை யாதொரு வழியினால் இறைஞ்சி**
**அருள் சுரந்திடுவோர்க்கு ஆவதே செய்வான் அருமறை முடிவெலாம் அறையும்**
**பொருளை நேராக உமக்கு எனக்கு ஈசன் புகன்ற அப்படியிலே புகன்றேன் 23**

**பொழிப்புரை:** *மறுபடியும் நண்ணுகின்ற பிறவி நீங்கக் கருதியவன், வேதாந்தம் என்னும் தாமரையை மலர்த்தற்குச் சூரியனாகி உள்ளத்திற்கு இசைந்த சற்குருவை எந்த மார்க்கத்தாலும் வணங்கிக் கருணை பொழிகின்ற அந்தத் தேசிகருக்கு வேண்டிய பணிவிடையே செய்யக் கடவன். உபநிடதங்கள் எல்லாம் விளம்புகின்ற பொருளை ஒழுங்காக எனக்குச் சிவபெருமான் உபதேசித்து அருளிய அவ்வண்ணமே உங்களுக்குச் சொன்னேன்.*

**எல்லாம் அறிவானாய் இல்லாது இல்லானாகி எல்லாந்தான்**
**வல்லானாகித் தீங்கொன்று மருவானாகி வடிவருளே**
**அல்லாது இலனாம் இறை உண்மையன்றிச் சொல்லான் அப்பொருளில்**
**சொல்லாதில்லை உங்கட்குச் சொன்னேன் எல்லாம் சுருக்காக 24**

**பொழிப்புரை:** *எல்லாம் அறிவானாய் தனக்கு இல்லாதன இல்லாதவனாயும், எல்லாம் வல்லவனாயும் ஒரு தீங்கும் இல்லாதவனாயும் திருவருளே தன் வடிவமன்றி வேறு இல்லாதவனாயும் விளங்குகின்ற சிவபெருமான், உண்மை அன்றி வேறொன்றினை எனக்கு உபதேசம் செய்யமாட்டான். நான் உங்களுக்கு அந்தப் பொருளில் சொல்லாதது இல்லை. சங்கிரகமாக அனைத்தையும் உபதேசித்தேன்.*

போத வடிவாய் அகண்ட பூரணனாம் சிவனுக்கு
யாதும் உளங்கைக் கனியாம் இவனருளின் படியொழிய
வேதமுடியில் பொருள்தாம் வேண்டியவா விளம்பியிடும்
பாதகர்போய் ஏறவொண்ணாப் பாழ்ங்கிணற்றில் வீழ்வர்களால் 25

**பொழிப்புரை:** *ஞானமே வடிவமாகி அகண்ட பரிபூரணனாம் சிவபிரானுக்கு எல்லாம் உள்ளங்கனி நெல்லிக்கனி போல விளங்கும். இந்தச் சிவபிரான் உரைத்து அருளிய வண்ணம் அன்றி உபநிடதங்களில் தாங்கள் கருதியவாறு பொருள் விளம்பியிடும் பாவிகள் சென்று கரையேற முடியாத பாவமாகிய பாழ்த்த கிணற்றில் விழுவார்கள்.*

ஆதிவேதாந்தப் பொருளை அத்துவிதமாம் படிக்கு அகில நாயகனாம்
சோதி பாதப்போது இரண்டையும் தொட்டுச் சூழுகேன் என்று அயன் சொல்லிக்
காதலால் பிறவிக்கு அவுடத முக்கண் கடவுளைக் கருத்தில் வைத்தவன் தன்
பாதமே பணிந்து பரவி இப்பரிசே பத்தியால் பரவசன் ஆனான் 26

**பொழிப்புரை:** *ஆதியாகிய வேதாந்த அர்த்தத்தை அத்துவிதமாக அகில நாயகனாகிய சிவ பெருமானுடைய திருவடித் தாமரைகள் இரண்டையும் மடித்துக் கொண்டு கருதிச் சொல்லுகிறேன் என்று பிரம்மதேவர் கூறி காதலால், பிறவியாகிய நோய்க்கு மருந்து போன்ற முக்கண் கடவுளைக் கருத்தில் வைத்து அந்த எம்பிரானது திருவடிகளைப் பணிந்து துதித்து இவ்வாறே சிவபத்தியினால் பரவசரானார்.*

தேவரும் தேவதேவர்க்குந் தேவாம் திரியம்பகன் தனைத் தெண்டனாகப்
பூவிலே விழுந்து போற்றியே உருகிக் கிடந்த அப்பொழுதிலே புத்தேள்
மூவரும் அறியா முதல்வனாம் இறைவன் மூர்த்தியாய் முழுந்திய அருளால்
காவியங் கண்ணி பங்கனாய் வந்து தோன்றினான் கண்ணினாற் காண 27

**பொழிப்புரை:** *அப்போது தேவர்கள் எல்லோரும் தேவாதி தேவர்க்குத் தேவராகிய முக்கண் கடவுளைப் பூமியின் கண்ணே வணங்கி பணிந்து போற்றி, மனமுருகி எழுந்திராமல் கிடந்த அக்காலத்திலே மும்மூர்த்திகளாலும் அறியக்கூடாத அதிபராகிய மகாதேவர் பரிபூரணமாகிய திருவருளால், தேவர்கள் கண்களால் தரிசிக்கும்படி மூர்த்தியாகி அழகிய உமையை ஒருபாகத்தால் உடையவராய் வந்து தோன்றினார்.*

மாலும் அவ்விடத்தே திருவொடும் கூட மகிழ்தரு மனத்தொடும் வந்தான்
நாலுதிக்கிலும் பூமாரியாய்ப் பொழிய நாமசங்கீர்த்தன நாதம்
மேலெடுத்து எங்கும் விளங்கும் அப்பொழுதில் விளங்கிய பிரமன் மாலவனும்
சாலுமெய்ப் பத்தியோடும் அர்ச்சித்தார் சங்கரன் அம்புயத் தாளில் 28

**பொழிப்புரை:** *திருமாலும் அவ்விடத்தில் திருமகளுடனே மகிழ்தரு மனத்தோடு வந்தான். நான்கு திசைகளிலும் பூமாரி பொழிய சிவநாம சங்கீர்த்தனம் செய்யும் நாதமானது அண்ட சராசரங்களில் நிறைந்து விளங்குகின்ற அக்காலத்தில், ஒளிர்கின்ற பிரம்மதேவரும் திருமாலும் உண்மையான அன்போடு சங்கரரின் திருவடித் தாமரைகளை வணங்கி வழிபாடு செய்தார்கள்.*

தெரியில் வடிவேதும் ஒரு பொழுதிலாத சிவனும் அருள்மேனி திகழவே
அரியதனை நாடி அறியும் அதனால் அவ்வதிசயமொடு ஆடி அருளினான்
உரிய அனுபூதி உடைய விழியால் அவ்வுமையும் அயன் ஆதி உணரவே
அருள் செய்தனள் ஈசனரிய திருமேனி அமரரெதிர் காண அருளினால் 29

**பொழிப்புரை:** *பார்க்குங்கால் ஒரு வடிவம் ஒருபொழுதினும் இல்லாத மகாதேவரும் அருள்வடிவம் விளங்கும்படி, ஒருவராலும் அறிதற்கு அரிய தன்னைக் கருதி அறியும் தன்மையினால் அந்த அதிசயத்துடனே திருநடனம் செய்து அருளினார். உரிய அனுபூதியுடைய விழியால் உமையும், சிவனது அருமையான திருமேனியை அருளினால் பிரம்மன் முதலிய தேவர்கள் நேரே தரிசிக்கவும் அறியவும் திருவருள் செய்தாள்.*

அந்த மறையீறு தந்த பரஞான அங்கண் அதனாலும் அன்றியே
இந்த விழியாலும் அந்த இமையோர்கள் எங்கள் பெருமானை எய்தினார்
சந்தமறை பாடி நின்றனர்கள் ஆதி சம்பு திருநாமமாம் எழுத்து
ஐந்தும் உரையாடி அன்பினொடு பூசை அங்கு நனிமேவி அண்டர்தாம் 30

**பொழிப்புரை:** *அந்த உபநிடதங்கள் தந்த பிரம்ம ஞானமாகிய அழகிய விழியினால் பார்ப்பதும் அன்றி இந்த ஊனக்கண்ணினாலும் அந்தத் தேவர்கள், எங்கள் நாயகராகிய மகாதேவரை நெருங்கினராகி, அழகிய வேதங்களைச் சொல்லி முதல்வராகிய சங்கரருடைய திருநாமமாகிய ஐந்தெழுத்தினைச் சொல்லித் துதித்து பக்தியோடு அவ்விடத்தில் மிகவும் பூசனை செய்து பொருந்தி அத்தேவர்கள் நின்றார்கள்.*

அமையா அன்பாய் நின்றோரைப் பார்த்து ஐயம்போய்
நமையே எய்தப் பெற்றீரே என்றனன் நாதன்
உமை என்னருளால் வந்ததிதே என்று உரைசெய்தாள்
இமையொர் எல்லாம் என்புருகிக் கொண்டு இன்புற்றார் 31

**பொழிப்புரை:** *ஒருநாளும் பொருந்தாத பேரன்போடு நின்ற தேவர்களைப் பார்த்து நாதன் ஐயம் நீங்கி, நம்மையே அடையப் பெற்றீர்கள் என்று திருவாய் மலர்ந்து அருளினார். பார்வதி தேவியும் நமது திருவருளால் இந்தப் பாக்கியம் உங்களுக்குக் கிடைத்தது என்று திருவாய் மலர்ந்து அருளினாள். இதைக் கேட்ட தேவர்கள் எல்லாரும் எலும்புகள் உருகப் பேரின்பம் அடைந்தார்கள்.*

தொல்லை வேதமும் சொல்லுதற்கரிய இத்தோன்றல்
நல்லன் ஆயினன் உமக்கென நாரணன் நவின்றான்
எல்லைதீர் கருணாகரன் ஆகிய இறைவன்
சொல்லுவான் அருள் கீதையின் பலமெலாம் தொகுத்து 32

**பொழிப்புரை:** *அனாதியான வேதங்களும் விளம்பமுடியாத இந்த மகாதேவர் உங்களுக்கு நல்லவராய் வெளிவந்து அருளினார் என்று நாரணன் கூறினார். அளவில்லாத கருணை கொண்ட மகாதேவர் தாம் அருளிய பிரமகீதையின் பலம் அனைத்தையும் சுருக்கித் திருவாய் மலர்ந்து அருளினார்.*

பரமமாம் இந்தக்கீதை படிப்பவன் பாரின்மீதே
திருவினால் முகுந்தன் ஒக்கும் தேசினால் இரவி ஒக்கும்
மருவுமாம் எனையே வந்து மாசிலா விஞ்சையாகும்
உருவமாம் உமையும் என்றும் அவனுளத்து உறையா நிற்கும் 33

**பொழிப்புரை:** *சிறந்ததாகிய இந்தப் பிரமகீதையைப் படிக்கின்றவன், புவியின் கண்ணே அழகினால் திருமாலுக்குச் சமானம் ஆவான் ஒளியினால் சூரியன் போலாவான், அவன் என்னை வந்து அடைவான். குற்றமில்லாத வித்தியா சொரூபியாகிய உருவத்தோடு கூடிய பார்வதி தேவியும் எக்காலத்தும் அவன் உள்ளத்தின்கண்ணே விளங்குவாள்.*

பிரமனால் நீங்கள் பெற்ற இக்கீதை கீதைகட்கு எல்லாம்
பரமமாய் வேதாகாரம் ஆதலினால் படிக்கலா மறையவர் தமக்கே
சுருதியாதலினால் சூத்திராதிகளால் சொல்லலாகாதென அருளிப்
புரணமாய் எல்லாக் கரணமும் கடந்த போத இன்பத்தினுட் புக்கான் 34

**பொழிப்புரை:** *பிரம்ம தேவரால் உமக்கு உபதேசிக்கப்பட்ட இந்தக் கீதையானது சொல்லிய மற்றுமுள்ள கீதைகள் அனைத்திற்கும் உயர்வாயும் வேத சொரூபமாயும் இருத்தலால் வேதியர்கட்கே வாசிக்க உபயோகம் ஆகும். சூத்திரர் முதலானவர்களால் சொல்லக்கூடாது என்று திருவாய் மலர்ந்து அருள் செய்து பரிபூரணமாய் எல்லாக் கரணங்களையும் கடந்து இருக்கின்ற ஞான ஆனந்துத்துள்ளே மறைந்து அருளினார்.*

மாலும் மாதுடனெ வானவர்க்கருளி மகிழ்ந்து வைகுண்டமே அடைந்தான்
மேலை வானவரை நீத்து அயன் பரமன் மேனியே நோக்கி மீண்டிருந்தான்
ஞாலமால் விட்டு ஞான தற்பரராய் நான்முகன் தன்முனே தண்டம்
போலவே பணிந்து வானவர் தந்தம் பொன்னகர் நோக்கியே போந்தார் 35

**பொழிப்புரை:** *தேவர்களுக்கு அருள்செய்து திருமாலும் திருமகளோடு மகிழ்ந்து வைகுண்டத்துக்கு ஏகினார். மேன்மையாகிய தேவர்களை விடுத்து பிரமதேவர் சிவபிரானின் திருமேனியையே பார்த்துத் திரும்பியிருந்தார். தேவர்கள் புவிமயக்கத்தை விட்டு ஞானபரராகி பிரமதேவன் முன்பாக விழுந்து வணங்கி தங்களுடைய தேவலோகத்தைக் கருதிப் போனார்கள்.*

உத்தமமான கீதை உரைத்தனன் உவகையோடும்
பத்தியால் கேட்பார்க் கென்றும் பகர்ந்திடப்படும் ஈதென்று
சுத்த வேதியர்க்குச் சொல்லிச் சூதனும் ஞானக் கண்ணான்
முத்தியாம் உருவே நோக்கி மோனமே அடைந்திருந்தான் 36

**பொழிப்புரை:** *உத்தமாகிய பிரமகீதையை உவகையோடு உரைத்தேன். அன்புடன் கேட்பவர்களுக்கு எக்காலத்தும் இது சொல்லக்கூடும் என்று புனிதர்களாகிய வேதியர்க்கு எல்லாம் உபதேசித்து சூதமகா முனிவரும் ஞானக் கண்ணால், மோட்சமாகிய உருவத்தையே நோக்கி மௌனத்தையே அடைந்திருந்தார்.*

**இனியனாய் எல்லாம் தன்பால் இறைவனின் அருளால் பெற்ற**
**முனிவனை முனிவரெல்லாம் முடியுற வணங்கி ஏத்தி**
**நனிமிக நானென் கின்ற பதப்பொருள் நாடி வேறோர்**
**அனியமில் பிரமமாக அறிந்து அதிசயித்திருந்தார்**

**பொழிப்புரை:** *இறைவன் இன்னருளால் மேன்மை உடையவராகி அனைத்தும் தன்னிடத்தே பெற்ற சூத முனிவரை மாதவர் அனைவரும் தலையால் பணிந்து வணங்கி நனிமிகும் நான் என்கின்ற பதப்பொருளை நாடி வேறு ஒரு பின்னப் பொருள் இல்லாத பிரம்ம வடிவமாகவே உணர்ந்து அதிசயம் அடைந்திருந்தார்கள்.*

**பிரமகீதை சம்பூரணமாக முற்றுப் பெற்றது.**



# கோவிலூர் மடாலய வெளியீடுகள்

| | |
|---|---|
| **திருக்குறள் எளிய உரை** | 60.00 |
| உரையாசிரியர்: முனைவர் இ. சுந்தரமூர்த்தி | |
| முன்னாள் துணைவேந்தர் தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர். | |
| ஸ்ரீ–ல–ஸ்ரீ தாண்டவராய சுவாமிகள் அருளிய | |
| **கைவல்ய நவநீதம்** ஸ்ரீ–ல–ஸ்ரீ பொன்னம்பல சுவாமிகள் உரையுடன் | 300.00 |
| நன்னிலம் தாண்டவராய சுவாமிகள் அருளிச்செய்த | |
| **கைவல்ய நவநீதம் மூலமும் உரையும்** | 60.00 |
| **வைராக்ய தீபம் மூலமும் உரையும்** | 40.00 |
| **வைராக்ய சதகம் மூலமும் உரையும்** | 80.00 |
| **இலட்சணா விருத்தி மூலமும் உரையும்** | 50.00 |
| **திருமந்திரம்** | 80.00 |
| மாணவர்களுக்காக தேர்வு செய்யப்பெற்ற பாடல்கள் – உரையுடன் | |
| உரையாசிரியர் **முனைவர் கரு. முத்தய்யா** | |
| **பன்னிரு திருமுறையில் தோத்திரம் ஒன்று முதல்** | 150.00 |
| **ஒன்பது திருமுறைகள்** (சுரதாளக் குறியுடன்) | |
| **ஸ்ரீமத் பகவத் கீதை** மூலமும் | |
| **ஸ்ரீ பொன்னம்பல சுவாமி** உரையும் | 200.00 |
| **பட்டனார் அருளிய பகவத்கீதை** (உரையுடன்) | 125.00 |
| **மாதவ மேகலை** - காப்பியக் கவிஞர் மீனவன் | 125.00 |
| **சுவடி பாதுகாப்பு வரலாறு** - முனைவர் ப. பெருமாள் | 160.00 |
| **கோவிலூர் குசுமாஞ்சலி** | 80.00 |
| ஸ்ரீ சேஷாத்திரி சிவனார் அருளிய **நாநா ஜீவவாதக் கட்டளை** | 30.00 |
| **வாழ்வியல் விஞ்ஞானம் - பொ. திருகூடசுந்தரம்பிள்ளை** | |
| 1. **மனிதர்கள்** | 40.00 |
| 2. **இளமை, முதுமை, உடம்பு** | 20.00 |
| 3. **மிருகங்கள், பறவைகள், ஊர்வன,** | |
| **பூச்சிகள், மீன்கள்** | 25.00 |
| 4. **செடிகள் பொருள்கள்** | 30.00 |
| **செயற்கரிய செய்த சிவனடியார்கள்** – முனைவர் அய்க்கண் | 50.00 |
| **கோவிலூர்ப்புராணம்** - முனைவர் நா. வள்ளி | 40.00 |
| **வாழ்வின் பயன்** - ஸ்ரீமெய்யப்ப சுவாமிகள் | 50.00 |



